# சைவசித்தாந்தத் திற

க. வச்சிரவேல் முதலியார்,
*சிறப்பு அலுவலர்,*
சைவ சித்தாந்தத் தத்துவத்துறை.



மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625021.

# சைவசித்தாந்தத் திறவு






க. வச்சிரவேல் முதலியார்,

*சிறப்பு அலுவலர்,*

சைவ சித்தாந்தத் தத்துவத் துறை.






மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,

மதுரை - 625021.

# பொருளடக்கம்

# முன்னுரை

''சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்(கு)
அறிவு நூல்களின் பொருளெலாம் அகப்படுத் தவற்றின்
நெறியெலாம்விளக் கியசிவ ஞானபோ தத்தைக்
குறிசெய் திந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம்''

— விநாயகபுராணம்

சிவஞானபோதம் என்னும் சைவசித்தாந்தத் தலைமணி ஞான நூல் அளவில் மிகச்சிறியது. ஆயினும் மெய்ந் நூல்களின் தெளிபொருள் முழுவதும் தன்கண் அடக்கிக்காட்டி உணர்த்துவது; தமிழ் மறைகளாகிய தேவாரம், திருவாசகம் முதலிய சைவத் திருமுறைகள் பன்னிரண்டினும் உணர்வு அடிநிலையாக ஊடுருவி நிற்கும் தலையாய வாழ்வியல் தத்துவத்தை முறைப்படுத்தித் தொகுத்து உணர்த்துவது. அன்றியும், வேதாந்தம் எனப்படும் உபநிடதங்களின் பொருள் முடிவுகளைச் சிவாகம ஞானபாதப் பொருள் முடிவுகளோடு ஒற்றுமைப்படுத்தி உணர்த்தும் ஆய்வு நூலாகவும் விளங்குகிறது. இக்கருத்துப்பற்றி நோக்கின், இதனை வேதாந்தப் பொருள் ஆராய்ச்சியை மேற்கொண்ட பிரம்ம சூத்திரங்களின் தெளிபொருள் தொகுப்பு எனவும் கொள்ளல் ஆகும். பிரம்ம சூத்திரங்கள் அளவால் அகன்று சென்று பலவகை முடிவு களுக்கும் இடந்தருவனவாய் முடிய, இது திட்பம், நுட்பம், செறிவு, தெளிவு என்னும் இயல்புகளை உடையதாய், உண்மை யின் இணைப்பு நிலையை (Synthesis of truth)த் தெரித்துக் காட்டு-வதாய்த் திகழ்கின்றது.

தலையாய அறிவினர் எல்லாரும் இவ்வரிய பெருநூலைப் போற்றிப் புகழ்ந்துள்ளனர்; கல்லால் நீழலிலிருந்து சொல்லிறந்த உயர் அனுபவ நிலையை உணர்த்தும் தென்முகக்கடவுள் தம் வலக் கையால் மோன முத்திரையைக் காட்டி, அதற்கு இணையாக இடக்

கையில் ஏந்தும் நூல் இந்நூலே என்றும், மோன முத்திரையின் செழுந்தண் விழுப்பொருளே இந்நூலால் விரித்துரைக்கப் படுவது என்றும் பெரியோர் புனைந்து புகழ்வர். வேதங்களின் கன்ம காண்டப் பொருளாராய்ச்சியை எடுத்துக் கொண்டது பூருவ மீமாஞ்சை; ஞானகாண்டப் பொருள் ஆராய்ச்சியை எடுத்துக் கொண்டது பிரம்ம சூத்திரம்; சிவாகமத்தின் சரியை கிரியா யோக பாதப்பொருளை ஆராய்வன பத்ததிகள்; அவற்றின் ஞான பாதப் பொருளாராய்ச்சியை மேற்கொண்டு பொருளொருமை உணர்த்துவது உயர் சிவஞானபோதம் என மாதவச் சிவஞான சுவாமிகள் இந்நூலின் தனிச்சிறப்பை எடுத்துக் கூறுவர். இம் முனிவர் பெருமானை அடியொற்றி உணர்ந்து, இதனைச் சித்தாந்த மீமாஞ்சை எனப் போற்றுவர் இருமொழிப்புலமை உடையோர். உயர்ந்த மறைத் தொடர்களின் உண்மைக் கருத்தைத் துணிதற் கண் முதல்வன் படைப்பாகிய உலகையே எடுத்துக்காட்டாகக் கொண்டு அறிவியலுக்கு மாறுபடாதபடி முடிவுகளைத் துணிதல் இந்த நூலின் தனிச்சிறப்பு எனக் கூறுதல் தகும்.

உலகின் முடிந்த உண்மையைக்கண்டு கூறப்புகுந்த அனைவரும், பெரும்பான்மையும் முடிநிலையும் பற்றி நோக்கும் போது, பின்வரும் இருவகையுள் ஒன்றனைப் பின்பற்றி உள்ளனர்; அடிப்படையில் அருவாய் அறிவில்லதாய் ஓர் ஆற்றல் உண்டு; அஃது உலகென, உயிர் என, பல்வகைப் பொருள் எனத் தோன்றி நின்று மறை கின்றது என்பர் ஒரு சாரார். இவர் உலகவாதிகள் எனப்படுவர். இக்காலத்து அறிவியல் நூலார் துணிவும் இதுவே எனக்கொள்ளு தல் தவறாகாது. நிட்டை நிலையில், தான் ஒருவனே எல்லாம் என்னும் அனுபவம் கேட்கப்படுதலின், அறிவு மாத்திரமாய் ஒரு பொருள் உண்டு; அவ்வறிவின் திரிபே உலகம், உயிர், இறை என மூன்றாய், பின் ஒரோவொன்று பலவாய் அறியப்படுகின்றது என்பர் மற்றொரு சாரார். இவர்கள் பிரம்ம வாதிகள் எனப்படுவர்; முதற்பொருள் திரிந்து தோன்றுகிறது எனக்கூற ஒருப்படாமல், மயங்கியவழிக் கயிறு அரவாய்த் தோன்றுதல்போல, முதற் பொருளே, அறியாமை காரணமாகப் பலவாக உலக வழக்கில் தோன்றும்; தெளிந்த வழிக் கயிறு கயிறேயாய் நிற்றல் போல, வேதப் பெருமொழிகளால் உண்டாகும் பிரம்ம ஞானத்தால் திட சித்தம் உடையார்க்கு அறிவு மாத்திரையாய் உள்ள பிரம்மம்

 

ஒன்றே உள்பொருள்; உலகு மித்தை; ஆன்மாவும் பிரமமும் வேறு அல்ல என்னும் ஒருபொருட் கொள்கையினரும் இவ்விரண்டாம் வகையில் அடங்குவர்.

இனி, மெய்கண்ட முதல்வர் என்ன உணர்த்துகிறார் எனக் காண்போம்; ஒருவனுக்குப் பிறப்பு நிலையில் விளங்கும் ஞானம் முன்னையது; அவனுக்கே நிட்டை நிலையில் உளதாவது பின்னைய ஞானம். இவ்விரண்டும் தெளிவறிவாகிய மெய்யறிவே; ஆதலின், உலகத்தையும் பிரம்மத்தையும் அறிவதாய் உள்ள பொருள், அவ்விரண்டற்கும் வேறாய் உண்டு. அஃது உலகை அறியுங்கால் உலகப் பொருளைச் சார்ந்து அவ்வண்ணமாய் நின்று அறிகின்றது. பிரம்மத்தை உணரும்போது உலகச்சார்பை விட்டு, பிரம்மத்தைச் சார்ந்து அவ்வண்ணமாய் நின்று உணர்கின்றது. ஆதலின், உலகு, உயிர், இறை என முப்பொருள் உள்ளன. இறை தானே அறிந்து உயிர்களை அறிவித்து வருவது; உயிர் அறிவித்தால் அறிவது; உலகு அறிவில்லது. இம் மூன்றனுள் எதனையும் மற்றொன்றன் திரிபு அல்லது காரியம் அல்லது வேறுபடுதோற்றம் எனக் கொள்ளுதல் தவறு என்பது மெய்கண்ட தேவர் துணிபு.

இது பண்டைய தலையாய அறிஞர் துணிபே ஆயினும், இதனைச் சிறப்பாக எடுத்துக் கொண்டு விளக்கிச் சித்தாந்தம் செய்தவர் மெய்கண்டதேவர் என்பதில் ஐயம் இன்று. பொய்ப்பால பொய்யேயாய்க் கழிய மெய்ப்பால மெய்யேயாய் விளங்கித் தோன்றும்படி, இளமுளை ஞாயிறு என நின்று, அவர் உண்மைகளை விளக்கும் திறனை ஓர் எடுத்துக்காட்டால் காண்போம்.

வேதங்கள் உலகை முதல்வனிடத்திலிருந்து தோன்றியது எனக் கூறுகின்றன. அதன் கருத்தைப் பின்வரும் உவமையில் வைத்து விளக்குகின்றார் மெய்கண்ட தேவநாயனார். மழை பெய்தலால் மண் குளிர்கின்றது. அந்நிலத்தில் விதை இருந்தாலன்றி, முளை உண்டா-காது. அதுபோல, முதல்வன் அருள் நிறைவில் மாயை என்னும் முதற் காரணம் உள்ளது, முதல்வன் சங்கற்பித்தவழி, அம்மாயையினின்றும் உலகம் தோன்றுகிறது.

இனி உயிர்கள் பல் வேறு வகையான உடல், இடம், கருவி, நுகர்ச்சி என்னும் இவற்றை உடையவையாகத் தோன்றுவதற்குக் காரணம் அவ்வுயிர்கள் செய்த வினைகள் வேறுபட அமைந்திருத்தலே

ஆகும். முதல்வனுவான் தொழிலிற் சுதந்திரம் உடையவனே ஆவன், அங்ஙனம் ஆக, வினைக்கு ஏற்றபடி படைப்போனை முதல்வன் என்றல் எவ்வாறு பொருந்தும் என்னும் தடை பின்வருமாறு விடுக்கப்படும். குளவியின் முட்டையில் தோன்றும் புழுவே வளர்ச்சி அடைந்து குளவி ஆகும். ஏனைய புழுக்கள் குளவி ஆகா. அதுபோல, உயிர் முதற்பொருளைச் சார்ந்து சிவமாந்தன்மை எய்தும் உரிமை உடையது. குளவி ஆதற்கு உரிய புழுவிற்கு அவ்வப்பொழுது வேண்டப்படும் தட்பவெப்ப நிலை, உணவு முதலியவற்றை அதன் தாய் முறையாகக் கொடுத்து வருகிறது. அதுபோல, உயிர்களின் அறிவு வளர்ச்சிக்குப் பொருந்துமாறு நிலம், உடல் முதலியவற்றை உயிர்களுக்குக் கொடுத்து அவற்றின் பக்குவநிலையை வளர்க்கின்ருன் முதல்வன். இதனுல் அவன் தன்வயம் உடையவனல்லன் எனக் கொள்வது பொருந்தாது அல்லவா? என்கிருர் மெய்கண்டதேவர்.

அவர் அருளிச்செய்த செய்யுள்:

''வித்துண்டா மூலம் விளைத்தவா தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர் வினையால் -வித்தகமாம்
வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து "' என வரும்

தாரகமாம் மண் குளிர்ந்தவழி வித்து அதன் கண் (முன்னரே) உளது ஆக, அம்மூலம் முளைத்தவாறு போல, (மாயை) தாரகமாம் அத்தன்தாள் நிற்றலால், (அவன் சங்கற்பித்த போது) அவர் வினையால் (காரியங்களைத்தரும்) வித்தகம் ஆம்; வேட்டுவன் ஆதற்கு உரிய அப்புழுவிற்கு (அதன்தாய் உதவுமாறு) போல, (தான் சங்கற்பித்து வேண்டிய கருவி உடல் முதலியவற்றை முதல்வன்) கூட்டானே? வினைக்கு ஏற்றபடி கூட்டுதல் பற்றி அவன் சுதந்திரத்திற்கு இழுக்கில்லை எனக்கொண்டு கூட்டி, வருவித்து, உரைத்துக் கொள்க.

தாரகம் = சார்பு, ஆதாரம்.

வித்தின் விளைவை அதற்குச் சார்பாயுள்ள நிலத்தின் மீது ஏற்றி ''நிலம் விளைந்தது'' எனக்கூறுதல் போல, மாயையினின்றும் தோன்றும் தனுகரண புவன யோகங்களை அதற்கு ஆதாரமாய் நிற்கும் முதல்வனிடத்திலிருந்து, அவன் சங்கற்பத்தால் தோன்றின என்பதே வேதத்தின் கருத்து என்று இப்பாட்டால் ஆசிரியர் உணர்த்தும் நுட்பம் உணர்ந்து உளங்கொளத்தக்கது. சித்தாந்த சைவத்தில்

முதல்வன் உலகின் உபர்தானகாரணன் அல்லன்; கேவலம் நிமித்த-காரணனும் அல்லன். மற்றுப் ''பரம ஆதார நிமித்த காரணன்' என்பது கடைப்பிடிக்கத்தக்கது. இங்கு, பொதுவாக வழங்கி வரும் பிரமரகீட நியாயத்தை (வண்டுபுழு உவமையை) அறிவியலுக்குப் பொருந்தாமை பற்றி ஆசிரியர் உடன்படாது, அதனை அறிவியல் முறையில் ஆராய்ந்து திருத்தமுறவைத்துக் காட்டுதலை ஓர்ந்துணர்க.

ஒரு பொருளின் இருப்பையுணர்ந்து, அதனைப் பிற பொருள்-களினின்றும் பிறித்தறிவதே அந்தப் பொருளின் உண்மையை உணர்-தல் எனப்படும். இவை முறையே அளவையாலும் இலக்கணத்தாலும் பெறப்படுபவை. அளவை காட்சி, கருதல், உரை எனமூன்று வகைப் படும். இலக்கணம் பொது வியல்பு, சிறப்பியல்பு என இரண்டு வகைப்-படும். ஓரினமாகிய பல பொருள்களுக்குப் பொது வாய் உள்ள இயல்பு பொது வியல்பு, குறித்த யொருளின்கண் மட்டுமுள்ள இயல்பு சிறப்-பியல்பு. உணவு உட்கொள்ளல், உயிர்த்தல், வளர்தல் என்பவை உயிருள்ள பொருள்களின் பொது வியல்பு; புடைபெயராமை தாவரத் தின் சிறப்பியல்பு. இக்குறியீடு ஆய்வுநூல்களில் வழங்குவது. இனி, மெய்ந்நூல்கள் பிறபொருட்சார்புபற்றி ஒரு பொருளுக்குள்ள இயல்-பைப் பொது எனவும், பிற பொருட்சார்பு பற்றுது குறித்த பொரு-ளின் கண் உள்ள இயல்பைச்சிறப்பு எனவும் வழங்கும். உலகத்தைப் படைத்துக் காத்து நடாத்துவோன் முதல்வன்என்பது முதல்வனுக்குப் பொது வியல்பு. அவன் சிவசத்து என்பது அவன்றன் சிறப்பியல்பு. சிற்றறிவுடைமை, உடம்பை இயக்குதல் ஆன்மாவின் பொதுவியல்பு; அறிவு விழைவு முயற்சியுடைமை அதன் சிறப்பியல்பு. இவற்றுள் பொதுவியல்பு தடத்தம் எனவும், சிறப்பியல்பு சொரூபம் எனவும் குறிக்கப்படும். தடத்தம் — அயலிலுள்ள பொருட்கண் இருப்பது. சொரூபம்—தன் இயல்பு. அதத்துவியாவிருத்தம் என்னும் இலக்கணம் தடத்தத்துள் அடங்கும். அச்சொல்லின் இயல்பு அஃதல்லாதிலிருந்து திரும்புவது என்னும் பொருள்தரும். பிற பல நுட்பங்களை நூலுட் கண்டுகொள்க.

இத்துணைச்சிறப்பு வாய்ந்த சிவஞானபோதத்திற்குப் பலஉரை-கள் இருப்பினும் திருவாவடுதுறை ஆதீன முனிவராக விளங்கிய மாதவச்சிவஞானயோகிகள் அருளிச்செய்துள்ள சிற்றுரையும்திராவிட மாபாடியமுமே திட்ப நுட்பம் செறிந்து நூற்பொருளை உள்ள-வாறு இனிது விளக்கும் செம்மையான உரைகள் ஆகும். அவ்வுரை-

கலைக்கற்று உணர்வதற்குத் துணைசெய்வதே இப்பொழுது எழுதி வெளியிடப்படும் சைவசித்தாந்தத்திறவு ஆகும். இது சிவஞான போதப்பொருள் நிலையை அதன் ஆய்வு முறையோடு கலந்து வினா-விடையாக வைத்துப் பொதுப்பட விளக்குவது. வினா நிகழ்த்துதற்கு இதன்கண் குறிக்கப்பெறும் மனவாசகங்கடந்தார் என்பவர் மெய்கண்ட முதல்வருடைய மாணுக்கருள் ஒருவர். அவர் உண்மை விளக்கம் என்னும் ஞானநூலை வினா-விடையாகச் செய்யுளில் இயற்றியுள்ளார் என்பது நினைவு கூரத்தக்கது. அவர் திருவதிகையில் பிற்காலத்து வாழ்ந்திருந்தவர். சிற்சில கருத்துக்கள் உளவியல்முறை தழுவிச் சுவைபெறச் சேர்க்கப்பெற்றவை எனினும் பெரும்பாலும் வரலாற்று முறையைத் தழுவியே இத்திறவு எழுதப்பெற்றுள்ளது. அரிய நுண்பொருள்விளக்கமும் எளியநடையும் நட்பாய் இயைவன அல்ல என்பதை அறிஞர்கள் அறிவர். இந்நூலை ஆய்வாளர்கள் ஏற்றுப் போற்றிப் பயன்கொள்வர் என்பது என்துணிவு. சிவஞான போதப் பொருள் வரையறைப்பட்டு ஒருவர் உள்ளத்தில் நிலவ வேண்டும் என்னும் விருப்பத்தால் அதன்பொருள்நிலை பின் மீள்பார்வை என்னும் தலைப்பில் கொடுக்கப் பெறுகின்றது. சிவஞான போத சூத்திரங்களும் அவற்றிற்குச் சூத்திர ஆசிரியரே அருளிச்செய்துள்ள வார்த்திகமும் பொருள் நிலைக்குப் பின் கொடுக்கப்பட்டுள்ளன.

இங்ஙனம்

**க. வச்சிரவேல் முதலியார்**

தனி அலுவலர்

சைவ சித்தாந்தத் தத்துவத்துறை,

காமராசர் பல்கலைக் கழகம்,

மதுரை-625021.

மதுரை21,

9-2-76,

# சைவசித்தாந்தத் திறவு



## அருளொளி பெறல்

''போற்றியோம் நமச்சி வாய புயங்களே மயங்குகின்றேன்
போற்றியோம் நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோம் நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோம் நமச்சி வாய சயசய போற்றி போற்றி''.

எழுநூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னே திருவெண்ணெய் நல்லூரில் ஒரு குழந்தை தெருவில் விளையாடிக்கொண்டிருந்தது. அப்பொழுது திருக்கயிலையிலிருந்து ஆகாய வழியில் சென்று கொண்டிருந்த ஒரு முனிவர், தம் செலவு தடைப்படக்கண்டு உள்நோக்கி உணர்ந்தார். முன்னைப் பிறவியிலே, மெய் உணர்வு பெறுவதற்குரிய எல்லாச் சாதனமும் முற்றுப்பெற்ற சாமுசித்தர் ஒருவர் கீழே இருப்பது தெரிந்தது. குழந்தைப்பருவத்தில் இருந்த அவருக்கு ''உறுதி உணர்த்துக'' என்னும் சிவபிரான் ஆணையினையும் உணர்ந்தார். உடனே கீழே இறங்கி வந்து, தாம் திருக்கயிலை அகச்சந்தானத்தில் உணர்ந்திருந்த மெய்யுணர்வுச் சுடரொளியைத் திருநோக்கம், பரிசம், வாசகம் என்றிவற்றால் அக்குழந்தைக்குக் கொடுத்து அருளினார். அக்குழந்தை பொய்ச்சமய உணர்வுகளின் தோற்றங்களை இது, இது எனக்கண்டு நீங்கி, மெய்ப்பொருளைத் தலைப்பட்டு உணர்ந்தமையால், அக்காரணம் பற்றி அக்குழந்தைக்கு ''மெய்கண்டான்'' எனத் தீக்கைத் திருப்பெயர் சூட்டித் தம் வழிச் சென்றனர். அம்முனிவர் பெயர் பரஞ்சோதி என்பது. இவர் தம் ஆசிரியர் சத்தியஞானதரிசனிகள், அவர்தம் ஆசிரியர் சனற்குமாரர்; அவருக்கு ஆசிரியர் திருநந்திதேவர்.

இங்ஙனம் திருவருள் விளக்கம் பெற்ற மெய்கண்டதேவர்,

திருவெண்ணெய் நல்லூரில் உள்ள அருட்டுறை என்னும் திருக் கோயிலிற் சென்று சிவபிரானைத் தொழுதிறைஞ்சினர். பின், அத் திருக்கோயிலின் தென்மேற்கில் உள்ள பொல்லாப் பிள்ளையாரைத் தொழுது அவர் திருமுன்பு இருந்து, தாம் பெற்ற உபதேசப் பொருளைச் சிந்தித்தார். அப்பொழுது அவர் உள்ளத்தில் அக்கால இயல்பும் அதற்கு முன் எழுந்துள்ள வேதம், ஆகமம், அவற்றின் ஆய்வு நூல்கள், செந்தமிழில் எழுந்துள்ள திருமுறைகள் முதலிய வற்றின் பொருட்கோவைகள் (Synthesis of Truth) திரண்டு எழுந்தன. அந்நிலையில், உண்மைப் பொருள்களைப் பிறர் உள்ளங் கொள்ளுமாறு சொற்செய்வாராயினர்.

# மங்கல வாழ்த்து

உலகை நடாத்தும் முதல்வன் ஒருவன் இருக்கின்றான்; அவன் உயிர்கள் தீமை நீங்கி உய்யும் நெறியை முதற்கண் கல்லால மர நிழலில் எழுந்தருளியிருந்து நால்வருக்கு உணர்த்தினான். அவர்களால் உலகில் பற்பல இடங்களிலும் இருந்த உயிர்களின் பக்குவ நிலைக்கு ஏற்பப் பொய்தீர் ஒழுக்கநெறி விளங்குவதாயிற்று.

பின் ஒரு காலத்தில், அறிவால் மிக்க மூவர் உலகியலை நன்கு உணர்ந்து மற்றவர்களை அடக்கி ஆளத் தொடங்கினர்; ஆகாயத்தில் பறக்கும் விமானங்களைச் செய்ய வல்லர் ஆயினர். அவர் விமானங்களிற் சென்று வஞ்சனையில்லாத எளிய மக்களை அழித்துத் துன்புறுத்தினர். அப்போது, துன்புற்ற மக்கள் இறைவனைத் தொழுது தம் இன்னலைத் தீர்க்கும்படி வேண்டினர்.

சிவபிரான் இரக்கம் கொண்டு, நிலமகள் தேராக, திங்களும் ஞாயிறும் உருள்களாக, வேதங்கள் குதிரைகளாக, பிரமன் சாரதியாக, மேருமலை வில்லாக, திருமால் அம்பின் கோலாக, அங்கிக்கடவுள் அதன் முனையாக, வாயுதேவன் அலகாக— இங்ஙனம் வேதத்திற் கூறப்பட்ட எல்லாத் தேவர்களும் தனக்குக் கருவிகளாய் அமைய, தானே முதல்வனாய்ச் சென்றான். இங்ஙனம் சென்றும் எக்கருவியையும் பயன்படுத்தாமல் முப்புரத்து அசுரர்களை நோக்கிப் புன்னகை புரிந்த அளவிலே அவர்கள் எல்லாரும் வெந்து நீறாயினர்; அவர்கள் ஆட்சிக்கு உட்பட்டிருந்தும் சிவவழிபாட்டை விடாது கடைப்பிடித்து வந்த மூவர் (சுசீலன், சுபுத்தி, சுதன்மன் என்போர்) நெருப்பிற்கு இலக்காகாமல் உய்ந்து எதிர் நோக்கி இறைஞ்ச, அவர்களை ஆட்கொண்டருளினன். இன்னும், முன்னர் ஆல் நிழலில் தென்முகக்கடவுள் அடிக்கீழ் இருந்து ஒழுக்க நெறியைக் கேட்டவர்கள், பல ஆண்டுகள் கழிந்த பின், மீளவும் சிவபிரானிடம் வந்து தொழுது விண்ணப்பித்தனர்;

உன்னால் வெளியிடப்பெற்ற வேதங்களை ஆராய்ந்தோம்; ஆயினும் எங்கள் மனம் ஒரு நெறிப்படவில்லை; அவை பலவகையான பொருள்களையும் கூறி, அது அதுவே சிறந்தது என ஆங்குஆங்கு முடித்துக் கூறுகின்றன என்றனர்.

அவர்களுக்குச் சிவபிரான் ஆகமநூல்பற்றி, பொருள் இறை, உயிர், தளை என மூன்று உள்ளன என எடுத்துக்கொண்டு விளக்கிக் கூறினர். ஆயினும் அவர் மனம் ஒன்றுபடவில்லை.

அப்பொழுது சிவபிரான், ஞானபோதகம் சொல்நடை அன்று எனக்கூறி, தாம் இருந்த வியாபக நிலையை உன்னி மோன முத்திரை காட்டி வாய் பேசாதிருந்தான். அவர்கள் உள்ளத்தில் எழுந்த மலைவுகள் (குழப்பங்கள்) நீங்கி உண்மை விளங்கிற்று. இப்படியே சிவபிரான் நந்தியம்பெருமானுக்கும் உண்மையை உணர்த்தியருளினன். இவற்றால், கல்லால் நிழலில் எழுந்தருளியிருந்து மருட்கை நீக்கின முதல்வன் திருவருள் பெற்றால் அன்றிக் கல்வியினால் உண்டாகும் குழப்பம் நீங்காது என்பது எல்லோரும் உணர்ந்து கொள்ளவேண்டிய உண்மை ஆகின்றது. உயிர்கள் ஒருவர் உணர்த்தினால் அன்றி உணர மாட்டாத சிற்றறிவு உடையவை; இறைவன் ஒருவனே இயற்கையுணர்வு உடையவன்; அவன் அறிவித்தால் அன்றி உயிர்கள் உண்மையை அறியமாட்டா.

நம் எதிரே உள்ளவர் பொல்லாப் பிள்ளையார் என வழங்கப்படுகிறார். இவர் சிவபிரானுக்கு மூத்த பிள்ளையார் என அழைத்தற்கு உரிய பெருமையை உடையவர்; பிரணவ வடிவினர், இவரை நினைந்து தொழுவார்க்கு எச்செயலும் எளிதில் கூடும்; இடையூறு என்பதே வராது: அதனால்தான் உறுதி உணர்ந்த அனைவரும் இவரையே முதலில் வழிபடுகின்றனர். நமக்கும் இவர் திரு முன்பு இருந்த போது தானே இக்கருத்துக்கள் எல்லாம் தோன்றுகின்றன என எண்ணினர். எண்ணியபோது கண்களை விழித்து உலகை நோக்கினர். இங்ஙனம் இக்கருத்தெல்லாம் நமக்குத் தோன்றியது திருவருளால்தான்; இவற்றைச் சுருக்கமாக எழுதிவைக்க வேண்டும் என்றும் எண்ணினர்.

உடனே ஏடும் எழுத்தாணியும் கொண்டு, பிள்ளையார் சுழியிட்டு, சிவமயம், திருச்சிற்றம்பலம் என மேலே எழுதி,

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே'' என எழுதினர்.

அப்பொழுது, விநாயகரைக் கும்பிட வந்த ஒருவர் குழந்தை எழுதிக்கொண்டிருப்பதைப் பார்த்து, இவர் திருஞானசம்பந்தரே திரும்பி இங்கு வந்திருப்பதைப்போலக் காணப்படுகிறுர். அவர் மூன்றும் ஆண்டிலேயே இசையோடு உயர்மறையைச் செந்தமிழிற் பாடினர்; இவரோ ஏதோ எழுதுகிறுர் என எண்ணி, குழந்தையை இறைஞ்சி எழுதியுள்ளதைப் படிக்கச்சொல்லி வணங்கிக் கேட்டுக்-கொண்டார். மெய்கண்டார் படித்தார்.

**அன்பர்:** இதன் பொருளைக் கூறவேண்டும்.

**மெய்கண்டார்:** கல்லால் நிழலிலிருந்து சிவபெருமான் முனிவர்களுக்கு ஞான உபதேசம் செய்தார்; மேருமலையை வில்லாகக் கொண்டு முப்-புரங்களை அழித்து உலகிற்கு இன்ப அமைதி வாழ்வைக் கொடுத்தார். அவரால் நம் பொருட்டு அருளப்பட்டவரே பொல்லாப் பிள்ளையார். மெய்யுணர்ந்த நல்லோர் இவருடைய இரண்டு திருவடித் தாமரைகளையும் தங்கள் முடிக்கு அழகாகச் சூடிக்கொள்வர் என்பது பொருள். மலைவு இல்லார் எனக்கொண்டு மலைவு தீர்த்தவர் என உரைப்பினும் அமையும்.

**அன்:** ஏன் இவருக்குப் ''பொல்லார்'' என்று பேர்வந்தது?

**மெய்:** இந்தமூர்த்தி உளிகொண்டு போழ்ந்து செய்யப்படவில்லை; பொள்ளப்படவில்லை. இவர் இந்த வடிவில்தானே தோன்றியவர். சுயம்புமூர்த்தி. இதனுல் இவரைப் பொள்ளாப் பிள்ளையார் என்று சொல்லி வந்தார்கள். பின், தேசவழக்கில், அச்சொல் தேய்ந்து பொல்லாப்பிள்ளையார் என்று ஆகிவிட்டது. மக்களுக்குப் புரியவேண்-டும் ஆதலால் யாமும் அவ்வழக்குப்பற்றிப் ''பொல்லார்'' என்று எழுதினேம்.

**அன்:** பிள்ளையார் திருவடியை எப்படி முடியில் சூடிக்கொள்வது?

**மெய்:** காலால் இட்ட பணியைத் தலையால் செய்வேன் என்னும் வழக்கத்தை நீர் அறிந்திருப்பீர். அதுமட்டும் அன்று. பிள்ளையா-ருடைய வலத்திருவடி எல்லாவற்றையும் இயல்பாக அறியும் அறி-வாற்றலை (ஞானசத்தியைக்) குறிக்கும்; இடத்திருவடி எல்லாம் செய்ய வல்ல அவர் தம் செயலாற்றலை (கிரியா சத்தியைக்) குறிக்கும். மக்கள் தலையில் அறியும் நரம்புகளும், தசைகளை இயக்கும் நரம்புகளும் கூடி

நிற்கின்றன. இதனால், தலை என்பது உயிர்களின் சிறுமையும் குற்றமும் உள்ள அறிவாற்றல் செயலாற்றல்களைக் குறிக்கும். தலையில் திருவடிகளைச் சூடிக் கொள்ளுதல் என்பது உயிர்களின் சிற்றறிவும் சிறுசெயலும் முதல்வனுடைய பேரறிவிலும் பேராற்றலிலும் அடங்கி, அவன் திருவுள்ளத்தின்படி நடக்கப்பெறுதல் என்பதே ஆகும். இதுவே அதன் உயர்ந்த பொருள்.

**அன்:** அடிகள் எம்மனோர் அறிவுக்கோணலை நீக்கி ஆட்கொள்ளுதற்பொருட்டுக் குழந்தை வடிவில் வந்துள்ள பரம்பொருளே என்பதை உணர்கிறேன். இப்படி ஏதாவது ஐயம் வந்தால் அவ்வப்போது கேட்டுக்கொள்வேன். உண்மையைத் தெரிவித்தருள வேண்டும்.

**மெய்:** அப்படியே ஆகுக!

# முதற் சூத்திரம்

அடுத்த நாள் மெய்கண்டதேவர் பிள்ளையார் திருமுன்பு நிட்டை கூடி நின்றார். நிட்டை கலைந்து உலக முகப்படும்போது அவர் சிந்தனை பின்வருமாறு சென்றது. இவ்வுலகம் என்றும் உள்ளதாகத் தோன்றுகிறது. ஆயினும், ''அசத்தே முதற்கண் இருந்தது, அதனினின்று சத்து உளதாயிற்று'' 1, சத்தே முதற் கண் இருந்தது, அஃதொன்றே அத்விதீயம் 2; விரிந்தனை குவிந் தனை விழுங்குயிர் உமிழ்ந்தனை 3; என்று இவ்வாறு வடமொழி, தென்மொழி இரண்டினுமுள்ள பெருநூல்கள் கூறுகின்றன. அவை ஒன்றோடு ஒன்று மாறுபடுவனவாகவும் காணப்படுகின்றன. இத னாலல்லவா பல மதங்கள் எழுந்தன! சிலர், உலகு என்றும் இப்படியே இருக்கும் என்கின்றனர்; சிலர் இஃது ஒரு காலத்தில் முற்றி-லும் அழிந்து, பின் ஒரு காலத்தில் தோன்றும் என்கின்றனர்; சிலர் இவ்-வாறு உலகை நடத்தும் ஒரு கடவுள் இருக்கிறார் என்கின்றனர்; சிலர் உலகம் தானே தொழிற்படும்; ஒரு முதல்வன் உளன் எனக்கொள்வது வீண் என்கின்றனர். இவைபற்றிய உண்மையை அளவைமுறையில் சொல்லிவைத்தால், தக்கவர்கள் சாவதானமாக எண்ணி உண்மை உணர்தல் கூடும் அல்லவா! ஆதலினால் சொல்லி வைப்போம்! இவ்-வுலகம் முழுவதும் அழிவதை ஒருவர் பார்க்க முடியாது. ஆயினும், இதில் உள்ள பொருள்களும், இதன் பாகங்களும், உடம்போடு கூடிய உயிர்களும் தோன்றுவதையும், நின்று வளர்வதையும், பின் தேய்ந்து மாய்வதையும் காண்கின்றோம். இச்செயல்கள் காரணகாரிய நியதிக்கு உட்பட்டு, ஒழுங்கு முறையில் நிகழ்கின்றன. பொதுவாக, நம் அறிவிற் படுவன எல்லாம் தோன்றி நின்று மறைவனவே. இதனால் இவ்வுலகை உள்பொருள் என்று கொள்ளவேண்டும்; மயங்கியபோது கயிற்றில் தோன்றும் அரவுபோல் இது மித்தை என்றோ, இல்பொருள் என்றோ கூறுதல் பொருத்தம் அன்று. இதன் ஒவ்வொருபாகமும் ஒவ்வொரு காலத்தில் இனம் பற்றி ஒருங்கே தோன்றுதலும், ஒருங்கே அழிதலும்

1. தைத்ரீயம், ii, 7, 1.
2. சாந்தோக்கியம், vi, 2, 1.
3. தேவாரம், திருஞா, 2, 30, 2.

காணப்படுகின்றன. கார்காலத்தில் பயிர்களும் ஒருவகை சிற்றுயிர்களும் ஒருங்கே தோன்றுகின்றன; வேனிற் காலத்தில் அவை ஒருங்கே அழிகின்றன; ஆதலினல், இவ்வுலகம் முழுவதும் ஒருகாலத்தில் தோன்றியது எனவும், பின் ஒருகாலத்தில் ஒருங்கே அழியும் எனவும் ஊகித்து உணர்தல் பொருத்தமே. உயிர்கள் எல்லாம் இவ்வுலகால் பயன் எய்துகின்றன. அவற்றின் உடம்பு வளர்தற்கு ஏற்றபடி அறி-வும் வளர்கிறது. எல்லாமக்களுக்கும் அறியாமை அறிவு என்பன இருளும் ஒளியும் போல மாறி மாறி வரினும், அறியாமை தேய்தலும் அறிவு மேம்பட்டு வருதலும் கண்கூடு. யான் எனத் தனை நோக்கி அறியும் அறிவே ஆன்மா அல்லது உயிர் எனப்படும். அதன் அறிவை மறைப்பதாய் ஒரு பொருள் உண்டு. அதனை இருள், மலம், மாசு எனக்கூறலாம். அம்மாசு நீங்கி உயிர்கள் தம்மை உணர்ந்து தலைவனையும் உணர்ந்து, தலைவனைச் சார்ந்து இன்புறுதற் பொருட்டே உலகப்படைப்பு உளதாயிற்று. உலகைப் படைப்போன் எனவும், காப்போன் எனவும், அழிப்போன் எனவும் கடவுள் மும்மூர்த்திகளாகப் பேசப்படினும் எல்லாவற்றையும் ஒருங்கே அழிக்கும் முற்றழிப்புக் கடவுள் ஒருவனே முதல்வன் எனக்கொள்வதே பெரியோர்களது துணிபு. இவ்வாறு, உலகிற்கு முதல்வன் சிவபிரானே என முடித்துக் கூறுவதே ஆகமங்களின் துணிபு. இதனை உணர்த்தும் ஒரு சூத்திரம் செய்வோம் என எண்ணிப் பின்வரும் சூத்திரத்தை எழுதி வைத்தனர்:

அவன் அவள் அதுவெனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனர் புலவர்.

அன்பர் அன்றும் வந்து இச்சூத்திரத்தைச் சொல்லக் கேட்டு மேலும் வினவினர்:

**அன்**: இச்சூத்திரப் பொருளைத் தெரிவித்தருள வேண்டும்.

**மெய்**: காணப்படும் உலகம் ஒருவன், ஒருத்தி, ஒன்று எனச் சுட்டி அறியப்படுவதாய் உள்ளது. இக்காரணம்பற்றி இஃது உள்-பொருளாய், தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலையும் உடையது என்பது எளிதின் விளங்கும். இதுதானே தோன்ருது. ஒருவன் தோற்றுவிக்கத் தோன்றியதே ஆம். தான் தோன்றிய போது, முன் தன்னை ஒடுக்கிக்கொண்டு ஒருவனய் நின்ற முதல்வனிடத்திலிருந்து

அவன் சங்கற்பத்தினலே உளதாயிற்று; எதற்காக என்றால், உயிர்கள் பிறப்பு எய்தி இன்பத்துன்பம் நுகர்தலால், தம்மைப் பிணித்துள்ள மலம் நீங்கித் தூய்மை எய்துதற்பொருட்டு. இவ்வாறு ஆதல்பற்றி, அந்தத்தைச்செய்யும் கடவுள் ஒருவனே முதல்வன் என்று அளவை நூல் உணர்ந்தோர் துணிந்து கூறுவர் என்பது இதன் பொருள்.

**அன் :** பொருள் விளங்குகிறது; எனினும் என் ஐயம் தீர்தற்குச் சில வினவுகின்றேன்; அவை என்றது எவற்றை?

**மெய்:** அவை என்பது தொகுதி எனப் பொருள்படும். அதற்கு அறிவுடையனவும், அறிவில்லனவுமாயுள்ள உலகத்தொகுதி என்பது பொருள்.

**அன்:** அவன் அவள் அது எனும் எனச் சுட்டுப்பெயர்களால் அடை கொடுத்ததற்கு ஏதேனும் கருத்து உண்டோ?

**மெய்:** உண்டு; அவன் அவள் அது என இவ்வாறு அறியப்படுகின்ற என்ற அடைக்கு மூனறு பொருள் கொள்ளலாம். உலகம் அவயவப்பகுப்பு உடையது என்பது முதலாவது பொருள்; அது பலவாய்ச் சடமாயுள்ளது என்பது இரண்டாவது பொருள்; அது சுட்டி அறியப்-படுவது என்பது மூன்றாவது பொருள். இவற்றுள் மூன்றாவது பொருளே முடிந்த சிறந்த பொருள் என்று உணர்த்தும் பொருட்டு அவ்வாறு சுட்டி அடைகொடுத்தோம்.

**அன் :** தோன்றிய திதி என்னமல் தோற்றிய திதி என்றதன் கருத்து என்ன?

**மெய்:** உலகம் உள்பொருள்; அது தோன்றியது அன்று, தோற்றியது. தானே தோன்றாமல் ஒருவன் தோன்றும்படி செய்யத் தோன்றியது என்பது கருத்து. குடம் ஒருவனற்செய்யப்பட்டுத் தோன்றுகிறது; வீடு ஒருவனல் கட்டப்பட்டுத் தோன்றுகிறது; சித்திரம் ஒருவனல் எழுதப்பட்டுத் தோன்றுகிறது; நூல் ஒருவனல் இயற்றப்பட்டு நிலவு-கிறது. இவைபோல உலகமும் ஒருவனல் இயற்றப்பட்டு விளங்குகிறது என்பது கருத்து.

**அன்:** ஒடுங்கி என்பதன் விளக்கம் தெரிய அவாவுகிறேன்.

**மெய்:** ஒடுங்கி என்பது ஒடுங்குதற்கு இடம் எனப் பொருள்படும்; அதாவது ஒடுக்கத்தைச் செய்யும் கடவுள் என்பதாம். தோற்று

விக்கப்பட்டுத் தோன்றிய உலகம் எங்கிருந்து உளதாகும் என எழும் வினவிற்கு விடை ஒடுங்கியினின்றும் உளது ஆகும் என்பது. ஒடுங்கி-யின் என இன் உருபு விரித்தால், ஒடுங்கி ஏதுவாக, அவனினின்றும் உள தாகும் எனப் பொருள் தரும். இன் உருபு ஏது, நீக்கம் இருபொருளும் தருகிறது. இங்கு மலத்து என்பது மலத்தால் எனப் பொருள்படும்; மலத்தால் உலகம் உளதாயிற்று எனின், உயிர்களுக்கு மலம் நீங்குதற் பொருட்டு உலகப்படைப்பு உளதாயிற்று என்பது கருத்து.

**அன்:** விழுங்கு உயிர் உமிழ்ந்தனை எனத் திருஞான சம்பந்தரும், போற்றியருளுக நின் ஆதியாம் பாதமலர், போற்றியருளுக நின் அந்தமாம் செந்தளிர்கள் என மாணிக்கவாசகரும் கூறியுள்ளவற்றைத் தான் சுவாமிகள் இவ்வாறு அமைத்திருப்பதாகத் தெரிகிறது. ஆயினும் சடப்பொருள்கள் மாயையினின்றுந்தோன்றும் என்றுதானே கூறவேண்டும்? இங்கே அவை ஒடுக்கும் கடவுளினின்றும் தோன்றும் என்றது பொருந்துமா? என அறிய விழைகின்றேன்.

மெய்: நீர் கூறியது உண்மைதான். ஆயினும் இருவேதங்களிலும் (தமிழ் வடமொழி) பரம்பொருளினிடத்திருந்து உலகந்தோன்றுகிறது எனவும், அங்ஙனம் தோன்றும்படி அப்பொருள் சங்கற்பிக்கின்றது, விழை கின்றது எனவும் சொற்றொடர்கள் உள்ளன. அவற்றின் கருத்தை அறிவுறுத்தற் பொருட்டே யாமும் அங்ஙனம் சூத்திரம் செய்தோம். அது கிழங்கினின்றும் தோன்றும் தாமரையை அதற்கு ஆதாரமாய் (சார்பாய்) உள்ள சேற்றிலிருந்து தோன்றியது என்னும் பொருள் தரும், பங்கயம் எனும் சொல்லால் குறிப்பதை ஒக்கும். பங்கம்சேறு; ஜ-தோன்றுவது. வயல் விளைந்தது எனின், வயல் ஈரம் உடையதாய் அமைய, அதன் கண்கிடந்த வித்து விளைந்தது என்பதே கருத்தாம். வயல்தானே பயிராக மாறுதல்லவா? இவைபோல, இறைவன் திரு-வருள் மாயைக்குச்சார்பாய் நின்று சங்கற்பித்தபோது மாயையினின் றும் உலகு உண்டாகும் என்பதே உயர்ந்த நூல்களின் கருத்து. இதனல், முதல்வனைப்பரம ஆதார நிமித்தகாரணம் என்பதே அறிவுக்குப் பொருத்தமாம் அவனை உலகிற்கு உபாதானம் (முதற் காரணம்) எனல்பொருத்தம் அன்று.

**அன்:** ஒடுங்கியினின்றும் உலகம் உளதாம் என்றதனுலே, முற்றழிப்புக் கடவுளே முதல்வன்; பிரம விட்டுணுக்கள் முதலாகப் பிறந்து இறந்து வரும் உயிர்கள் எதுவும் முதல்வன் எனக்கொள்ளப்படாது என்பது

விளங்குகிறது. மேலும், மலத்தால் உளதாகும் என்றதனுனே, உயிர்கள் இருள் மலப்பிணிப்பு உடையவை; அவை அதன் பிணிப்பிலிருந்து விடுபடவே உலகப் படைப்பு மேற்கொள்ளப்பட்டது என்பதும் விளங்குகிறது. உலகத்தை ஒருமுறை படைத்த முதல்வன் அதனை ஏன் அழித்து மீளவும் படைக்க வேண்டும்?

**மெய்:** பாடசாலைகள் மாணுக்கர் அறியாமை நீங்கி அறிவு வளர்ச்சி பெற அமைந்துள்ளன. மாணுக்கர் ஒரே காலத்தில் எல்லாப் பாடங்களையும் கற்க முடியாது. அதனுல், நாடோறும் ஒய்வு, வாரந்தோறும் ஒய்வு, பொழுது தோறும் ஒய்வு, ஆண்டுதோறும் ஒய்வு என்று இப்படி ஒய்வு கொடுக்கப்படுறது. இதனுல்தான் அவர்கள் கேட்டுணரும் கல்வி அவர்கள் சிந்தையில் உணர்வாகப் பரிணமித்துப் பயன் தருகிறது. அதுபோல, உயிர்களுக்கு உள்ள இருள் மலநோய் நீங்குவதற்கு, முதல்வன் மாயையினின்றும் உடம்பு, உடம்பில் உள்ள அறிவுப்பொறி, தொழிற்பொறி, மனம் முதலிய கருவிகள், உலகம், நுகர்ச்சிப் பொருள் என்னும் இவற்றைப் படைத்துக் கொடுக்கின்முன். நள்ளிரவில் இருந்தார்க்கு விளக்கு கிடைத்தாற் போல, இவற்றைப் பெற்ற உயிர்கள் செயற்படுகின்றன. அச்செயல்கள் நல்வினை தீவினை என இருவகைப்பட்டு, இன்பத்துன்ப நுகர்ச்சியைத் தருகின்றன. இந்நுகர்ச்சியே மலநோய்க்கு மருந்து. அந்நுகர்ச்சிக்கண் விருப்பும் வெறுப்பும், இன்பத்தைப் பெருக்கித் துன்பத்தைக் குறைத்துக் கொள்ளும் முயற்சியும் உளவாகின்றன. இம்முயற்சியே மேல்வினைக்குக்காரணம். இப்படிப் பழவினை நுகர்ச்சியும் அந்நுகர்ச்சிக்கண் மேல் வினையும் எனத்தொடர்ந்து வரும் காலத்து, அவ்வப்பொழுது உயிர்கள் இளைப்பாறுவதற்கு உளவாவனவே மறப்பு, உறக்கம், இறப்பு என்பன; ஊழிகளும் இக்காரணம் பற்றியே வைக்கப்படுகின்றன. இதனைச் சுருங்கக்கூறின், மூலமல பரிபாகத்திற்குப் படைப்பும், கன்மமல பரிபாகத்திற்கு அழிப்பும் வைக்கப்பட்டன எனல் பொருந்தும். அழிப்பு இளைப்பாறுவதற்கும், படைப்புச் செயல் செய்து அறிவை வளர்த்துக் கொள்வதற்கும் உள்ளன.

**அன்:** இதுவரையில் உலகப்படைப்பின் நோக்கத்தை யாரும் இவ்வளவு தெளிவாக உரைத்ததில்லை. வேதவியாசரும் இதற்கு விடை கூருமல் தான் விட்டுவிட்டார். அவர் ‘உலகத்திற் போல விளையாட்டு மட்டுமே’ (லோகவத்துலீலா கைவல்யம்) எனச்

சூத்திரஞ்செய்து அதனோடு விட்டுவிட்டார். கடவுள் உலகைப் படைத்ததற்கு நோக்கம் ஒன்றும் கூற முடியாது; விளையாட்டாகவே படைத்தார் என்றார்.

**மெய் :** ஆம்: நூல்கள் பொதுவாக உண்மைகளை உணர்த்துவனவும், சிறப்பாக உணர்த்துவனவும் என இருவகைப்படும். இவற்றில் முன்னையதைச் சார்ந்ததே பிரம்ம சூத்திரம். வேதம் பொது என்பதும் இக்கருத்துப் பற்றியே. இவையெல்லாம் சாதாரண மக்கள் ஓரளவு உண்மையை அறிந்து கொள்ளுதற்பொருட்டு எழுந்தவை. இனி, சிவாகமங்களும் திருமுறைகளும் திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் என்னும் நூல்களும் சத்திநிபாதம் எய்திய உத்தமர்களுக்கு உரி-யவை. மாணிக்கவாசகர் 'காத்தும் படைத்தும் கரந்தும் விளை-யாடி' எனப் பின்னர்க் கூறி, முன்னர், ''ஐயாநீ ஆட்கொண்டரு-ளும் விளையாட்டின், உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்-தொழிந்தோம்'' 6 எனக்கூறுதலின், யாம் கூறிய கருத்துப் பழமை யானது என்பது விளங்கும்.

இங்கு விளையாட்டு என்றது எளிதிற் செய்யப்படுவது என்னும் பொருளையுடையது; வீண் செயல் என்னும் கருத்தில் அஃது ஆளப்படவில்லை. உய்வார்கள் உய்யும் வகை என்றது புல்லாகிப் பூடாய் இப்படிப் பல பிறப்பெடுத்து மக்களாய், அப் பிறப்பில் முறையே புறச்சமயமும், வைதிகச்சமயமும் சார்ந்து அறிவுநுணுகிச் சைவ சமயம்சாாந்து சரியை கிரியையோகமுதிர்ச்சியும் பெற்று ஞானத்தாற் சிவனடியை நணுகுதல். திருவெம்பாவையில் உரையாடும் பெண்கள் இறைவனை உணர்ந்து அவனுக்கு ஆட்பட்டு ஒழுகி, மேல் பிறவியை வேண்டாதவர்கள் என்பது அறிக.

**அன் :** இவையெல்லாம் அரிய கருத்துக்கள். எனக்கு இப்போது வரும் ஐயம் இவ்வளவும் இரண்டாவது அடியிலே முடிந்திருக்க, மேலும் ''அந்தம் ஆதி'' என முடித்துக் கூறியதன் கருத்து யாதோ என்பது.

**மெய்:** நல்ல வினா! ஒடுங்கியினின்றும் உளதாம் என்றமையால், முதல்வனுவான் ஒவ்வொரு தொழில் செய்வோர் எனப்பட்ட அயன் மால்களைக் கடந்து முத்தொழிலும் இயற்றுவோன், முற்றிலும் ஒடுக்கி அவற்றை மீளத்தருவோன் என்பது மட்டும் தான் பெறப்-படும்.

---

6: திருவெம்பாவை 12, 11

இனி, திருக்கோயில் அமைத்தல் முதலிய செயல்களில் பலருங்கூடி அச்செயலை முடித்தலின், அதுபோல, பல்லோரும் சேர்ந்து உலகைப் படைப்பர் எனக் கொள்வோம் என்பர் அநேகேசுரவாதிகள்: அவர் கருத்துப் பொருந்தாது என்று உணர்த்த எழுந்ததே மூன்றும் அடி.

திருக்கோயில் முதலியவற்றைச் செய்வோர் பலராயினும், அவர் பலரும் தலைமைத் தச்சன் ஒருவன் ஆணைவழி நின்றே செய்வர். அதுபோல, உலகும் முதல்வனது ஆணைவழியே உளதாவது அன்றிப் பலர் செயல்களின் காரியமாகாது. உயிர்கள் தாம் தாம் செய்வதாகக் கருதினும் அவை எல்லாம் முதல்வன் ஆணை வயப்பட்டனவன்றித் தம் வயம் உடையவை அல்ல. ஆதலால் அந்தமே ஆதி, முற்றழிப்பைச் செய்யும் கடவுளே முதல்வன்; ஏனையர் சுட்டறிவுடை-யர் ஆதலால், அவர் அனைவரும் அக்கடவுளின் ஆணைவழி நிற்போரே ஆவர் என்பது மூன்றாவது அடியின் பொருள்.

சுவேதாசுவதர உபநிடதத்தில், ''தன் ஆளும் ஆற்றல்களால் எல்லாவற்றையும் ஆளும் உருத்திரன் ஒருவனே, அவன் இரண்டாம் பொருளாக நிற்பான் அல்லன்'' 7 என்றது இக்கருத்தே பற்றி எழுந்தது ஆகும். மாணிக்கவாசகரும் ''ஒருவன் என்னும் ஒருவன் காண்க'' 8 என்றது போற்றி உணரத்தக்கது. ஒன்று, ஒருவன், சத்து என்னும் சொற்கள் பரம்பொருளைக் குறிக்க வேதத்தில் ஆளப்-படும் சொற்கள்.

பரமசிவனால் உணர்த்தப்படும் இந்நூற்பொருளை உணரப்புகும் போது, உலகியல்பற்றிச் சில உண்மைகள் கடைப்பிடிக்கத் தக்கவை. அவற்றையும் உனக்கு விளக்குவோம். முதலாவது உண்மை சற்-காரியவாதம் என்பது. சத்=உள்ளது; காரியம்=ஆக்கப்பட்டது; வாதம்=பேச்சு. ஒருபொருள் ஆக்கபடுவதற்கு முன்னும், அதன் காரணத்தில் ஆற்றல் உருவில் உள்ளது என்னும் பேச்சு சற்காரிய வாதம் எனப்படும். எள்ளில் நெய் முன் உள்ளமையின், அதனினின்று எண்ணெய் எடுக்கப்படுகின்றது; மணலில் எண்ணெய் எடுக்க முடி-யாது. பஞ்சில் நூல் நூற்கலாம்; மணலில் நூற்றல் இயலாது. இங்ஙனம் காரணத்திற்கும் காரியத்திற்கும் ஒருதொடர்பு இருத்தல்வேண்டும்

---

7. III 2
8. திருவண்டப்பகுதி 43.

என்பதே அவ்வாதம். ஆற்றல் வடிவு காரணம், விளக்க வடிவுகாரியம் (சத்திரூபம் காரணம், வியத்திரூபம் காரியம்) என இவ்வாதத்தின் முடிந்த பயனைக்கொள்ளலாம். ஒருகாரணம் பிறிதொன்றன் சேர்க்கையால் தன்நிலை திரிந்து காரியம் ஆகலாம், பால் தயிராவது போல. இது பரிணாமம் எனப்படும். அன்றிக்காரணம் வேறு வடிவை அடைந்து காரியம் ஆகலாம்; துணி குடையாக வடிவெடுப்பது போல. இது விருத்தி எனப்படும். இனி, ஒருவர் தம் பிறப்புக் கட்டத்தில் (Horoscope) சனி இருந்த இடமும் பார்த்த இடமும் பயன்தரா; அல்லது, பயன் குறையும் என்பர் சோதிட நூலார். அதுபோல, சுட்டறிவு உடைமையும், சுடடறிவால் அறியப்படுதலும் குற்றம் உடையன. ஒருபொருளைத் தனக்கு வேறாக இஃது என அறிவதே சுட்டறிவு. இப்படி உலகப்பொருள் எல்லாம் அறியப்படுவன. அவை அனைத்தும் நில்லாது அழிவன; அதாவது, தோன்றி நின்று அழிவன. இறைவன் நிலைத்த பொருளாதல் பற்றியே சுட்டறிவால் அறியப்படு-வதில்லை. இவ்வுண்மை அவன் அவள் அது எனும் அவை மூவினைமை-யின் என்றதில் அமைக்கப்பட்டுள்ளது. சுட்டி அறியப்படும் உலகத் தொகுதி தோற்றம் நிலை கேடு என்னும் முத்தொழில் உடைமையால் என்பது அதன்பொருள். இங்குள்ள அடை கருத்துடை அடை. அஃது உலகத்தொகுதி மூவினை உடையது எனத்துணிவதற்கு உரிய ஏதுவைக் குறிக்கின்றது. இங்ஙனம் ஒருகருத்தை அதற்கு உரிய வாய்பாட்டாற் கூறாது, வேறு ஒரு மொழியில் கூட்டிஉரைப்பதை இலக்கணநூலார் உடம்பொடு புணர்த்துச்சொல்லுதல் என்பர். இனி, சுட்டறிவுடைய பொருளெல்லாம் தன்வயம் உடையவை ஆகா;சுட்டுணர்வு இல்லாது எல்லாவற்றையும் அறிந்தாங்கு அறிந்துநிற்கும் முதல்வன் தன்வயம் உடையன். சுட்டுணர்வுடைய உயிர்களெல்லாம் அஃது இல்லாத முதல்வன் வழி நடப்பனவேயன்றித் தமக்கெனச் சுதந்திரம் இல்லா-தவை எனக்கொள்க. இதனால் எல்லாவற்றையும் தன்விருப்பின்படி நிகழ்த்துவோன் முதல்வன் ஒருவனே என்பது விளங்கும்.

**அன்:** வணக்கம்; சென்று வருகிறேன்.

## இரண்டாம் சூத்திரம்

மறுநாள் மெய்கண்டதேவர் பொல்லாப்பிள்ளையார் திருமுன்பு நிட்டைகூடியிருந்தார், நிட்டைகலையும்போது, பின்வரும் கருத்துக்கள் அவர் உணர்வில் எழுந்தன: நேற்று இயற்றிய நூற்பாவில்உலகு தான் ஒடுங்குதற்குக் காரணமான முதல்வனிடத்தில் இருந்து, அவன் விழைவாற்றலால் தோன்றிற்று என்று கூறினேம். அப்படியே உண்டாகும்போது எவ்வாறு உளதாகும் எனவும், உளதாகி என்ன செய்யும் எனவும், அப்படி அஃது உண்டாகித் தொழிற்படும்போது, முதல்வனுக்கும் அதற்கும் உள்ள சம்பந்தம் என்னை எனவும், அவன் செய்யும் தொழில்களுக்குக் கருவியாய் நிற்பது யாது எனவும் பலவாறு வினக்கள் எழும். அவற்றிற்கு விடைதரும்படி ஒருநூற்பாவைச் செய்து வைப்போம் என்று எண்ணினர். திருவருள்வழி நின்று பின் வருமாறு இரண்டாம் சூத்திரத்தை எழுதினர்.

அவையே தானே யாய்இரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்க மின்றி நிற்கு மன்றே
என்பது சூத்திரம்.

அன்பர் அன்றும் வந்து, இன்னும் ஏதேனும் நல்ல கருத்துக்களை உங்களிடம் கேட்டுத்தெரிந்து கொள்ளலாம் என்று வந்தேன் என்றார்.

மெய்: வேத ஆகம முடிவுகளாகிய ஞானபாதப்பொருளைப் பிரம்ம சூத்திரத்தை ஒட்டிப் படிக்கப் புகுவோர் பலவேறு கொள்கைகளை உடையர் ஆயினர்; அதற்குப் பாடியம் வகுத்த சீகண்டர், சங்கரர், இராமாநுசர் என்பாரும் ஒரு வழிப்பட உரை எழுதவில்லை. அதனல், மக்கள் உண்மை காணமாட்டாது இடர் உறுகின்றனர், அவ்விடர் நீங்கித் தெளிவு பெறுதற் பொருட்டுச் சுருக்கமாக ஒரு நூலே செய்துவிடக் கருதி இன்று இரண்டாவதாக ஒரு நூற்பா இயற்றியுள்ளோம் எனச் சொல்லிச் சூத்திரத்தைப் படித்துக் காட்டினர் மெய் கண்டதேவர்

**அன்:** இதன் திரண்டபொருளை அடிகளே கூறி அருளல்வேண்டும்.

**மெய்:** மேலைச் சூத்திரத்தில் அந்தம் என்று கூறிய முற்றழிப்புக்கடவுள் உயிர்களைப் படைத்து நடத்தும்போது அவ்வுயிர்களே யாயும், அவற்றின் வேறாயும், அவற்றோடு உடனாயும் நிற்பன்; அவன் ஆணை எனப்படும் அருளாற்றலின்வழி உயிர்கள் வினைகளைச் செய்தும், அவற்றின் பயனை நுகர்ந்தும், நடு, மேல், கீழ் உள்ள உலகங்களில் இறந்தும் பிறந்தும் இடையறாது உழன்று வரும்; இவ்வாறு அவை பிறப்பிறப்புக்களை மேற்கொள்ளும்படி முதல்வன் தன் அருளாற்றலி-னின்றும் நீங்குதலின்றி ஒற்றித்து நிற்பன் என்பது சூத்திரத்தின் பொருள்.

**அன்:** முதல்வன் உலகத்தோடு ஒன்றாய், அதனின் வேறாய், உடனாய் இருக்கின்றான் என்பதை விளக்கியருள வேண்டும்.

**மெய்:** பொருள் தன்மையால் உயிர்களும் வேறே, இறைவனும் வேறே; எதுபோல் எனின், வியாழன், வெள்ளி முதலிய கோள் மீன் களும் வேறே, ஏனை விண்மீன்களும் வேறே ஆதல்போல. முன்னையவை ஞாயிற்றின் ஒளியால் மின்னுவன, பின்னையவை தாமே தம் ஒளியால் மின்னுவன. உயிர்கள் அறிவிக்க அறிவன, முதல்வன் தானே எல்லாம் அறிந்து உயிர்களுக்கு அறிவிப்பவன். இதனால் வேறு என்பதன் கருத்து விளங்கும்.

இனி, இங்ஙனம் இறைவன் உயிர்களின் வேறாயினும், அவற்றிற் கலந்து அவையே என்னும்படி ஒன்றி நிற்கின்றான். எது போல எனின், உடலுக்கு வேறாகிய உயிர் அதன்கண் இடங்கொண்டு பிரித்தறியாதபடி கலந்திருத்தல் போல. மேலும், அவன் உயிர்-களை அறிவித்தும் செயற்படுத்தியும் வரும்போது அவற்றோடு உடனாகி நிற்கின்றான். எது போல எனின், கண் ஒரு பொருளைக் காணும்போது, உயிரின் அறிவு அதனை இடங்கொள்வதோடு, அதனை அவ்வப் பொருளின்மேல் செலுத்திக் காணச் செய்து தானும் அப்பொருளைக் காண்கின்றது; அதுபோல என்க. இங்ஙனம் இரண்டு பொருள் ஒரு தன்மைப்பட்டு ஒன்றே போலப் பிரித்து அறியவாராது நிற்கும் நிலையை வேதங்கள் அத்து விதமென்ற சொல்லாற் குறிக்-கின்றன. இதனை இரண்டன் ஒருமை எனக்கூறலாம்.

**அன்:** இறைவனுக்கும் உயிர்க்கும், அல்லது இறைவனுக்கும்உலகிற்கும் உள்ளதொடர்பைத் தாங்கள்தான் முதன் முதலாக வெளிப்படுத்து கிறீர்களா, அல்லது முன்னரே யாரேனும் எடுத்தோதி உள்ளனரா என அறிய விழைகின்றேன்.

மெய்: திருஞானசம்பந்தர் இவ்வாறு கூறியுள்ளனரே!

> ஈருய்முத லொன்ருயிரு பெண்ஆண்குண மூன்ருய்
> மாருமறை நான்காய்வரு பூதம் அவை ஐந்தாய்
> ஆருர்சுவை ஏழோசையொ டெட்டுத்திசை தாருய்
> வேருயுடன் ஆனுனிடம் வீழிம் மிழலேயே''.

என்னும் திருப்பாட்டைக் கேட்டிருப்பீரே!

அன்: தமிழ் மறையின் தலேயாய தன்மையை அடிகள் போன்ருர் விளக்கினுல் அன்றிச் சிற்றறிவு உடைய எமக்கு விளங்குவதன்று. சூத்திரத்தின் முதற்கூற்றை ''அவையேயாய்'', தானேயாய், ''அவை யேதானே ஆய்' என இரண்டு பொருள் ஒருங்கே அமைய உய்த்-துணர வைத்திருப்பதாகத் தெரிகின்றது. அங்ஙனம் அன்றி ''அவையே வேறுடன் ஆயிரு விஃனயின்'' என முதலடியை அமைத் திருப்பின், பொருள் இனிது விளங்கும் அல்லவா?

மெய்: அது பொருத்தம்தான். ஆயினும், யாம் இச்சூத்திரத்தில் தெரிவிக்கப் புகுவது மகாவாக்கியப் பொருள். ஆதலினுல் அவ்வாய்-பாடுபற்றியே சூத்திரம் இயற்றினும்; அன்றியும், பின்வரும் ஒரு சூத்திரத்தை ''அவனேதானே ஆகிய அந்நெறி ஏகனுகி'' என இத-னேடு மாட்டெறிந்து செய்யக் கருதினேம். அது இது, அது நீ, அது நான் என வருவனவே உபநிடதங்களில் வரும் மகாவாக்கியங்கள். இங்கு அது என்பது பரம்பொருள். இது, நீ, நான் என மூவிடம் பற்றி வந்த பெயர்கள் உயிரைக் குறிக்கின்றன. இவற்றின்படி பரம் பொருள் உயிராமாறு யாங்ஙனம் என்னும் வினவை எடுத்துக் கொண்டு, அவ்விரண்டன் சம்பந்தம் உணர்த்துவது இம்முதற் கூறு. மாணுக்கர்க்கு உணர்வு பெருகுதற்பொருட்டு இங்ஙனம் உய்த்துணரவைத்தல் நம் கருத்து.

அன் : சூத்திரத்தின் இக்கூற்றின் பொருளேத் தரும் வடமொழித் தொடர் ஒன்றைக் கூறியருளல் வேண்டும்.

மெய் : சாந்தோக்கிய உபநிடதத்தில் ஒரு கதை வருகிறது; உத்தாலகன் என்ற ஒரு மறையவன் தன் மகன் சுவேதகேதுவை நோக்கி நீ ஓர் ஆசிரியனே அடைந்து வேதங்களேக் கற்று வருக எனச் சொல்லி விடுத்தான். அம்மகன் வயது அப்பொழுது பன்னிரண்டு.

பன்னிரண்டாண்டு குருகுலவாசம் செய்து கல்விச் செருக்குடன் அம்மகன் திரும்பினன். அவன் செருக்கை நோக்கித் தந்தை 'எதை அறிந்தால், அறியப்படாதவை அறிந்தவை ஆமோ, அதனைக் கற்றனையோ?' என வினவினன்.

மகன் : அப்படி ஒரு கல்வி இருக்கக் கூடுமா?

தந்தை : ஒரு மட்குடத்தைக் காட்டி, இது மண்ணாலாயது எனக் கற்பித்தால், பிற பொருள்களும் அவ்வாறே அவ்வம்முதற் காரணத்தால் ஆகியவை என அறிதல் கூடும் அன்றோ?

மகன் : இத்தகைய கல்வி யான் அணுகிய ஆசிரியர்களிடத்து இல்லை போலும்! இருப்பின் எனக்குக் கற்பித்திருப்பர். தாங்களே அக் கல்வியை எனக்குக் கற்பித்தருள வேண்டும்.

தந்தை : ''இஃது, ஏ நல்லோய், முதற்கண் சத்தாகிய ஒன்றேயாய் அத்விதீயமாயிருந்தது' (ஸதேவ ஸோம்யேதம் அக்ர ஆஸீத்), இவ்வாறு பாடம் தொடங்கிற்று.

இங்கு ,,இது முதற் கண் சத்தாகிய ஒன்றேயாய் அத்விதீய மாய் இருந்தது'' என்பது ஒரு மேற்கோள்,

அன் : இதன் தாற்பரியத்தைக் கூறி அருளல் வேண்டும்.

மெய் : இவ்வுலகு, தான் இவ்வாறு காரியப்பாடு எய்துவதற்குமுன் தன் காரணமாகிய மாயையில் அடங்கி நிற்ப, அம்மாயையும் முதல்வன் திருவருளில் அடங்கி நின்றமையின், மாறுதலில்லாத அம்முதற்பொருள் ஒன்றேயாக, ஏனைப் பசு பாசங்கள் அதன் கண் இரண்டற்ற தன்மையில் அடங்கிக் கலந்து நின்றன என்பதே அதன் தாற்பரியம்.

அன் : துவி என்பது இரண்டு; துவிதா-இருதிறன்; அஃது இன்மைப் பொருள் உணர்த்தும் 'ந' என்பதோடு சேர்ந்து அத்துவிதம் என்றுதலின். அதற்குப் பொருள் ஒன்று எனப் பிறர் கூறக் கேட்டிருக்கின்றேனே?

மெய் : அங்ஙனம் கூறுவார் உளர். அங்ஙனம் முதற்பொருளை ஒன்று என்று அறிவிக்க அறிவதாகிய ஒரு பொருள் உண்டு அல்லவா? அஃது இயற்கை முற்றுணர்வுள்ள முதற் பொருளாதற்கு

இல்லை- அதுதான் ஆன்மா அல்லது உயிர் எனப்படும். இங்ஙனம், பொருள் இரண்டு என்பது பெறப்படினும், சுருதி 'த்விதீயம். என்னுது ''அத்விதீயம்'' என அவ்விருமையை மறுக்க வந்தது ஆதலால், பொருள் இரண்டயினும், அவை இரண்டு என்பதுபட வேறுபட்டு நிற்கவில்லை என்பதே அதன் கருத்து. இதனல், திருஞான சம்பந்தர் திருமொழியே பரமசித்தாந்தமாதல் தெளிக.

**அன் :** தெளிந்தேன். ஆயினும், மேலும் சில ஐயங்களைத் தீர்த்துக் கொள்ள எண்ணுகிறேன், ''ஏகம் சத்'' எனவும். ''ஏகோஹி ருத்ர;'' எனவும், ''ஸத் ஏவ, ஏகமேவ'' எனவும் கேட்கப்படுதலின், பொருள் ஒன்றே எனக்கொள்ளுதல் பொருந்தாதா என்பது ஐயம்.

முதற்கண் சொன்ன தொடர் இருக்கு வேதத்தில் 1—164—46ல் 'இந்த்ரம் மித்ரம் வருணம் அக்நிம் ஆஹுர் அஃதோ திவ்யஸ் ஸ ஸுபர்ணோ கருத்மாந் ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி' என வருகிறது.

இதன் பொருள் : சத்தாகிய ஒருவரையே இந்திரன், மித்திரன், வருணன், அக்னி, அழகிய திவ்விய கருடன் என்றிவ்வாறு அறிஞர் பலவாகக் கூறுகின்றனர் என்பது. இது வேத காலத்தில் தலையாய அறிவினரிடத்தெழுந்த ஒரு சிறந்த முடிவைத் தெரிவிக்கின்றது. இயற்கையின் ஆற்றல்களை இந்திரன், வாயு, அக்கினி முதலாகத் தெய்வமெனக் கொண்டு வழிபட்ட மக்கள், பின் அவ்வாற்றல்கள் அனைத்தும ஒரு முதற்பொருளுக்கே உரியவை என உணர்ந்து, அவற்றின் சமட்டி (சேர்த்துக்கூறுவது) நிலையை முதற்பொருள் எனக் கண்டு அதனைச் சத்து, ஏகம் என்றனர். சத்து-மாறுதலில்லாத செம் பொருள். ஏகம்-தான் ஒன்றேயாய் நிற்பது. அத்தகைய சமட்டி நிலைக்குக் கொடுத்த உருவமும் பெயரும் உருத்திரசிவன் என்பது சுவேதாசுவதரத்தில் முன்னர் நாம் காட்டிய தொடரால் இனிது விளங்கும். சாந்தோக்கியத்தில் 'சத்தே, ஒன்றே, அத்விதீயம்' என்றதும் அதுவே. இதனல், ஏகம் என்னும் சொல் பரம்பொருள் ஒன்று என்பதைத்தான் குறிக்கும். உள்பொருள் ஒன்றே அதாவது பதார்த்தம் ஒன்றே என்னும் பொருளைத் தராது.

இதனல், வேதங்களில் ஏகம் என்றது ஒன்று எனவே பொருள் படும்; அதன் தாற்பரியம் பதிப்பொருள் ஒன்று என்பதே ஆகும். இங்ஙனம் ஆராய்வோனுக்குப் பசு என்பது பெயர்; ஏன் என்ருல்

அவன் பாசத்தாற் பிணிப்புண்டவன். இனி, பரம்பொருளில்லை-யாயின் ஒரு பொருளும் இல்லை என்றாற்போல வரும் வேத உரை-களுக்குக் கருத்து, எல்லாப் பொருளும் பதிப்பொருளை இன்றி அமையா என்பது. அஃது அகர உயிர் இல்லை என்றால் எழுத்துக்களே இல்லை என்றாற்போலக் கொள்ளப்படும். இக்கருத்து நும் உணர்வில் நிலைபெற ஒரு வெண்பாவால் உணர்த்துவம்:-

''ஒன்றென்ற தொன்றேகாண், ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண்-ஒன்றின்றால்
அக்கரங்கள் இன்றாம் அகர வுயிர்இன்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு.

(பசு-கட்டப்பட்டது. பாசம்-கட்டும் கருவி, கயிறு).

**அன் :** இருவினையைப் பற்றி முன் ''மலத்து உளதாம்'' என்றதன் விளக்கம் கூறக் கேட்டபோதே சிறிது விளக்கம் உண்டாயிற்று. இச்சூத்திரத்தில் ''ஆணையின் இருவினையின்'' என ஆணையின் என்பதைக் கூட்டி உரைத்ததன் கருத்து யாதோ என அறிதல் வேட்டேன்.

**மெய் :** உடம்பெடுத்த உயிர்கள் உலகில் வாழ்ந்து வரும்போது, துன்ப நீக்கமும், இன்பப்பேறும் கருதி, மனமொழி மெய்களால் இயற்றும் செயல்களே, நுண்ணிய வடிவில் அவற்றின் புத்தியைப் பற்றி நிற்கும். நினைத்தல், மொழிதல், செய்தல் எனப் புலப்பட நிற்கும் பரு நிலையில், அவை வினை எனப்படுகின்றன. இதனை மேல் வினை, ஆகாமியம், தூலவினை என்றலும் உண்டு. அறிவியலின்படி எச்செயலும் அழிவதில்லை; அது வேறு வடிவில், செய்வோன், செயப்படுபொருள், கொள்வோன், கருவி முதலிய முதனிலைகளைப் பற்றி நிற்கும். இங்ஙனம் வினை செய்வோனது கருவியாகிய புத்தியைப் பற்றி நுண்ணிய நிலையில் உள்ளபோது அது புண்ணிய பாவம், சஞ்சிதம், எனப்படுகிறது. இங்ஙனம் சேர்ந்து வரும் புண்ணிய பாவங்களில் பக்குவப்பட்டவை தன்னைப்பற்றியும், பிற உயிர்களைப் பற்றியும். வேறு வகையாலும் இன்பத்துன்ப நுகர்ச்சியைக் கொடுக்கும். இங்ஙனம் பயன் விளைத்து நிற்கும் நிலையில் அஃது ஊழ். தெய்வம், உண்மை, பால், பிராரத்தம் என்னும் சொற்களாற் குறிக்கப்படும்.

ஒரு பொருளைத் தக்கார்க்குக் கொடுப்பதனுல் பயன் எப்படி வருகிறது எனக் கருதுவோம். கொடுத்த பொருளும், ஏற்றுக் கொண்டோரும், கொடைச்செயலும் அப்பயனைத் தருவதில்லை. கொடுத்தோனும் அதற்குரிய பயனை அறிந்து எடுத்துக் கொள்-வதில்லை; இறைவனே அச்செயலை அறிந்து, அதற்குத் தக்க பயனைத் தக்க காலத்தில் பெறுவிக்கின்ருன். இதனுல்தான் தனது ஆணையால் வரும் இருவினை என உரைத்தோம். ஆணை என்பது இறைவனது பொருள் சேர்ந்த நினைவு. இது சத்திய சங்கற்பம் எனப்படும். இன்னும், கனியாகிய பயனைப் பெறக் கருதி வளர்த்த மரம் அக்-கனியைத் தருவதோடு பின்னும் அம்மரம் தோன்றுவதற்கு வேண்டிய விதையினையும் தருகிறது: அதுபோல, முன்னைவினை தனக்குரிய பயனையும் அதனை நுகர்தற்குரிய உடம்பையும் உயிர்க்குக்கொடுக்கும். அவ்வுயிர், இறைவன் ஆணையால் அவ்வுடம்பில் அணைந்து அப்பயன் களை நுகரும் போது, அந்நுகர்ச்சிக்கு வேண்டிய முயற்சியைச் செய்யும்; அம்முயற்சியே பின்னைக்கு வினையாய் முதிரும். அன்றியும், வினைக்கீடாக ஒருவன் உள்ளத்தில் எழும் குணங்களை ஒரு சுழலாக முன்னையோர் கண்டு கூறியுள்ளனர். அவை அறம், அறிவு விளக்கம், பற்றின்மை, செல்வம், பாவம், தெளிவின்மை, பொருட்பற்று வறுமை என்பவை. இவை முறையே காரண காரியமாய் விளைந்து, வறுமை மீள அறஞ்செய்தற்குக் காரணம் ஆம். இங்ஙனம் உயிர்கள் இருவினை களுக்கு ஏற்றபடி வேறு வேறு உடம்பெடுத்து இன்ப உலகம், இன்பத் துன்ப உலகம், துன்ப உலகம் எனும் மூன்றிற் பிறந்தும் இறந்தும் வரும். இதன் விளைவு மூல மலத்தின்வலி தேய்ந்து வருவதும், அதற்கு ஏற்ப வளர்மதியைப் போல உயிரின் அறிவில் திருவருள் விளக்கம் மேல் ஓங்குவதும் ஆகும்.

**அன் :** திருவள்ளுவர் இக்கருத்துக்களைக் குறிப்பாகவேனும் உணர்த்துகிருரா? வினையாற் பிறப்பும் பிறப்பால் வினையும் வந்து தொடரும் ஆயின், இத்தொடர் எப்படி அறும்?

**மெய் :** நன்று. திருவள்ளுவர் ஊழ் என்னும் அதிகாரத்தில், ''வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி-தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது'' எனக் கூறியுள்ளார். நுகர்ச்சிப் பொருள்களை நிரம்பச் சேர்த்து வைப்பினும், அவற்றை நுகர்வதற்கு முன்னை ஊழ் இருத்தல் வேண்டும் என்பது கருத்து. இங்கு ஊழ் என்பதை ''வகுத்தான் வகுத்தவகை'' என்றமையின், அதனைச் சட ஆற்றல்

களைப் போலக் கொண்டிலர் திருவள்ளுவர். அவர் அவர் எவ்வெப் பொருளை எம்மட்டில் நுகரக் கடவர் என வகுத்து அமைப்பது அவ் வாற்றல்; வகுத்தபடியே நுகர்ச்சி முதலியவை அமையும் நியதியை ஊழ் எனவும் கூறினர் என்பது இதனுல் தெளியப்படும். அதுவே நம் கருத்தும் ஆம்.

இதுசெய்க, இது செய்யற்க என விதிவிலக்குகளாகப் பெரியோர் களால் உணர்த்தப்படுவதே அறம். ''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப'' எனத் தொல்காப்-பியரும், ''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து-மறைமொழி காட்டி விடும்'' என அவரைப் பின்பற்றித் திருவள்ளுவரும் கூறியவை ஓர்ந்து உணரத்தக்கவை. இறை வழிபாடு இரு வகைப்படும்; ஒன்று இறைவன் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடத்தல்; அஃதாவது அறநெறி நிற்றல். இதனைத் திருவள்ளுவர் ''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க-நெறிநின்ருர் நீடு வாழ்வார்'' என்றதனுற் பெற வைத்தார். இவ்வாறு ஒழுக்கத்தில் நிற்பார்க்கு மனம் தூய்மைப் பட்டு வரும்; அவர்க்கே இறைவனது உண்மையும், அவன் அருட் குணங்களும் விளங்கும். அங்ஙனம் விளங்கிய அருட்குணங்கள் தம் மாட்டு மிக்குத் தோன்றும்படி, முதல்வனை மனமொழி மெய்களால் நினைந்து பொருள்சேர் புகழ்கூறி வந்தித்தல் இரண்டாவது வகை. இதனைத் திருவள்ளுவர், 'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்-பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு" என்றதனுற் பெற வைத்தார். இரண்டாவதாகக் கூறிய வழிபாடு சிவபுண்ணியம் எனப்படும். இஃது இருவினைகளையும் அறுத்து மெய்யுணர்வைப் பெருக்கிப் பிறப்பறுக்கும் எனக் கொள்க.

**அன் :** பிறரிடம் கேட்க முடியாத அரிய நுண்ணிய உண்மைகளை என் முன்னைத் தவபபயனுகை அடிகள் கூறக்கேட்டு உய்ந்தேன். இனி ''ஆணையின்-நீக்கமின்றி நிற்கும் அன்றே'' என்ற சூத்திரப்பகுதியின் பொருளை விரித்து உரைத்தருள வேண்டும்.

**மெய் :** சூரியன் தானும் தன் ஒளியும் என இரு திறப்பட்டு நின்று தன் நிறைவுள் அகப்பட்டு நிற்கும் கோள்களையும் உலகப் பொருள் களையும் விளக்குகின்ருன். இன்னும் சிறிது நுணுகி நோக்குவோர்க்கு ஞாயிறு தானும் தன் ஈர்ப்பு ஆற்றலும் (attractive force) என இரு திறப்பட்டு நிற்றல் பற்றியே, அது தன் கோள்களைத் தன் நிறைவில்

அகப்படக் கொண்டு சுழலச் செய்கின்றது. அதுபோல, முதல்வனும் தானும் தன் அருளாற்றலும் என இரு திறப்பட்டு இயைந்து நின்றே பசு பாசங்களைத் தன் நிறைவில் அகப்படுத்திச் செயற்படுத்துகின்றான். முதல்வனைச் சிவன் எனவும், அவன்றன் அருளாற்றலைச் சத்தி எனவும் நூல்கள் வழங்குகின்றன. இங்ஙனம் ஒரு பொருள் ஒருவாற்றான் இரு திறப்பட்டு வழங்குதற்கண், அவ்விருதிறங்களுக்கும் உள்ள சம்பந்தம் தாதான்மியம் எனப்படும். குண குணிகளுக்கும், அவயவ அவயவிகளுக்கும் உள்ள சம்பந்தம் தாதான்மியமே ஆகும். அச் சொல்லின் இயல்பு அது தானதற்றன்மை என்பது. இதனைத்தமிழில் ஒன்றன் இருமை என வழங்கலாம். முதல்வன் தன் ஆணை எனப்படும் சிற்சத்தியின் நீக்கமின்றி நிற்பன் என்றது இங்ஙனம் தாதான்மியத்-தால் அவன்தானும் தன் சத்தியும் என இருதிறப்பட்டு நிற்பன் என்னும் கருத்துப் பற்றியதே ஆம்.

இருபொருள் ஒன்றெனும்படி ஒற்றுமைப்பட்டு இயைந்து நிற்றற்கு ஏதுவாகிய சம்பந்தம் அத்துவிதம் அல்லது இரண்டன் ஒருமை என மேற் கூறினோம். ஒரு பொருளே ஒரு வகையால்-இரண்டாக நிற்றற்கு ஏதுவாகிய சம்பந்தம் தாதான்மியம் அல்லது ஒன்றன் இருமை என்பது இப்போது கூறப்படுகின்றது. இவற்றை மறவாது மனத்துக் கொள்க.

**அன் :** ''அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக
அம்மையப்ப ரப்பரிசே வந்தளிப்பர்''—எனவும்,
''நம் கையினால் நாமனைத்தும் செய்தாற் போல் நாடனைத்தும்
நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும்

எனவும் நம் தமிழ்மொழிக்கண் பெரியோர்கள் இறைவனது சத்தியின் உண்மையைக் கூறியிருத்தல் அடியேன் நினைவிலுள்ளது. உபநிடதங் களில் இப்படி வரும் கருத்தை அறிய அவாவுகின்றேன்.

**மெய்:** ''அது பிரசைகளின் பொருட்டுப் பல ஆவேன் என எண்ணிற்று ''(ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயாயேதி) எனச் சாந்-தோக்கியத்தினும், ''அவன் விரும்பினான் பிரஜைகளின் பொருட்டுப்பல ஆவேன் என'' (ஸோகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயாயேதி) எனத் தைத்திரீயத்தும் வருவன சத்தி சங்கற்பம் குறித்தனவேயாம். சுவேதா சுவதரத்தில், இவருடைய பராசத்தி அறிவெனவும், வன்மை எனவும்,

செயலெனவும், பலவடிவில் கேட்கப்படுகின்றது (பராஸ்ய சக்திர் விவி தைவஸ்ரூயதே-ஞான பலக்ரியாச) எனத் தெளிவாக வருகிறது.

**அன்:** வேதாந்திகள் என்றும், அத்துவிதிகள் என்றும் தம்மைக்கூறிக் கொள்ளும் ஒரு சாரார், 'பிரம்மம் விசாதீய சசாதீய சுவகத பேதம் இல்லது' எனக் கூறுகிறுர்கள். அவர்கள் எக்கருத்தில் இவ்வாறு கூறு-கிறுர்கள்? அது சிவநெறிக்குப் பொருந்தியுள்ளதா எனஅறிய விழை கின்றேன்.

**மெய்:** சாதி என்பது தருக்க நூலார் கொள்ளும் ஒருகருத்துப் பொருள் (concept). பல பொருள்களுக்குத் தம்முள் உளதாகிய பொதுமையே (Common characteristic) சாதி எனப்படும்.

நாம் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களும் என்றும் உள்ள பொருள்கள் எனவும், ஒன்றினின்று மற்ருென்று ஆக்கப்-படாதவை எனவும் கூறுகிரும். ஆனுல் வேதாந்த சூத்திரத்தைப் பின் பற்றும் ஒரு சிலர், பிரம்மம் ஒன்றுதான் உள்பொருள்; அஃது அறிவு மாத்திரமாய் உள்ளது; அவிச்சைவயத்தால் அது சகம், சீவன், பரம் என வேறு பட்டுத் தோன்றும். இத்தோற்றம், மயங்கியவழிக் கயிறு அரவாகத் தோன்றுவது போன்றது. தெளிந்தவழி அது கயிருகவே இருத்தல் போல, மகாவாக்கியப் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தன்னைப் பிரம்மம் என்று திடமாகப் பாவித்தால், தான் அறிவு மாத்திரையாய் ஒன்றேயாய் நிற்றல் கூடும் என்பர்.

பதியும் பசுவும் அறிவுடைப்பொருள்கள், பாசம் அறிவில்லது. விசாதீயபேதம் இல்லை என்பதனுல் பிரமத்தின் வேற்று இனமாகிய, பாசமில்லை என்பது பெறப்படும்; சசாதீய பேதம் இல்லை என்பதனுல் பிரம்மத்திற்கு ஒத்த இனமாகிய பசுக்கள் இல்லையென்பது பெறப்-படும். சுவகதபேதம் இல்லை என்பதனுல் பிரமம் தனக்குள் அவயவ அவயவி என்ருவது, குணகுணி என்ருவது கருதுவதற்கு இடந்தராது, அறிவு மாத்திரமாய் நிற்பது என்பது பெறப்படும்; இஃது ஒரு பொருட் கொள்கையினர் (ஏகானம்வாதிகள்) மதம்.

வேதாந்தம் என்பது உண்மையில் வேத முடிவாகிய உபநிட-தங்களைத் தான் குறிக்கும்; ஔவை திரு நான் மறை முடிவு என்றது இவற்றையே. இவற்றின் பொருளை ஆராயப் புகுந்த வேதாந்த

சூத்திரங்களும் உபசாரம் பற்றி வேதாந்தநூல் எனப்படும். அச்-சூத்திரங்களுக்குப் பலர் பலவாறு உரைகள் எழுதி அவ்வுரைகளையே வேதாந்தம் என்பராயின், நாம் அதற்கு என்கடவேம்! அத்துவிதம் என்னும் சொற் பொருளை மேலே விளக்கினேம். அது திருஞான; சம்பந்தர் முதலிய பரமாசாரியர்களது கருத்து என்றும் காட்டினேம். பசுபதி என்னும் ஆட்சி உபநிடதங்களில் வருகின்றது. பதி எனவரும் இடத்திலும், பசுபதி என்றே கொள்வது வடமொழி மதம். இராமச்-சந்திரன் என்னும் முழுப்பெயரைக் கூருமல், சந்திரன் என்ருே, இராமன் என்ருே, அதன் ஒரு கூற்றைக் கூறினும், முழுப்பெயர்தான் சொள்ளப்படும். இதனை 'நாமை கதேச நாமக்கிரகணம்' என்று கூறுவர். பெயரின் ஒரு புடைபற்றி முழுப்பெயர் கொள்ளப்படும் என்பது கருத்து. பதிகாப்பவன்; பசு-கட்டுற்றது (சாதி ஒருமை); பசு என்றமை பற்றியே பாசத்தின் உண்மை பெறப்படும். பாசம்-கட்டுவது. இன்னும் முதல்வன் சத்திமான் எனவும், அவன் அருளாற்றல் சத்தி எனவும் படும் என்று மேலே காட்டினேம். இங்ஙனமாகவும், வேறு வகையிற் கூறிப் பிணங்குவராயின், ''அவ்வளவின் அவன் மகிழுக'' என விடுப்ப தன்றி நாம் நாத்திகத்தைக் கொள்ளுதல் தகாது.

அன்: இதுவரை அடிகளிடம் கேட்டுணர்ந்த உண்மைகளை அளவை முறையின் வைத்து அறிய விரும்புகிறேன். அளவையானும் இலக்கணத்தானும் பொருள் உண்மை உணரப்படும் என்பது ஆய்வாளர் துணிபு என்பது அடியேன் கேட்டறிந்தது. உலகம் காரியம். அதாவது ஆக்கப்பட்டது. ஒரு காரியத்திற்கு முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம் என மூன்று காரணங்கள் இருத்தல் வேண்டும். ஒரு வீடு கட்டி முடிக்க வேண்டும் எனின், அதற்கு முதற் காரணமாகச் செங்கல், சுண்ணம்பு, மரம், ஆணி முதலியவை வேண்டும், நிமித்த காரணம் அதைத்திட்டமிட்டு நடத்தும் தலைமைத் தொழிற்கலைஞன்-துணைக்காரணம் கருவிகள், இயந்திரம் முதலியன. இவ்வாறு உலகிற்கு முதற்காரணம் மாயை என அறிகிறேன்; ஆதாரமாகவும் நிமித்தமாகவும் உள்ள காரணம் சிவபிரான்; துணைக்காரணம் யாது?

மெய்: நீர் கூறிய பாட்டிலிருந்தே தெரிந்து கொண்டிருக்கலாமே; ''நங்கையினுல் நாம் அனைத்துஞ்செய்தாற் போல் நாடனைத்தும்-நங்கையினுற் செய்தளிக்கும் நாயகனும்'' என்றீரே!

அன்: ஆம், ''ஆணையின் இருவினையின் போக்கு வரவு புரிய'' எனத் தாங்கள் அருளிச்செய்தமை பற்றித் துணைக்காரணம் ஆணையாகிய சத்தியும், உயிர்கள் செய்த இருவினையும் எனத்தெளிவாகின்றது.

மெய்: நாம் கையில் எழுதுகோலை பற்றி எழுதும்போது, கை துணைக் காரணம், எழுதுகோல் அதன் வழிப்படும் துணைக்காரணம்; அது போல, ஆணை துணைக்காரணம், இருவினை அதன் வழித்தாய துணைக் காரணம் என அறிக.

அன் : வீட்டினுற் பயன் கொள்வோன் வீட்டிற்கு உரியவனுதல் போல, உலகத்தாற் பயன் கொள்வன உயிர்கள் என்பதும் பெறப்படுகின்றதல்லவா?

மெய் : ஆம், ஆயின், உயிர்களின் தேவையை முதல்வனே அறிந்து தன் பேரருள் காரணமாக உபகரிக்கின்ருன் என வேறுபாடு அறிந்து கொள்க.

அன் : முதற்சூத்திரத்தில், 'மூவினைமை'' என்னும் ஆட்சியால் உயிர்களின் பொருட்டு முத்தொழில் செய்தல் முதல்வனது இலக்கணம் எனத்தெரிகிறது. அவனே ஐந்தொழில் செய்வோன் எனப் பெரியோர்கள் கூறக் கேட்டுள்ளேன்; இச்சூத்திரங்களில் அஃது எவ்வாறு உணர்த்தப்படுகின்றது?

மெய் : அங்ஙனம் கூறினேம் ஆயினும், ''மலத்து உளதாம்'' எனவும், ''ஆணையின் இரு வினையின் போக்குவரவு புரிய நீக்கமின்றி நிற்கும்'' எனவும் கூறினும் ஆகலின், மற்றிருதொழிலும் பெறப்படும். ஐந்தொழில்களுள் படைத்தல் காத்தல் அழித்தல் என்பவை மாயையின் காரியமாகிய தனு கரண புவனபோகங்களாகிய அறிவில் பொருள்களில் நிகழ்வன. மலத்தின் ஆற்றல் தேயும்படி உயிர்களைப் பிறப் பிறப்புட்படுத்தி இரு வினைகளைச் செய்வித்து அவற்றின் பயனை நுகர் வித்தல், முதல்வன் தான் உயிர்களின் பின் மறைந்து நின்று செய் வதாகலின், மறைத்தல் எனப்படும். இனி, மலபரிபாகம் வரும் போது தீக்கையில் மும்மலங்கெடுத்துச் சிவத்துவம் வழங்குவது அருளல் எனப்படும். இவற்றுள் மறைத்தல், அருளல் என்பவை உயிரின்கண் நிகழ்பவை என அறிக. படைத்தல் காத்தல், அழித்தல்

மறைத்தல் என்பவற்றைப் பந்தம் என ஒன்ருயடக்கி, அருளலே வீடு எனக்குறித்துப் பந்தம் வீடு தரும் பரமன் என இரண்டாய் அடக்கு தலும் உண்டு.

**அன்:** இன்று அடிகள் திருவருளால் அரிய நுண் கருத்துக்களைக் கேட்டுணர்ந்தேன் எனச்சொல்லிக் கீழே வீழ்ந்து இறைஞ்சி விடை பெற்றுச் சென்ருர்.



## மூன்றும் சூத்திரம்

மெய்கண்டதேவர் வழக்கம் போல் நிட்டையில் அமர்ந்து, நான்காம் நாள் காலையில், தம்மிடம் பாடங்கேட்டு வரும் அன்பருக்கு ஞானதீக்கை செய்து ஆன்ம உண்மை உணர்த்தத் திருவுளங்கொண்டார். அன்பரும் வந்து வணங்கினர். வந்தவருக்குத் திருநோக்கம், பரிசம், பாவனை என்பவற்றால் தீக்கை செய்து, ''மன வாசகங்கடந்தான்'' எனப் பெயரிட்டார். மேலும் அருகில் இருத்திக் கூறுவார் ஆயினர்: முதல் நாள் சித்தாந்த சைவத்தில் இறைவனுவான் இவன் என்பது தோன்றும்படி மங்கல வாழ்த்துக் கூறினும். மங்கல வாழ்த்து என்பது எடுத்துக் கொண்ட செயல் இடையூறின்றி முடிவு பெற்றுப் பயன் தரவேண்டி இடையூறு நீக்குதற்கு உரிய கடவுளை வாழ்த்துதல், நமக்கு இடையூறு சிறிதும் வாராது என்பது அறிந்தோம் ஆயினும். ஆன்றோர் ஒழுக்கத்தைப் போற்றிக் கொண்டும், மாணுக்கர்க்கு இது செய்யத் தக்கது என அறிவுறுத்த வேண்டியும் அதனைச் செய்யுளால் இயற்றி எழுதி வைத்தாம். மங்கல வாழ்த்து, போற்றி என்பது போல எடுத்துக் கூறும் வணக்கமும், வாழ்க எனக் கூறும் வாழ்த்தும், முதல்வன் இயல்பு கூறும் பொருளியல்பு கூறுதலும் என மூவகைப்படும், அவற்றுள் அப்பாட்டுப் பொருள் இயல்பு கூறுவதாம். சிவபெருமான் அருளுதற்குப் பொல்லாப் பிள்ளையார் திருவடிகளை முடியிற் கொள்வர் நல்லோர் என நல்லோர் செயல் மேல் வைத்து விநாயகர் இயல்பு-உணர்த்தப்பட்டது. அருளிய–அருளுதற்கு; இதனைச் செய்யிய என்னும் வாய்பட்டு வினையெச்சம் என்பர். மலை வில்லார் அருளிய, கொடுத்த பொல்லார் எனப் பெயரெச்சமாக உரைப்பினும் அமையும். மலையை வில்லாக உடையார் எனவும், மலைவு இல்லாகச் (இல்லையாகச்) செய்தார் எனவும் இருபொருள் கொள்ள நிற்பது மலை வில்லார் என்னும் தொடர்.

இனி, முதற் சூத்திரத்தால் காணப்பட்ட உலகைக்கொண்டு காணப்படாத கடவுளுக்கு உண்மையும், மலத்தின் உண்மையும், பொது வகையால் மாயை கன்மங்களின் உண்மையும் உணர்த்தப் பட்டன. இரண்டாம் சூத்திரத்தால், பொதுவகையால் உணரப்படும் உயிர்கள் மேல் வைத்து, இறைவன் உயிர்களோடு ஒன்றி நிற்பதாகிய அத்துவித இயல்பும், சிறப்பாகக் கன்ம மாயைகளது உண்மையும், திரோதான சத்தியின் உண்மையும் விளக்கப் பட்டன. இன்று ஆன்மா

வின் உண்மையினைச் சிறப்பாக உணர்த்தப் புகுகின்றோம். உபநிடதங்-களில் ஆன்மா என்னும் சொல் ஆன்மா, பரமான்மா இரண்டிற்கும் பொதுவாக ஆளப்படும். அவற்றுள், ஆன்மாவின் உண்மை இன்று உனக்கு உணர்த்தப் புகுகின்றோம். ஆன்மா சீவான்மா, உயிர். அது யான் என்னும் உணர்வுக்கு முதலாயுள்ளது.

நான் என்னும் உணர்விற்குப் பொருளாக உள்ளதே ஆன்மா. ஏதேனும் ஒன்றைச் செய்யும் போதும் அறியும் போதும் நான் இதனைச் செய்கின்றேன்; நான் இதனை அறிகின்றேன் என உணர்வு நிகழ்கிறது. இங்கு நான் என்றது ஆன்மாவைக் குறிக்கும்; இதனை என்றது நமக்கு வேறாய் வெளியில் உள்ளதொரு பொருளைக் குறிக்கின்றது. செய்கின்றேன, அறிகின்றேன் என்பவை வினை நிகழ்ச்சியினையும், அறிவு நிகழ்ச்-சியினையும் முறையே குறிக்கும். நான் என்பது எது என்பதை உள் நோக்கு தன் ஆய்வால் (Self introspection) கண்டு கொள்க.

**மன வாசகங்கடந்தார்:** யான் என்பது இன்னது எனத் துணியக்கூட-வில்லைஇதனால், அதனை இலது அல்லது சூனியம் எனக் கொண்டால் வரும் குற்றம் யாது?

**மெய் :** உடம்பு, பொறிகள், மனம் முதலியவற்றை ஆன்மாவா என ஆய்ந்து, அவை அனைத்தையும் விட்டபோது, ஆன்மா இல்லை எனத் துணியும் அறிவு ஒன்று உளது அல்லவா? அவ்வறிவே ஆன்மா எனக் கொண்டறிக. இக்கருத்து உனக்கு நிலைபெற ஒரு வாய்பாடு கூறுகிறோம்: அஃது 'உளது இலதென்றலின் ஆன்மா' என்பது.

**ம-ர்:** அவ்வறிவு இவ்வுடம்பு நலமாக உள்ளபோது அதன்கண் அன்றி வேறு நிகழாமையின், இப்பருவுடம்பே ஆன்மா ஆகலாம் அல்லவா?

**மெய் :** யான் பருத்தேன், யான் சிறுத்தேன் என ஓர் ஒருகால் உடம்பின் தன்மையை உயிருக்கேற்றி வழங்கினும், என்மாடு, என்மனைவி, என்வீடு என்றாற் போல என்கை, என்தலை, என்கால் என உடம்பைத் தனக்கு வேறுபட வழங்குதல் மிக்கிருத்தலானும், உடல் சவமான போது அதற்கு உணர்வு இன்மையானும், ஆன்மா உடம்பிற்கு வேறு என்பது ஆய்ந்து கண்டுகொள்க. 'எனதுடல் என்றலின் ஆன்மா வேறு உளது?'' என்பது வாய்பாடு. ஒருவன் உறங்கும் போது உணர்வு விளங்காமையின் உடம்பு வேறு, உணர்வு வேறு என்பது விளங்கும்.

**ம-ர்:** அங்ஙனமாயினும், மெய் வாய் கண் மூக்கு செவி என்பனவே பொருள்களை உற்றும், சுவைத்தும், கண்டும், மோந்தும், கேட்டும் அறிதலின் பொறிகளே ஆன்மா எனக் கொண்டால் பொருந்து மன்றோ?

மெய்: பொருந்தாது. கண்காணும், கேளாது; செவிகேட்கும், காணுது. இங்ஙனம், அவை ஒன்றறிந்ததை மற்ருென்று அறிவதில்லை. மாம் பழம் விற்பதைக் கண்டு அருகில் வரவழைத்துப் பழத்தைப் பார்த்து, தொட்டு, மோந்து, ஒன்றைச் சுவைத்துப் பார்த்து, அவ்வகையில் சில பழம் வாங்கும் போது, யான் கண்டேன், தொட்டேன், சுவைத் தேன், வாங்கினேன் என அவ்வப்பொறிகளால் அறிந்த புலனுணர்வு அனைத்தும் நம் அகத்தே அறிவில் இயைந்து விளங்குகின்றன. இதனுல், நம் அறிவு ஐம்பொறிகளைக் கருவிகளாகக் கொண்டு அறிந்து வருகிறது என்பது விளங்குதலின், நான் என்னும் உணர்வாக நிற்கும் ஆன்மா ஐம்பொறிகளின் வேறு என்பது தெளிவாகும்.

ம-ர்: அடியேனுக்கு நன்கு விளங்குகிறது. இனி, உறங்கி விழிக்கும் போது கனவு காண்கிறோம். அக்கனவில் ஐம்பொறிகளின் தொழிற்பாடு இல்லையாகவும், ஐம்புலனின் உணர்வும், நனவிற்போல் அனுபவங்களும் உண்டாகின்றன, அதனுல், அக்கனவில் உள்ள நுண்ணுடல் நுண்பூதங்களாலும், மனம் புத்தி ஆங்காரம் என்னும் அகக் கருவிகளாலும் ஆயது எனக் கொள்ளப்படுகிறது. அதுவே நாம் எனக் கொண்டால் என்ன தவறு?

மெய்: கருவிகள் ஒடுங்கி நிற்கும் ஒடுக்கத்திற் கண்ட கனவை மீள நனவில் நினைந்து காணும்போது, கனவு கண்டாம் என்றும், கண்டிலம் என்றும் மயங்கியே அதனை நினைவு கூர்தலைக் காண்கின்ருேம். நுண் உடம்பே உயிராயின், தான் கண்டதை மீள நினைந்து சொல்லப்புகும் போது மயங்குதல் வேண்டா. மயங்குதற்குக் காரணம் என்னை எனின், நுண்உடலிற் புகுந்து கண்ட ஆன்மா, அவ்வுடலை விட்டுத் தூலவுடலைப் பற்றி அறிய நேருவதேயாகும். அறிவு திரிதற்குக் காரணம் உடல் வேறுபாடும் விடய வேறுபாடும் ஆகும். ஆதலின், பருவுடம்புபோல நுண்ணுடம்பு ஆன்மாவிற்குப் போக நுகர்ச்சிக்கு இடமாவதால் ஆன்மா நுண்ணுடலினும் வேறு என்பது தெற்றென உணர்க.

மேலைக்கூற்றிற்கும் இதற்கும் வாய்பாடு ''ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது'' என்பது. ஐம்புலன் அறிதலின், ஒடுக்கம் அறிதலின் என ஈரிடத்தும் அறிதலின் என்பதைக் கூட்டி ஐம்புலனையும் இயைத்து அறிதலின் ஆன்மா ஐம்பொறியின் வேறு உளது; ஒடுக்கத்

தின் கண் நிகழ்ந்ததை ஒடுங்காத நிலையில் மயங்கி அறிதலின் ஆன்மா ஒடுக்கத்தின் கண் உள்ள நுண் உடம்பின் வேறு உளது என உரைக்க.

மா-ர் : தேவரீர் திருவருள் திறனல் கேளாத எல்லாம் கேட்டுணரும் பேறுடையேன் ஆயினன்; மேலும் வினவுகின்றேன்: அடியேனுக்கு விளக்கம் தந்தருள்க, பெருமானே! இதுவரையில் கனவில் ஐம்பொறி-கள் தொழிற்படாமையானும், நுண்ணுடம்பு உறக்கத்திற் செயற்-படாமையானும் ஆன்மா அவற்றின் வேறு என்றல் அமையும்; பிராணவாயுவுக்கு உயிர் என்னும் பெயர் இருத்தலானும், அஃது உறக்கத்தினும் பேருறக்கத்தினும் உயிர்த்தலானும் அதனையே ஆன்மா எனக் கொள்ளுதல் சாலும் அல்லவா?

மெய் : சாலாது; கனவில் அறிவுப்பொறி தொழிற்பொறி பத்தும் தொழிற்படாது அடங்குகின்றன; உறக்கத்தில் அவற்றோடு மனம் புத்தி ஆங்காரமும் அடங்குகின்றன. பேருறக்கத்தில் நினைவு அளவில் உள்ள சித்தமும் தொழிற்படவில்லை. ஆன்மா தலைவன்; அவன் தனக்குக் கருவிகளாய் நின்ற இவற்றைத் தொழிற்படுத்தாது அடங்கு-தலின், இவையும் அடங்குகின்றன. தலைவன் தொழிற்படும்போது ஏவலர் ஒழிந்து இருப்பர் என்பது அடாது. பிராணவாயு ஆன்மா-வாயின் அது தொழிற்படும்போது, பிற கருவிகள் தொழிற்படாமல் உள்ளன என்பது பொருந்தாது. பிராண வாயுவும் ஏனைக் கருவிகள் போல ஆன்மாவிற்குத் துணையாய் நிற்கும் கருவியே ஆகும்; ஏனைக் கருவிகள் தொழிற்படாதபோதும் தான் தொழிற்படுதல் பரு உடலுக்குக் காவலாதல் பற்றி என அறிக, இக்கருத்தை நினைவு கூர்தற்கு உரிய வாய்பாடு ''கண்படில் உண்டி வினை இன்மையின் ஆன்மா வேறு உளது'' என்பது. இதற்குக் கண்படுதற்கண் (உறக்-கத்தில்) பிராணவாயு தொழிற்படவும் பருவுடம்பிற்கு நுகர்ச்சியும் சேட்டித்தலும் இல்லாமையின் ஆன்மா வேறு உளது எனப்பொருள் கொள்க.

மா-ர் : இனி, இவை அனைத்தும் சடமாதலின், ஆன்மா ஆகா எனல் பொருந்தும்; மேலைச் சூத்திரங்களால் உணர்த்தப்பட்ட முதல்வனே அவ்வான்மாவாம் எனின் வரும் குற்றம் யாது?

மெய் : அது பொருந்தாது: முதல்வன்தானே உணர்ந்து உணர்த்து பவன். உடம்புதோறும் நான் என்னும் உணர்வுக்கு விடயமாய் உள்ள

ஆன்மா உணர்த்த உணர்வது, தானே உணராது. மேலே பிராண வாயுவைப் பற்றி ஆய்ந்தபோது கருவிகள் ஒடுங்க, ஒடுங்க அறிவின் விளக்கம் குறைந்து குறைந்து, வரும் எனக் கனவு, உறக்கம் பேருறக்கம் என்பவற்றின் நிகழ்ச்சிபற்றி ஆராய்ந்தோம். பேருறக்கத்,தின் மேலும் உயிர்ப்படங்கி நிற்கும் பேரிருள்நிலை ஒன்றுண்டு. அந்நிலையில் உயிர்க்கு அறிவு சிறிதும் விளங்குவதில்லை. இருள்நிலையிலிருந்து பின் பிராணவாயு, கலை, வித்தை, அராகம் என்பனவும், சித்தம் முதலிய கருவிகளும் விளக்குகள் போலத் தொழிற்படுதலினாற்றான். அவற்றான் உணர்த்த உயிர் உணர்கின்றது. விழிப்பு நிலையினும் நூல்களானும் ஆசிரியரானும் உணர்த்த உணர்கிறது. தானே உணர்வதில்லை. சுத்த நிலையினும் முதல்வனது இயல்பினையும் தன் இயல்பையும் உணர்த்தினாலன்றி உயிர் உணர்வதில்லை. இதனால், ஆன்மா முதல்வனின் வேறு என உணர்ந்து கொள்க. சுருக்கமாக உணர்த்த உணர்தலின் ஆன்மா பரம்பொருளுக்கு வேறாக உள்ளது எனக் கொள்க.

மா: இனி, இங்குக் கூறியவை தனித்தனி ஆன்மா அல்லவேனும், பருவுடல் முதலாகக் கூறியவற்றுள் ஒன்றின்றியும் உணர்வு நிகழாமையின், இவ்வனைத்தின் கூட்டமே ஆன்மா எனின் வரும் இழுக்கு யாதெனத் தெரிவித்தல் வேண்டும்.

மெய்: இவ்வனைத்தும் என்றவற்றை ஆராய்ந்து காணின், அவை கலை முதல் நிலம் வரையுள்ள முப்பது தத்துவம் என அமையும்; இவற்றுள் யாதும் ஆன்மா எனப் பெயர் பெறுவதில்லை; இவை ஒன்று சேர்ந்த போதும், பருவுடல், நுண்உடல், குணஉடல், கஞ்சுக உடல் என்றிங்ஙனம் பெயர் பெறுவதன்றி, ஆன்மா எனப்படுவதில்லை. ஆதலினால், அவற்றை இன்னது இன்னது, என அறிந்து வந்த ஆன்மா அவற்றின் வேறே ஆகும். இனி, இதுவரை ஆய்ந்து கண்ட உண்மைகளைத் தொகுத்துச் சூத்திரமாகத் தருதும்:-

''உளதில தென்றலின் எனதுடல் என்றலின்,
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின், கண்படில்
உண்டிவினை இன்மையின், உணர்த்த உணர்தலின்,
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா''

என்பது மூன்றாம் சூத்திரம்.

இலதென்றல் முதலிய ஏதுக்களால், மாயா இயந்திரம் போன்ற

உடம்பினுள் ஆன்மா வேறு உளது எனப் பொருள் உரைக்க. மாயையின் காரியங்களாகிய இயந்திரம் போன்ற தனு என்க. இவ்வடை சமூகான்ம வாதத்தை மறுத்தற்குக் குறிப்பேது வாய்ப் புணர்க்கப் பட்டது. தனு - உடல்.

இச்சூத்திரத்தால் ஆன்மா எனப்படுவது தன் அறிவை விளக்கும் மாயையின் காரியங்களுக்கும் வேருய், தனக்கு உணர்வை விளக்கி வரும் முதற் பொருளுக்கும் வேருய் உளது எனக்கொள்க.



## நான்காம் சூத்திரம்

மன வாசகங்கடந்தார் ஆசிரியருடன் தங்கித் தொண்டு புரிந்து வருகையில், ஒழிந்த நேரங்களில் உரையாடல் வாயிலாக உண்மைகளைக் கேட்டறிந்து வருவாராயினர்:

ம-ர் : மூன்றாஞ் சூத்திரத்தில் நிலம் முதல் கலை வரை தத்துவங்கள் எண்ணப்படும் என்பதும், நனவு, கனவு முதலிய அவத்தைகள் உயிர்க்கு உள்ளன என்பதும் இடையில் கூறப்பட்டன. அவற்றின் விளக்கத்தைத் தெரிவித்தருள வேண்டுகிறேன்.

மெய் : முதற்கண் நூல்களில் தத்துவங்கள் என வைத்து எண்ணப்படுவனபற்றிக் கூறுகின்றோம்; அவற்றை உணர ஆன்மாவின் இயல்பு இனிது விளங்கும்.

உயிர் உலகத்தை அறிந்து நுகரும்போது அதன் விழைவு அறிவு செயல் ஆற்றல்களுக்கு உலக சம்பந்தமான பொருள்களின் துணை இன்றியமையாததாகின்றது. இஃது இருளில் உள்ள கண் பொருள்களைக் காணுதற்கு, விளக்கின் உதவி இன்றிமையாததைப் போன்றது. முதற்கண் நம் உடம்பில் அறிவும் செயலும் எப்படி நிகழ்கின்றன எனக் காண்போம்:

இக்கருத்துப்பட வரும் நான்காஞ் சூத்திரம்,

> ''அந்தக் கரண மவற்றினொன் றன்று; அவை
> சந்தித்த தான்மாச் சகசமலத் துணராது
> அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே''—என்பது.

இது மூன்றாஞ் சூத்திரத்தின் தொடர்ச்சியாக, ஆன்மாவின் இலக்கணம் உணர்த்துகின்றது.

இதன் பொருள்: ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்றன்றாயினும், மூல மலத்தால் தன் அறிவு விளங்காமையால், அமைச்சரோடு கூடி நின்று தன்தொழில் நடத்தும் அரசனைப்போல, அவற்றோடு சந்தித்து நிற்றலால் அஞ்சவத்தைப்படுவதாயிற்று என்பதாம்.

(ம-ர்) இச்சூத்திரத்தில் வரும் மூலமலம், அஞ்சவத்தை என்பவற்றை விளக்குவதற்கு முன் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு என்றவற்றுக்கு மேலுள்ள தத்துவங்களையும் விளக்கி அருளும்படி வேண்டிக் கொள்ளுகின்றேன்.

மெய் வாய் கண் மூக்குச் செவி என்பவற்ருல் உலகப் பொருள் களை உறுதல், சுவைத்தல், காணுதல், மோத்தல், கேட்டல் என்னும் ஐயுணர்வுகள் உண்டாகின்றன. இவ்வுறுப்புக்களிலுள்ள நுண்கருவி களுக்கு அறிவுப் பொறிகள் அல்லது வாயில்கள் என்பது பெயர். இவை ஐந்து. இவற்ருன் அறியப்படும் புலன்கள் சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் என ஐந்து. இவற்றின் பற்றுக் கோடாக (குணிகளாக) உள்ளவை மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என ஐந்து; இவற்றைப் பெரும் பூதங்கள் என வழங்குதல் மரபு. பூதங்களின் குணங்களை அறிந்து நுகரும் போது, அவற்ருல் வரும் இன்பத்தைப் பெருக்கவும், துன்பத்தைக் குறைக்கவும் எண்ணி, நாம் சில தொழில் களைச் செய்கிருேம். அவையும் ஐந்தாக வகுக்கப்படுகின்றன. அவையா வன புடை பெயர்தல், பொருள்களை இடம்பெயர்த்தல் அல்லது திரிவு செய்தல், கருத்தை வெளியிடுதல், மலம் நீர் கழித்தல். இணை விழைச்சு என்பன. இச்செயல்களைச் செய்யும் கருவிகள் வாக்கு, கால், கை, எரு வாய், கருவாய் என்னும் ஐந்து; இவை தொழிற் பொறிகள் எனப் படும். எனவே, நம் உடம்பில் நிலைபெற்றுத் தொழிற்படும் அறிவும் பொறி ஐந்து, தொழிற்பொறி ஐந்து, இவற்றின் எதிர் பொருள் களான பூதம் ஐந்து, அவற்றின் காரண நிலைகளான சூக்கும பூதம் அல்லது தன் மாத்திரை ஐந்து ஆக இருபதும் புறக் கருவி எனக் கொள்ளல் ஆகும்.

இனி, பொருள்களை அறிந்து நெருங்கியும், துரந்தும் வருகையில் புறப்பொருள்களின் இயல்புகளை இயைத்தும் வகைப்படுத்தியும் உணர் வதற்கு அகத்தே சில கருவிகள் உள்ளன. அவை அந்தக் கரணம் எனப்படும். அவற்றைப் பொதுவாக மனம், நெஞ்சு, உள்ளம் என்னும் சொற்களால் வழங்கினும், நூல்மரபு பற்றி அவை மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என நான்காக வழங்கப்படும்.

வெளியிலுள்ள ஏதேனும் ஒரு பொருள் அதன் ஒரு குணம் வாயிலாக நம் அறிவில் தட்டுப்படும் போது அதற்கு வாயிலாக உள்ள ஐம்பொறியுள் ஒன்றை இடமாகக் கொண்டு அதனை மனம் பற்றும்; இதனுல் விளைவது இஃது ஒன்று உள்ளது என்னும் முதற் பதிவே ஆகும். இப்பதிவு நிருவிகற்பக் காட்சி என்றும், வாயிற் காட்சி என்றும் குறிக்கப்படும். மனம் பற்றியதனைப் புத்தி இஃது இன்னது என நிச்ச யிக்கும்; அப்பொழுது மனத்தின் கண் வந்த பதிவும் முன்னரே பயிற்சி பற்றிச் சித்தத்தின் கண் நின்ற நினைவும் வெளிப்பட்டு இஃது இன்னது என்னும் சிறப்புணர்வு அகத்தில் உண்டாகும்; இஃது இன்னது எனத்

துணிவேன் என்னும் எழுச்சி ஆங்காரத்தால் உளதாவது. இது காட்சி பற்றி மனத்தின் தொழிற்பாடு காரணமாக உண்டாதலின், மானதக் காட்சி எனவும், பொருளை இன்னதென வேறு படுத்தி உணர்தலின் சவிகற்பக் காட்சி எனவும் குறிக்கப்படும். இதுகண்ட பொருளை அதன் பெயர், குணம், சாதி, செயல், பொருள் என்னும் ஐந்தனுள் ஒன்றானும் பலவானும் விசேடித்து அறிவது ஆகும். புறப்பொருளை அறிதற்கண், மனம் ஐம்பொறிகளுள் ஒன்றனைப்பற்றி நின்று அது வாயிலாக அதனைப் பற்றுவதாகிய முதற்பதிவு பொதுக்காட்சி எனவும், அதன்கண், அடங்கியுள்ள அடைகளை விரித்து 'இஃது இன்னது' எனச் சிறப்பாக உணர்வது சிறப்புக் காட்சி எனவும், அவ்வறிவு அகத்தேயுள்ள ஆங்காரம், சித்தம், புத்தி என்பவற்றோடு சேர்ந்த பின்னரே நிகழ்வது எனவும் உணர்ந்து கொள்க. இங்குக் கூறிய நான்கு அகக் கருவிகளுள் மனம் அகமும் புறமும் செல்வது எனவும், ஏனை மூன்றும் அகத்தே தொழிற்படுவன எனவும் அறிக. மேற்கூறிய இருபது கருவிகளோடு இந்நான்கையும் கூட்டத் தத்துவம் இருபத்து நான்காம். இவையெல்லாம் மூலப்பகுதியின் காரியங்களாய் உயிர்க்குப் போக்கியமாய் ஆன்மதத்துவம் எனப்படும். அந்தக் கரணங்களின் பெயரையும் தொழிலையும் பின்வரும் வெண் பாவினால் உளங்கொள்க.

> ''அந்தக் கரணம் அடைவே உரைப்பக்கேள்
> அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம்-சிந்தை இவை
> பற்றியது நிச்சயித்துப் பல்கா லெழுந்திருந்தங்(கு)
> உற்றதுசிந் திக்கும் உணர்''.

மனம் பற்றும்; அது பற்றியதனைப் புத்தி நிச்சயிக்கும்; அவை தொழிற்படுங்கால் ஆங்காரம் யான், எனது எனப் பல்கால் எழுந்து ஊக்கும்; சிந்தை இவ்வாற்றான் வந்ததை மறவாது உட்கொள்ளும். சொல்லும் பொருளும் சிந்தையின்கண் அடங்கி நின்று மனம் அதனைச் சார்ந்தபோது வெளிப்படும் எனக்கொள்க.

இவை பற்றுதல் முதலியவற்றைச் செய்து ஆன்மாவே எனும் படி நிகழினும், யான் பற்றினேன், யான் நிச்சயித்தேன், யான் எழுந்தேன், யான் சிந்தித்தேன் எனத் தம்மை நோக்கி அறிய மாட்டா; ஆதலால், ஆன்மா இவற்றின் வேறு. ஆயினும் இயற்கை யாகத் தன்னைப்பற்றியுள்ள மூலமலத்தால் ஆன்மா உணர்வு விளங் காது நிற்றலால், இவற்றோடு கூடி நின்று அஞ்சவத்தைப்படுகின்றது.

இக்கருத்துப்பட வரும் நான்காஞ் சூத்திரம்.

> ''அந்தக் கரண மவற்றினென் றன்று; அவை
> சந்தித்த தான்மாச் சகசமலத் துணராது
> அமைச்சர சேய்ப்பறின் றஞ்சவத் தைத்தே''—என்பது.

இது மூன்றுஞ் சூத்திரத்தின் தொடர்ச்சியாக, ஆன்மாவின் இலக்-கணம் உணர்த்துகின்றது.

**இதன் பொருள் :** ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்றன்றுயினும், மூல மலத்தால் தன் அறிவு விளங்காமையால், அமைச்சரோடு கூடி நின்று தன்தொழில் நடத்தும் அரசனைப்போல, அவற்றோடு சந்தித்து நிற்ற லால் அஞ்சவத்தைப்படுவதாயிற்று என்பதாம்.

(ம–ர்) இச்சூத்திரத்தில் வரும் மூலமலம், அஞ்சவத்தை என்பவற்றை விளக்குவதற்கு முன் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு என்ற வற்றுக்கு மேலுள்ள தத்துவங்களையும் விளக்கி அருளும்படி வேண்டிக் கொள்ளுகின்றேன்.

மெய்: யாமும் அவற்றை விளக்கவே எண்ணினேம்; இடையில் பொருள் இயைபு பற்றி எளிதின் விளங்குதற் பொருட்டு நான்காஞ் சூத்திரத்தைச் சொற் செய்து கூறினேம்.

ஆன்மதத்துவங்களைப் போக்கியம் (நுகரப்படுவன) என்றேம். இவற்றின் முதற் காரணமாகிய முலப்பகுதி (பிரகிருதி அல்லது Procreatrix) உயர்ந்த நூல்களுள் பண்பாலாகச் சுட்டப்படுகிறது. ஆடவனைத் தன் ஆடை, அணி, குணம் என்பவற்றால் மயக்கும் மகள் போலத் தன் காரியமாகிய சத்துவம் இராசதம் தாமதம் என்னும் குணங்களானும், காமம் வெகுளி மயக்கம் என்பவற்றானும் மயக்குவது இம்மூலப் பகுதியாகிய பெண். மான் என்னும் பெயரும் அதற்கு உண்டு.

ஒரு பெண் போக நுகர்ச்சியில் சாய்வு உடையனையுள்ள ஆடவனையே மயக்கக்கூடும். அதுபோல, ஆன்மா போக நுகர்ச்சிக்கு உரியனாய் நிற்கும் நிலையை உண்டு பண்ணும்கருவிகள் உள்ளன. அவை மாயை, கலை, காலம், நியதி, வித்தை, அராகம், புருடன் என ஏழாக வைக்கப்படும்.

இவற்றுள் மாயை என்பது அசுத்த மாயையின் கலக்குண்ட பாகமாய் உயிரின் ஆற்றலைப் பொதுவாக விளங்க வைப்பது. இஃது உயிர்க்கு உட்சட்டை போன்று நின்று, உறங்கி விழித்தபின் சுகமாக உறங்கினேன் என்று உணர்தற்கு ஏதுவாய் உள்ளது. இதனை ஆனந்த மயகோசம்என்று உபநிடதமும், காரண சரீரம் என்று ஆகமமும்கூறும். கலை என்பது மலத்தின் ஆற்றலைச் சிறிது நீக்கி உயிரின் செயலாற்றலை விளக்கி அதன் அறிவை அந்தக் கரணங்களில் உய்ப்பது. காலம் அச் செயற்குத் துணைக்காரணமாய் நின்று, இறப்பு நிகழ்வு எதிர்வு எனப் பாகுபட்டு நின்று உயிர்க்கு நுகர்ச்சியை எதிர் பார்க்க வைப்பதும், நிகழ்த்துவதும், முடித்து வேறொன்றை எதிர் பார்க்க வைப்பது மாகிய செயலைச் செய்து கலையோடு உடன் நிகழ்வது. நியதி உயிர் தான் செய்த வினைப்பயனைத் தானே நுகரும்படி நியமிப்பது. வித்தை உயிரின் அறிவாற்றலை விளக்குவது. அராகம் அதன் விழை வாற்றலை விளக்குவது, கலை முதலிய ஐந்தனோடுஞ் சேர்ந்து மூலப் பகுதியின் குணங்களில் தோயும் சாய்வுடையனாய் நிற்கும் உயிர் புருடன் எனப்படும். கலை முதல் ஐந்தும் உயிர்க்கு அறிவு, இச்சை, செயல்களைப் பிரித்து விளக்குவனவாதலின் விஞ்ஞானமய கோசம் என்றும், சட்டை போல் உடன் நின்று உதவுதலின் கஞ்சுகசரீரம் என்றும் வேத ஆகமங்களிற் கூறப்படும். மாயை உட்சட்டை போல வும், கலை வித்தை அராகம் மேற் சட்டை போலவும், காலம் அடிநிலை போலவும், நியதி தலைப்பாகை போலவும் நின்று உதவுவன.

மாயை முதல் புருடன் வரை எண்ணப்படும் ஏழு தத்துவங் களும் வித்தியாதத்துவங்கள் எனப்படும். இவை உயிரை நுகர்வோனா கச் செய்தலின் போசயித்துரு தொகுதி எனவும் படும்.

ம-ர் மேல் பொறிகளாகிய புறக்கருவிகள் வாயிற் காட்சி அல்லது நிருவிகற்பக் காட்சிக்கு வாயிலாக உள்ளன என்றும், மனம் முதலிய அந்தக் கரணங்கள் பொருள்களை இஃது இன்னது எனச் சவிகற்பமாகக் காணும் மானதக்காட்சிக்குக் கருவிகள் என்றும் கூறினீர்கள். அவற்றைப் போலக் கலை முதலிய கருவிகள் ஏதேனும் ஒன்றற்குக் கருவிகள் எனப்படுவது உண்டோ என அறியும் விருப்புடையேன்

மெய்: உண்டு; சவிகற்பக் காட்சிக்குச் சிறந்த கருவியாக உள்ள புத்தி ஒரு பொருளை இன்னது என நிச்சயிக்கும் போது தன்கண் பதிந்துள்ள வினைகளுக்கு ஏற்றபடியும், எதிர்ப்பட்ட பொருளின் கண் மிக்குத்

தோன்றும் குணம் பற்றியும், சத்துவம் முதலிய மூவகைக் குணங்களுள் ஒன்றன் வடிவாய்ப் பரிணமித்து இன்பம், துன்பம், மயக்கம் என்னும் மூன்றனுள் ஒன்றாய் நிற்கும். இக்குணத்தை உறவாக, பகையாக, நொதுமலா , உயிர்க்கண் கொண்டு வருபவை அராகம், வித்தை, கலை என்பவையே ஆகும். உயிர், அக்குண வடிவை இஃது இன்பம், இது துன்பம், இது மயக்கம் எனக் காணுதலோடு, அக்குணங்கள் தன் கண்மிக்குத் தோன்றும்படி அவற்றின் வண்ணமாய் அழுந்தி நின்றும் அறியும். அவ்வாறு அறியும் போது, யான் இன்புறுகின்றேன், துன்-புறுகின்றேன், மயங்குகின்றேன் என உணரும். இவ்வுணர்வு தன் வேதனைக் காட்சி எனப்படும். இதற்குக் கருவி கலை முதலியவை; எதிர் பொருள் புத்தியின் மேலவாயுள்ள மூலப்பகுதியின் குணங்களே ஆகும். உணர்வோன் புருடன் என நிற்கும் உயிர். இதனால் மூவகைக் காட்சி களையும் உணர்ந்து கொள்க.

ம-ர் இது வரையில் விளக்கப் பெற்ற ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு, வித்தியாதத்துவம் ஏழு ஆக முப்பத்தொரு தத்துவங்களுக்கு மேலும் தத்துவங்கள் உள்ளனவா? உள்ளன எனின், அவற்றையும் விளக்கி அருளவேண்டுகிறேன்.

மெய்: இவற்றுக்கு மேல் சுத்த தத்துவங்கள் அல்லது சிவ தத்துவங் கள் என ஐந்து உள்ளன. அவை சுத்தமாயையில், முதல்வனது சத்தி தோய்தலால் விளையும் விருத்திகளே ஆகும். முதல்வனது அருளாற்றல் அறிவுச் செயல் என இருவகைப்பட்டு, சுத்த மாயையை அறிவு அளவில் நோக்கியும், செயல் அளவில் கருதியும், இரண்டும் ஒத்த நிலையில் நோக்கியும் கருதியும், செயல்மிக அறிவு குறையவும், செயல் குறைய அறிவு மிகவும் நோக்கியும் கருதியும் நிற்றல் காரணமாக விளைவன. இவை முறையே நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை எனப் பெயர் பெறும். இவை கலை முதலியவற்றைச் செலுத்தித் தொழிற்படுத்துவன; இதனால் இத்தொகுதி பிரேகத் தொகுதி எனப் பெயர் பெறும்,

இவை பிற தத்துவங்களைச் செலுத்துங்கால், நாதம் மாயை யினையும், விந்து கலை காலம் நியதிகளையும், சாதாக்கியம் புருடனையும், ஈசுரம் அராகத்தினையும், சுத்தவித்தை வித்தையினையும் செலுத்தும் எனக்கொள்க. இனி, மாயை சித்தத்தினையும், கலை ஆங்காரத்தை யும், வித்தை புத்தியினையும் அராகம் மனத்தினையும் பற்றி நடத்தும் எனவும் அறிக,

ம-ர்: அஞ்சவத்தை பற்றி விளக்கியருளும்படி வேண்டுகிறேன்.

மெய்: உயிர் சாராந்ததன் வண்ணமாந் தன்மையுடையது. அதற்குச் சார்பாய் உள்ள பொருள்கள் மூன்று; அவை மலம், மாயை, அருள் என்பவை. இவை கண்ணுக்குச் சார்பாய் உள்ள இருளும், விளக்கும், ஞாயிற்றின் ஒளியும் போல உள்ளவை என அறிக.

உயிர் இருள் மலத்தில் அழுந்தி அறிவு விளங்காமல் உள்ள நிலை கேவலம் எனப்படும். அந்நிலையில் அது மாயையின் காரியங்களைப் பற்றிச் சிற்றறிவு விளங்கப்பெறும் நிலை சகலம் எனப்படும். முன்னையது பிறப்பிற்கு வாராத பண்டைய நிலை: பின்னையது பிறப்பிற்பட்டு உழலும் நிலை. இனி உயிர் இருள்மலப் பிணிப்பும், மாயை காரியச்சார்பும் விட்டு இறைவன் திருவருளையே சார்பாகக் கொள்ளும் நிலை சுத்தநிலை எனப்படும். கேவலம், சகலம், சுத்தம் என இங்குக் கூறிய நிலைகள் அடிப்படை நிலைகளாகிய காரண அவத்தைகள் எனப்படும்.

இருளில் உள்ள ஒருவன் தனக்குத் துணையாய் உள்ள ஒளிகள் விளக்கும் திறனுக்கு ஏற்றபடி பொருள்களைக் காணுந்திறன் வேறு படுதல்போல, ஆணவ மலத்தின் மறைப்பாற்றலைக் குறைத்து உயிரின் அறிவை விளக்கும் கருவிகளின் ஏற்றத்தாழ்வுகளுக்கு ஈடாக, அறிவு விளக்கமும் படிநிலையில் அமையும். அவற்றை நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்) என வகைப்படுத்திக் கூறுதல் மெய்ந்நூல் மரபு. இவை மேற்கூறிய காரண அவத்தைகளிற்படுவன ஆதலின், காரிய அவத்தைகள் எனப்படும்.

நாம் விழிப்பு நிலையில் அயர்வு எய்துகிறோம் எனக் கொள்க. முதற்கண், பொருள்களைக்கண்டும் காணாது, கேட்டும் கேளாது, இவ்வாறு பொறியுணர்வு மெத்தென நிகழும். இது சகலத்திலிருந்து கேவலத்திற்குக் கீழ்நோக்கிச் செல்லும் நிலையில் சாக்கிரம் எனப்படும். இதில் முப்பத்தைந்து கருவிகள் தொழிற்படும். அவை அறிவுப். பொறி ஐந்து, தொழிற்பொறி ஐந்து, அவற்றால் விளங்கும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், பேச்சு, கொடை, நடை, போக்கு இன்பம் என்னும் விடயங்கள் பத்து, பிராணன் முதலாக எண்ணப் படும் வாயுவின் கூறுகள் பத்து, மனம் புத்தி ஆங்காரம், சித்தம் என்னும் அகக்கருவி நான்கு, புருடன் எனப்படும் உள்ளம் ஒன்று என இவை.

இவற்றில் பொறிகள் பத்தும் பருவுடலில் தொழிற் படாது கிடப்ப, உயிர் நுண்ணுடலைப்பற்றி, நனவிற் கண்டனவும் செய்தனவு மாகிய வற்றைக் கனவாகக் கண்டும் செய்தும் நிற்கும் நிலை சொப் பனம் அல்லது கனவு ஆகும். இங்குப் பொறிகள் பத்தும் நீங்கிய ஏனை இருபத்தைந்தும் கருவிகள்; இதற்கு இடம் கழுத்து: மேலையதற்கு இடம் புருவநடு.

இனி, இவ்விருபத்தைந்து கருவிகளில் ஏனைய செயலற்று நிற்ப சித்தம், பிராணன், உள்ளம் என்பவை மட்டும் செயற்பட நிற்கும் நிலை உறக்கம் அல்லது சுழுத்தி, இங்கே சிந்தையின நினைவு உண்டு; ஆயினும், மனம் இன்மையின் அந்நினைவை இன்னதென எடுத்து மொழிவது கூடவில்லை. இதற்கு இடம் நெஞ்சு.

இனி, இவற்றுள் சித்தமும் தொழிற்படாத நிலை பேருறக்கம் எனப்படும் துரியம்; இதற்கு இடம் கொப்பூழ். எஞ்சியுள்ள இரண்டனுள் பிராணனும் அடங்கும் நிலை உயிர்ப்படங்கல் அல்லது துரியாதீதம்; இதற்கு இடம் மூலாதாரம.

இனி, மேல் நோக்கிச் சகல நிலையை அடையும் போது இம் முறையே அவ்வவ்விடங்களில் அவ்வக் கருவிகளோடு கூடி நின்று உள்ளம் எனப்படும் புருடன் அவ்வவ்வவத்தைகளை எய்துமென் எனக் கண்டு கொள்க. இன்னும், நனவில் உயிரின் அறிவு பருவுடம்பு முதல் ஐந்தையும், கனவில் கனவு உடல் (நுண்ணுடல்) முதலிய நான்கினை யும், உறக்கத்தில் குணவுடல் முதல் மூன்றனையும், பேருறக்கத்தில் கஞ்சுக உடல், காரணவுடல் என்னும் இரண்டனையும், உயிர்ப்படக் கத்தில் காரணவுடல் ஒன்றனையும் பற்றி நின்று அவ்வவ்வவத்தைகளை எய்தும் என்பதும் உணர்க. இவற்றை மறப்பு நிலை எனக்கொள்ளல் ஆம்.

இனி, சகலம் எனப்பட்ட விழிப்பாகிய, பொருள்களைக் கண்டு அழுந்தி நிற்கும் நிலையிலும், ஐந்து அவத்தை உள்ளன. அவை வாயிற் காட்சி, மானதக் காட்சி, இஃது இன்பம் என்பது போல உணர்தல், யான் இன்புறுகின்றேன் என உணர்தல், உயிர்ப்படங்கி அக்குணங் களில் அழுந்துதல் என்பன. இவை சகலத்தில் நனவு முதலிய ஐந்த வத்தைகள் ஆகும். இவற்றிற்கு இடம் புருவநடு, இது மாசகலம். உணர்த்து முறை என நூல் களிற் குறிக்கப்படும்.

இனி, சுத்தத்தின் கண்ணும் இவ்வாறு ஐந்து நிலைகள் உள்ளன. அவை முன்னர் விளங்கும். இவை அனைத்தும் ஒருவன் அறிவில் விளங்கித் தோன்றும்படி நம்மால் வைக்கப்பட்டது நான்காம் சூத்திரம்.

பின் மாணுக்கர் பரமாசாரியன் கழல்களை வணங்கிச் சென்று, கேட்ட பாடங்களைச் சிந்தித்தலும், ஆசாரியன் அறிவுறுத்தியபடி சந்திகளைச் செய்தலும், திருக்கோயிற் பணிகளை இயற்றுவதும் உடையராயினர்.

அவ்வூரில் உள்ளவர்கள் இவற்றைக் கண்டும் கேட்டும் உணர்ந்து மெய்கண்டதேவர் தம் மாணுக்கருடன், எழுந்தருளியிருந்து நிட்டை கூடவும், மாணுக்கர்க்கு மெய்ந் நூற்பொருளை உரைத்து வரவும் வேண்டிய இடம் முதலிய வசதிகளைச் செய்வாராயினர். இச் செய்தி எங்கும் பரவத் தொடங்கிற்று.



**மெய்:** முதல்வனுக்கு உயிர்களின் பாசப்பிணிப்பை நீக்கிச் சிவத்துவ விளக்கம் எனப்படும் பேரின்ப நுகர்ச்சியைக் கொடுக்க வேண்டும் என்னும் இரக்கம் இயல்பாக உண்டு. அவ்விரக்கமே சத்தி (ஆற்றல், வல்லமை) சத்தியும் சிவமும் உடம்பும் கையும்போலவும், ஞாயிறும் ஒளியும் போலவும் தாதான்மிய (ஒன்றன் இருமை) சம்பந்தத்தான் இயைந்து நிற்றலின், யாண்டும் பிரிப்பின்றியே நிற்கும். இவ்வுண்மையை முதல்வன் அருளே கண்ணாக அவனைக்கண்டவர்கள் உணர்வர்.

ஆகாயத்திற் காணப்படும் மீன்கள் இருவகைப்படும்; அவை நாள் மீன், கோள்மீன் என்பவை. இவற்றுள் வியாழன், வெள்ளி முதலிய கோள்கள் ஞாயிற்றின் ஒளியாவ் விளங்குவன ஆதலால், அதன் ஒளியில் அவை தோன்றாது ஒடுங்கி நிற்பினும், தாம் ஞாயிற்றின் வேறாய், அதனோடு உடனாய் நின்றே ஒளிர்வன; அதுபோல, உயிர்கள் சிவசத்தியால் அறிவு விளங்கி, அவன் உடனாய் மன்னத் தமக்கு உரிய பொருள்களை அறிந்து நுகர்ந்துவரும். அருளுக்கும் உயிர்களுக்கும் உள்ள சம்பந்தமே அத்துவிதம் (இரண்டன் ஒருமை) இரண்டாய் நிற்றல் இன்மை எனப்படும்.

"வெய்யோன் ஒளியின் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல - மெய்யவனின்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்.

அருளுண்டாம் ஈசற்கு அதுசத்தி அன்றே
அருளும் அவனன்றி இல்லை - அருளின்(று)
அவனன்றே இல்லை அருட்கண்ணார் கண்ணுக்கு
இரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து.

இரவி-ஞாயிறு. ஞாயிறு தன்ஒளியோடு தாதான்மியமாய் நிற்றல் போல, அரன் தன்அருளோடு ஏய்ந்து நிற்கும்என உரைத்துக்கொள்க. இவ்வெண்பாக்களை மனப்பாடம் செய்து கொள்க.

இதனோடு அன்றைய பாடம் முடிந்தது.

## ஆறும் சூத்திரம்

ஏழாம் நாள் மெய்கண்டதேவர் திருமடத்தில் காலை 7-30 மணி அளவில் வழக்கம் போல் பாடம் தொடங்கியது. அன்று மற்றும் பல கற்றறிந்த மாணாக்கர்கள் ஆசிரியரை வணங்கித் திருநீறும் உத்தரவும் பெற்று மனவாசகங்கடந்தாருக்கு அடுத்து வரிசையாக இருந்தனர். அவர்களிற் பெரும்பாலோர் துறையூரில் அக்காலத்துச் சிறந்த சிவாசாரியராக விளங்கியிருந்த சகலாகம பண்டிதருடைய மாணாக்கர்கள். அவ்வாசிரியர் திருமுறைகளிலும் சிவாகமங்களிலும் சிறந்த பயிற்சியுடையவராய், மெய்ந்நூற் கலைகளை மாணாக்கர்க்கு உணர்த்தி வருவோராய் ஒழுக்கத்தில் தலைசிறந்தவராய் விளங்கிய விற்பன்னர்.

மனவாசகங் கடந்தார் முன்னாள் பாடத்தைச் சுருக்கமாகச் சொல்லி மேலும் வினாயினார்.

முதல்வன் திருவருள் உயிர்களோடு கலந்து உடனின்று அவற்றை அறிவித்தும் செலுத்தியும் வருகின்றது; ஆயினும் அவை தம்மையும் அறியா, முதற்பொருளையும் அறியா என்பது நேற்றைய பாடத்தின் சுருக்கம். அங்ஙனம் முதற்பொருள் உயிர்களால் அறியப் படுவதில்லை எனின், அஃது உண்டு என்பது எவ்வாறு துணியப்படும்?

மெய்: இது மிகப் பொருத்தமான வினா; சிறிது ஆராய்ந்து முடிவு காணவேண்டும்; ஆதலால் மனம் ஒருங்கிக் கேள்.

முதல்வனை நம் அறிவால் அறியப்படும் பொருள் எனக் கொள்ளின் அவன் அவ்வாறு அறியப்படும் ஏனைய பொருள்கள் போல அழிபொருளாயும் அறிவில் பொருளாயும் முடிவன். இனி ஒருவாற்றானும் அறியப்படாத பொருள் எனின், அறியப்படாத பொருளால் பயன் கிட்டாமையின் இல்பொருளேயாய் முடிவன். இவ்விருதிறனும் கூடாமையின், வேறோராற்றான் ஒற்றித்து நின்று உணரப்படும்.

சித்துச் சத்தே முதல்வன் என மெய்யுணர்வின் நிலைபெற்று உயர்ந்தோர் கூறுவர்.

அழிபொருளும், இல்லாத பொருளும் அசத்து எனக்குறிக்கப்படும். முதல்வன் சுட்டறிவால் அறியப்படாமையால் சித்துப்பொருள் (அறிவுடைப்பொருள்) எனவும், ஒற்றித்து நின்று உணரும் மெய்உணர்விற்கு விளங்கிநிற்றலின் சத்து (தன்னிலை மாறுபடாத செம்பொருள்) எனவும் கொள்ளப்படுவன். இதற்குச்சூத்திரம்:

''உணருரு அசத்தெனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத் தாம்என
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே-'' எனவரும்.

மா-ர். முதல்வனை உணர் உரு எனின் அசத்து ஆவன்; உணராது (எவ்வாற்றானும் உணரப்படாது) எனின் இன்மையாய் முடிதலின் உணருருவாதலும் உணரப்படாது ஆதலும் ஆகிய இருதிறனும் அன்றிச் சிவசத்தாம் என இரண்டு வகையினானும் உலகு இசைக்கும் எனச் சூத்திரத்திற்குப் பொருள் உரைத்தல் வேண்டும் என்பது மேற்கூறியதிலிருந்து விளங்குகிறது. மேலும் சூத்திரத்து உள்ள சிவம் என்னும் சொல் சித்து என்னும் பொருளது என்பதும் தெரிகின்றது.

அன்றியும். சிவசத்து என்னும் தொடர் ''சத்யம் ஞானம் அநந்தம் ப்ரஹ்ம'' என்னும் தைத்திரீய உபநிடதத் தொடரில் வரும் முதல் இரண்டு சொற்களையும் நினைவூட்டுகின்றது.

மெய்: நீ கூறியது முற்றிலும் உண்மை. சிவசத்து என்னும் தொடர் முதல்வனது சிறப்பியல்பு தெரிவிப்பது. சிறப்பியல்பு, தன்னியல்பு, சொரூபலக்கணம் என்பவை ஒரே பொருளைத் தருபவை.

மா-ர் முதல்வனை உணரப்படுபவன் எனவும் உணரப்படாதவன்எனவும் கூறுதல் முரண் போலத் தோன்றுதலின், அவை முரணாமையை விளக்கியருளல் வேண்டும்.

மெய்: உயிரின் அறிவை அஃது எய்தி நிற்கும் சகலம், சுத்தம் என்னும் நிலைகள் பற்றி, மூன்றாகப் பகுத்துணர்தல் வேண்டும். அவை பாச ஞானம், பசுஞானம், சிவஞானம் எனப்படும்.

பாசமாகிய தத்துவங்களால் உயிர்க்கு விளங்கும் அறிவு பாச-ஞானம். இதுவே சுட்டறிவு எனப்பட்டது. இதற்குக் கருவி பொறிக-ளாற் கண்டுணரும் காட்சியும், குறிகளான் ஆராய்ந்து உணரும் அனு-மானமும்' நம்பத்தக்க மெய்யுணர்வுடையோன் மொழியால் உணரும் ஆகமமும், என மூவகைப்படும். அம் மூவகைக் கருவிகளான் வரும் உணர்வு காட்சியுணர்வு, அனுமானஉணர்வு, ஆகமவுணர்வு எனப்படும். இவ்வுணர்வுகளை அளவை உணர்வு எனவும், கருவிகளாகிய காட்சி, அனுமானம், ஆகமம் என்பவற்றை அளவைகள் எனவும் கூறுவர். அளத்தற்கருவி அளவை. அளத்தல்- எதிர்ப்பட்ட பொருளை ஐயந்திரி-பின்றி உள்ளவாறு அறிதல், அளவை எனினும், பிரமாணம் எனினும் ஒக்கும். பிரமாணம் என்னும் சொல்லியல்பு பிரமாகரணம் பிரமாண-மென உரைக்கப்படும். பிரமா அல்லது பிரமை-மெய்யறிவு, கரணம்-அதனை எய்துவிக்கும் சிறந்த கருவி.

காட்சி, அனுமானம், ஆகமம் என்ற மூன்றனோடு அருத்தா-பத்தி, பாரிசேடம், இன்மை, ஐதிகம் முதலாக மேலும் சில கூட்டியும் கூறுதல் உண்டு. அவையும் இம் மூன்றனுள் ஒன்றாய் அடங்கும். இனி, பசுஞானம் இன்னதென விளக்குவாம். ஆன்மா தன்னியல்-பைத் தானே அறியாமையின், யாம் மூன்று நான்காம் சூத்திரங்-களால் அறிவித்தது போல, ''நான் யார்'' என உள்நோக்கு தற்-சோதனை (Self imtrospection.)யின் வைத்து ஞானகுரு தக்கார்க்கு உணர்த்துவன். அந்த நெறியினல் தன்னியல்பை உள்நோக்கி உணர்வார்க்கு மனம் புத்தி ஆங்காரம் சித்தம் என்பவை ஆன்மாவே எனத்தோன்றும், அவை கண்ணிற்குப் பொருள் களைக் காட்டும் விளக்கைப் போல, ஆன்மாவுக்கு உடனின்று புறப்பொருள்களை விளக்குவனஅன்றித் தாமே அறியா. ஆன்மா அவற்றைக் கொண்டு பிறபொருள்களை அறிதல் மட்டு-மன்றித் தாமே அறியா, ஆன்மா அவற்றைக் கொண்டு பிற பொருள்களை அறிதல் மட்டுமன்றித் தன்னை நோக்கியும் கண்டு நான் இவ்வியல்பினன் என அறிவது. இவ்வாறு தன்னைக் கருவிகளின் வேறுபடுத்து உணரும்போது ஆன்மாதன் வியாபக நிலையைத் தலைப்-பட்டு எல்லாந்தானே என நினைக்கும்படி தன் நிறை நிலையை எய்தும்; இங்ஙனம் ஆன்மா தன் வியாபக நிலையை எய்தும்படி உதவுவது இறைவன் திருவருளேயாகும். அவ்வருளின் உண்மையை அறியாத நிலையில், இங்ஙனம் சாதனையில் நின்ற சிலர், யானே உலகு எல்லாம்; யான் பெரும்பொருள் (அஹம்ப்ரஹ்மாஸ்மி) எனத்

தம்மையே முதற்பொருளாக உணர்வது உண்டு. அந்நிலையில் அவர்க்கு உண்டாகும் உணர்வு பசுஞானம் எனப்படும். இவ்விடத்து இவ்வாறு உணரும் உயிர் தத்துவங்களினின்றும் நீங்கிற்றேனும், மலவாதனையின் நீங்காமையின், அவ்வுணர்வு பசுத்துவ வாதனை பற்றி வரும் யான் என்னும் செருக்கு எனவே மெய்யுணர்ந்தோரால் எண்ணப்படுகின்றது. தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், சிவ ரூபம், ஆன்ம தரிசனம், சிவ தரிசனம், ஆன்ம சுத்தி, சிவயோகம், சிவபோகம் என்னும் பத்து ஞானச் செய்திகளுள் முதல் மூன்றன் பின்னர் நிகழ்வதாயுள்ள ஆன்ம ரூபமே இது. இறைவன் திருவருளின் உண்மையைத் தலைப்பட்டு உணர்வதே சிவரூபம். இச் சிவரூபம் என்னும் உணர்வு உதிக்கும் போது ''யான் முதல்'' என நின்ற முன்னைய துணிவுணர்வு அறியா மையாய்க் கழிந்து, யான் எல்லாம் செய்ய வல்லேன்; சிவனோடு ஒப்ப எல்லாச் செயலும் எனக்குக் கூடும் என்னும் உணர்வு உதிக்கும்; இவ்வுணர்வு ஆன்ம தரிசனம் எனப்படும். இங்கு யான் என்னும் செருக்கு நீங்கினும் சிவனது செயலைத் தன்செயல் எனக் கருதும் எனது என்னும் செருக்கு உளது; இதனைச் சிவசம உணர்வு என்பர்.

மேற்காட்டிய ஆன்ம ரூபமாகிய நான் முதல் (அஹம் பிரம்மாஸ்மி) என்னும் உணர்வும், ஆன்ம தரிசனம் எனப்பட்ட சிவ சமஉணர்வும் பசுத்துவ வாதனையால் யான், எனது என்னும் செருக்குப்பற்றி நிகழ்வன. இதனால், இவை பசு ஞானம் எனப்படும். மேற்கூறிய பாச ஞானத்திற்கும், இங்கு இதுவரை விளக்கப்பட்ட பசுஞானத்திற்கும் அப்பாற்பட்டவனே முதல்வன். இக்கருத்துப் பற்றியே முதல்வனை ''வாக்குமனாதீதன்'' என மெய்ந்நூல்கள் ஓதுகின்றன. வாக்கு-நாதம் முடிவான தத்துவங்களான் விளங்கும் பாசஞானம்; மனம் – அதனின் வேறாகிய, இருவகைப்படும் பசுஞானம்.

இனி, எல்லாச் செயலும் சிவன்செயல்; அவனன்றி ஓரணுவும் அசையாது எனப் பட்டாங்கு அறியும் அறிவு சிவதரிசனம் எனப்படும். இதனால் விளைவது ஆன்ம சுத்தி; அஃதாவது ஆன்மா மலமாயை கன்ம வாதனையின் நீங்கிய தூயநிலை. இந்த நிலையில், ஆன்மா திருவருள் ஒளியைத் தெளியக்கண்டு தனக்கோர் அறிவும் செயலும் இன்றி அதன் வழி நிற்கும். இங்ஙனம் அருளோடு ஒன்றி நிற்கும் நிலையே சிவயோகம். இது துரிய அருள்நிலை எனக் குறிக்கப்பெறும்.

இதற்குமேல், அருள் தனக்கு முதலாகிய சிவத்தைக் காட்டக் கண்டு அதனோடு ஒன்றி நின்று இன்புறு நிலையே சிவபோகம். இது துரியாதீத ஆனந்தநிலை எனப்படும்.

சிவயோகம், சிவபோகம் இரண்டும் ஞானநெறியில் தெளிதல், நிட்டை என்னும் முடிநிலைகள் ஆகும். இந்நிலையில் ஒருவனுக்கு விளங்கும் உணர்வு அருளே கண்ணாகக் காணும் காட்சி யாதலின், சிவ ஞானம், அருள் ஞானம், அனுபவ ஞானம், மெய்யுணர்வு என்னும் பெயர்களாற் கூறிக்கப்படும். இச் சிவஞானத்திற்கு விளங்குபவன் முதல்வன்.

ம-ர். எந்நூலானும் யாரானும் அறிந்துகொள்ள முடியாத அரிய உண்மையை நுமது பேரருளால் கேட்டுணர்ந்து கொண்டேன். அறிவு போல் அடர்த்து எழும் பாசஞானம், பசுஞானம் வரும்போது அறியாமையாய்க் கழிகின்றது; அப்பசுஞானமும் சிவஞானம் வரும்போது அறியாமையாய்க் கழிகின்றது. இனிச் சிவஞானத்தை அவ்வாறு கழிப்பதாய் ஒரு ஞானம் இன்மையின் அதுவே சுதந்திர ஞானம் எனவும், அச்சிவஞானத்தை அடிப்படையாகக் கொண் டெழும் கலைஞானங்களே சித்தாந்த ஞானம் (முடிநிலைத்தெளிவறிவு) எனவும் உணர்ந்துகொண்டேன்.

உபநிடதங்களில் வரும் சத்து, அசத்து என்னும் சொற்களின் பொருள்பற்றி ஓர் ஐயம் உளது; அதனையும் நீக்கித் தெளிவித்தருளல் வேண்டும். தைத்திரீயத்தல் "அசத்தே முதற்கண் இருந்தது; அதினின்றும் சத்து உளதாயிற்று" என உள்ளது. சாந்தோக் கியத்தில், "இது முதற்கண் சத்தாக அத்விதீயமாய் ஒன்றேயாக இருந்தது" என உள்ளது. இவை ஒன்றோடொன்று முரணுவன அல்லவா ?

மெய் : தலையாய பிரமாண நூல்கள் முரணுவன அல்ல. அவற்றில் முரணுவன போலத் தோன்றும் தொடர்கள் வரின், இடம்பற்றிச் சொற்களுக்குப் பொருத்தமான பொருளைக் காணுதலும், தொடர் களின் தாற்பரியப் பொருளை உணர்ந்து கொள்ளுதலும் தலையாய அறிவினர் மரபு.

சாந்தோக்கியத்தில் வரும் "சத்து" என்னுஞ் சொல் யாம் இச்சூத்திரத்து ஆண்டுள்ள சிவசத்து என்பதில் உள்ள கருத்தையே

குறிப்பது. ஏகம், சத்து என்பவை பரம் பொருளைக் குறிக்குஞ் சொற்கள். சத்து என்றது மாறுபடாத செம்பொருள் என்னும் கருத்தில்தான் வந்துள்ளது. தெய்வப் புலமைத் திருவள்ளுவர் மெய்யுணர்தல் என்னும் அதிகாரத்தில் இச்சொற்பொருளைக் கருத்திற் கொண்டே முதற்பொருளை ''மெய்ப்பொருள்'', ''உள்ளம் உள்ளது'', ''செம்பொருள்'' என்னுஞ் சொற்களாற் குறித்துள்ளார்.

இனி, தைத்திரீயத்தில் ''அசத்து'' என்றது இன்மையை அன்று. உருவப் பொருள்களின் காரண அருநிலையாகிய சத்தி ரூபத்தையே குறிக்கும். அங்குச் சத்து என்றது வியத்தி ரூபமாகிய புலப்படும் உருநிலையை என உய்த்துணர்ந்துகொள்க. சத்தி-ஆற்றல், வியத்தி-விளங்குநிலை. பொருள்கள் எல்லாம் புலப்படாது கலங்கிய ஆற்றலாகிய அருநிலை, புலப்படும் துலங்கிய உருநிலை என்னும் இருநிலைகளை உடையன. அவற்றுள் கலங்கிய அருநிலை காரணம் என்றும், துலங்கிய உருநிலை காரியம் என்றும் வழங்கப்படும்.

இன்று இவ்வளவோடு பாடத்தை முடிப்போம்; நாளை மேலே சிந்திக்கலாம்.



## ஏழாம் சூத்திரம்

எட்டாம்நாள் வழக்கம் போலப் பாடம் தொடங்கியது. மனவாசகங்கடந்தார் பாடத்தில் முதன்மையான பங்கு பற்றுவோராக இருப்பினும், மற்றும் பல்லோர் மெய்கண்ட முதல்வர் அருளாணை பெற்று அவரைத் தொழுதிறைஞ்சிப் பாடத்தைக் கேட்டுச் சிந்திப்பார் ஆயினர். இதனால், துறையூர்ச் சகலாகம பண்டிதர் வகுப்பில் மாணாக்கர்கள் குறையத் தொடங்கினர்.

**ம-ர் :** உணரப்படும் பொருளும், எவ்வாற்றானும் உணரப்படாத பொருளும் அசத்து எனப்படும். இவ்விருதிறனும் அன்றி, வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற முதற்பொருள் சிவசத்து என்பது ஆறாஞ் சூத்திரத்தின் சுருக்கமான பொருள்.

இஃது அசத்துஎன்றும், இது சிவசத்துஎன்றும் அறியும் பொருள் இவற்றுள் ஒன்றோ, வேறோ? வேறு எனின் அதனையும் சேர்த்து முப்பொருளாகக் கூறாது அசத்து, சிவசத்து என இரண்டே கூறியது என்னை ?

**மெய் :** இவ்வினாவை உட்கொண்டே மேலைச் சூத்திரத்திற்கு ஒரு புறன் அடை (ஒழிபு) இன்று கூறப்புகுகின்றோம்.

சத்தாகிய முதல்வன் காட்சியில் அசத்தாகிய உலகப் பொருள் எதுவும் முனைந்து தோன்றித் தன்னைஅழுந்தி அறியும்படி செய்வதில்லை ஆதலினால், சத்து அசத்தைச் தனக்கு வேறாகச் சுட்டியறிந்து நுகராது; அஃதாவது, அசத்தால் முதல்வன் பயன் கொள்வதில்லை. இனி அசத்து அறிவில்லது; ஆதலினால், அது சத்தை அறியமாட்டாது. இங்ஙனம் சத்தும், அசத்தும் தம்முள் ஒன்றனை ஒன்று நுகருமாறில்லாமையால், இவ்விரண்டையும் அறிவதாய பொருள் வேறு உண்டு; அதுவே மேல் மூன்று, நான்கு ஆம் சூத்திரங்களாற் கூறிப் போந்த ஆன்மா. அஃது இருதிறண் அறிவுளது எனக்கொள்க. இப் பொருண்மையைத் தரும் சூத்திரம்:

''யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்

சத்தே அறியாது; அசத்திலது அறியாது;

இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா'' - என வரும்.

மா-ர் : சத்தெதிர் யாவையும் சூனியமாகலின் அசத்தைச் சத்து நுகராது; அசத்து (உணர்வு) இலதாகலின் அது சத்தை அறிந்து நுகராது. ஆதலின், இருதிறனையும் அறியும் அறிவு ஒன்று உள்ளது. அஃது ஆன்மா என்பது இச்சூத்திரப் பொருள். இருதிறன் அறிவுளது சத்தும் அசத்தும் அல்லாத ஆன்மா, என்றதில் மேலும் பொருள் அடங்கியிருப்பின் தெரிவித்தருளல் வேண்டும்.

மெய் : நன்கு உணர்ந்தனை. இருதிறன் அறிவு உளது என்னும் தொடரை மூன்று வேற்றுமைப் பொருளில் கலந்து பொருள் தருமாறு அமைத்துள்ளோம்.

இரண்டாம் வேற்றுமைப் பொருள் பற்றி விரிப்பின், சத்தும் அசத்தும் ஆகிய இருவகையினையும் அறியும் அறிவுளது அவ்விரண்டும் அல்லாத ஆன்மா என விரிந்து பொருள் தரும்.

மூன்றும் வேற்றுமைப் பொருள் பற்றிச் சத்தாலும் அசத்தாலும் விளங்கி அறியும் அறிவுளது அவ்வான்மா எனப் பொருள் தரும்.

ஏழாம் வேற்றுமைப் பொருள் பற்றிச் சத்து, அசத்து என்னும் இரண்டின் கண்ணும் நிற்பதாகிய அறிவுளது ஆன்மா என்னும் பொருள் தரும்.

இவற்றை இயைத்து உணரின், ஆன்மா அசத்தை, அசத்தால் விளங்கி அறிந்து அசத்தின்கண் உள்ளதாயும், சத்தைச் சத்தால் அறிந்து சத்தின்கண் உள்ளதாயும் நிற்கும் சிறப்பியல்பு உடையது எனக் கொள்ளப்படும். அஃதாவது, உயிர், பிறப்பு நிலையில், உலகப் பொருள்களை அறிந்து அழுந்தும்; அங்ஙனம் அறிந்து அழுந்துதற்கண் அதற்கு வியஞ்சகமாயுள்ளவை நிலம் முதல் மாயை ஈறாகிய தத்துவங்கள். இங்ஙனம், அறிந்து நுகரும் நிலையில், அஃது அறியப் படும் பொருளின் வேறாய்த் தனித்து நில்லாது அதுவாயே நிற்கும். ஆன்மா புறப்பொருளாயும், பருவுடலாயும், ஐம்பொறிகளாயும், நுண்உடலாயும், அந்தக்கரணமாயும் இங்ஙனம் அனைத்துமாய் நின்று,

தற்சோதனை ஆய்வு நெறிக்கண் அவற்றை விடுமாறு மூன்றும், நான்காம் சூத்திரத்துட் காட்டப் பட்டது.

இங்ஙனமே வீட்டுநிலையில் ஆன்மா சத்தாகிய திருவருளால் அதன் முதலாகிய சிவத்தை வேறற அழுந்தி நின்று உணர்ந்து, சிவமாயே நிற்கும் என்றபடி. இதனால், ஆன்மா சதசத்து (சத்;அசத்து, எனப்படும். முன் அசத்தை அசத்தால் அறிந்து அசத்தாய் நின்று பின் சத்துடன் நின்று அசத்தின் நீங்கும். சிவமும் ஆன்மாவும் சைதன்னியம் (அறிவுடைப் பொருள்கள்) எனப்படினும், சிவ சைதன்னியம் தனித்து நின்று எதனையும் இயற்கையாய் ஒருங்கே அறிந்து நிற்பது; அறிந்ததில் அழுந்தி நுகராது; நான் என்னும் உணர்விற்குப் பொருளாயுள்ள ஆன்மசைதன்னியம் சார்ந்த-தன் வண்ணமாய் நின்று அறிந்து, அழுந்தி அப்பொருளை நுகர்வது என வேறுபாடு கண்டு கொள்க. இன்னும் இரு திறனையும் அறியும் அறிவுளது என்றமையால் இருதிறன் எனப்பட்ட சத்தும், அசத்தும் பிரமேயம்; ஆன்மா பிரமாதா; அதன் அறிவாற்றல் பிரமாணம்; அறிவு நிகழ்ச்சி பிரமிதி என்பது பெறப்படும். இரு திறனாலும் விளங்கும் அறிவுளது என்றமையான், அசத்தால் அசத்தை அறியும் போது உயிரின் அறிவுக்கு விளக்கும் பொருளாய் (வியஞ்சகமாய், உள்ளவை காட்சி, அனுமானம், ஆகமம் எனப்படும் அளவைகளாகிய பாசஞானம் என்பதும், சத்தான் விளங்கிச் சத்தை அறியும்போது தன்னின் வேறாகாது தனக்கு ஆதாரமாய் உடனிற்கும் சிவஞான மாகிய திருவருள் வியஞ்சகமாம் என்பதும் பெறப்படும். இரண்டன் பாலும் உள்ள அறிவு என்றதனால் கட்டு நிலையில் அசத்தின் பாலும் வீட்டு நிலையில் சத்தின் பாலும், ஈரிடத்தும் தனக்குக் கேடின்றி உள்ளது ஆன்மா என்பதும் பெறப்படும். பிரமை-மெய்யறிவு பிரமாணம் - மெய்யறிவிற்குக் கருவி; பிரமேயம் - மெய்யறிவுக்கு விளங்கும் பொருள். பிரமாணம் எப்போதும் பிரமேயம் ஆகாது; ஆதலால், ஆன்ம சிற்சத்தியே சித்தாந்த சைவத்தில் பிரமாணம் எனப்படும். ஏனைய காட்சி முதலியவை அச்சிற்சத்திக்கு வியஞ்சக மாதல்பற்றிப் பிரமாணம் என உபசரித்துக் கூறப்படும்.



## எட்டாம் சூத்திரம்

ஒன்பதாம் நாள் பாடம் நடைபெறுகிறது.

**ம-ர் :** முதல் நாள் மங்கல வாழ்த்துக் கூறுமுகத்தால் சிவநெறிக்கு உரிய இறைவன் சிவபிரான் என்பது உணர்த்தப்பட்டது.

இரண்டாம் நாள் உலகத்தைப் படைத்துக் காத்து நடாத்தும் முதல்வன் சிவபிரான் என்பதும், அவன் இருப்பை நூல்களால் மட்டும் அன்றி உலகின் மேல் வைத்து அனுமித்தும் உணரக்கூடும் என்பதும் உணர்த்தப்பட்டன. இவ்வனுமானம் உயர்ந்த நூல்களின் பொருளை ஐயத்தின் நீங்கித் தெளிவதற்குத் துணை செய்கின்றது. மேலும், படைப்பின் நோக்கம் உணர்த்தும் வகையில் ஆணவ மலத்தின் உண்மைக்குப் பிரமாணம் கூறப்பட்டது, மூன்றும் நாள் உயிர்களுக்கும் முதல்வனுக்கும் உள்ள சம்பந்தமும், மாயை கன்மம் என்னும் பாசத்தின் உண்மையும், இறைவனது அருட்சத்தியின் உண்மையும் உணர்த்தப்பட்டன. அதன் கண்ணே முதல்வன் ஐந் தொழில் செய்யும் வினை முதல் என அவனது பொதுவிலக்கணமும் கூறப்பட்டது

நான்காம் நாள் மூன்றுஞ் சூத்திரத்தால் யான் என்னும் உணற்விற்கு விடயமாய் உள்ள ஆன்மாவின் உண்மை உணர்த்தப் பட்டது. ஆன்மா முதல்வனின் வேறாய், மாயைக்கும் வேறாய் உண்டு என்பது அதனால் விளங்கிய கருத்து. ஆன்மா பல; முதல்வன் ஒருவனே. ஐந்தாம் நாள் நான்காஞ் சூத்திரத்தால் முன்றும் சூத்தி ரத்திற் பெறப்பட்ட ஆன்மா மூலமலம், மாயையின் காரியம் என்ப வற்றைச் சார்தல் பற்றிக் கேவலம், சகலம், சுத்தம் என்னும் காரண அவத்தைகளையும், ஒவ்வொன்றினும் ஐந்தவத்தையுறுதலாகிய காரியாவத்தையும் உடையது என அதன் பொது இலக்கணம் உணர்த்தப்பட்டது. முதற் சூத்திரத்தாற் பெறப்பட்ட மூலமலம் ஆன்மாவின் கேவல நிலையில் அதன் அறிவு செயல்களை முற்றிலும்

மறைக்கும் என்னும் சிறப்பியல்பும், சகல நிலையில் அஃது ஐந்து அவத்தை உறுதற்கு ஏதுவாவது என்னும் பொதுவியல்பும் உடன் உணர்த்தப்பட்டன.

ஆறும் நாள் ஐந்தாம் சூத்திரத்தால் திரோதான சத்தியின் இயல்புகூறும் முகத்தால் பாச இலக்கணம் குறிப்பான் உணர்த்தப் பட்டது. மேலும், இரண்டாம் சூத்திரத்தில் ஆன்மாக்களுக்குப் புனர் உற்பவம் கூறும் முகத்தான் உணர்த்தப்பட்ட அத்துவிதத்தின் இயல்பு விளங்க உணர்த்தப்பட்டது. புனர் உற்பவம் - மீளத் தோன்றுதல்.

ஏழாம் நாள் ஆறுஞ் சூத்திரத்தால் சத்தும், அசத்தும் வரை செய்து உணர்த்து முகத்தான், முதல்வனது சிறப்பியல்பு உணர்த் தப்பட்டது.

எட்டாம் நாளாகிய நேற்று ஆறும் சூத்திரத்தின் ஒழிபாக, ஆன்மா சத சத்தாமாறு உணர்த்தி அதன் சிறப்பியல்பு விளக்கப் பட்டது.

இன்று அசத்தை, அசத்தால் விளங்கி அறிந்து, அசத்தின்பால் உளதாயுள்ள ஆன்மா, அதனைவிட்டு நீங்கிச் சத்தைச் சாருமாறு எவ்வாறு என உணர்த்தி அருளல் வேண்டும்.

மெய்: நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பில் உழன்று வரும் உயிர் மக்கட் பிறப்பு எய்தி முன்னர்ப் புறச் சமயங்களைச் சார்ந்து விதிவிலக்கு உணர்ந்து ஒழுகும்; அதன் பயனாகப் பின் வைதிக நெறியைக் கடைப்பிடித்து ஒழுகும்; அவ்வொழுக்கத்தின் பயனாகச் சிவ நெறியைத் தலைப்பட்டு முதல்வனை உருவாகவும், அருவுருவாகவும், அருவாகவும் படிமுறையின் உணர்ந்து, புறத் தொழிலானும் புறம் அகம் என்னும் இரண்டானும், அகத் தொழிலானும் வழிபடும். இவ்வழிபாடே சரியை, கிரியை, யோகம் என ஆகமங்களிற் கூறப்படும் தவம். இத் தவமுயற்சியால், உயிர் பக்குவ முதிர்ச்சி அடைந்து, இருவினையொப்பு, மலபரிபாகம். சத்தி நிபாதம் என்னும் குறிகளைத் தன் அறிவில் நிகழப்பெறும். இத்தவ முதிர்ச்சியில், அதுகாறும் உள்நின்று உணர்த்திவந்த முதல்வன், சீவன் முத்தநிலை எய்தியுள்ள ஒரு சுத்த ஆன்மாவை ஆவேசித்து அப் பக்குவான்மாவுக்குப் பின்வருமாறு உணர்த்துவன்; ஓர் அரசகுமாரன் வேடரிடத்துத் தங்கி வளர்ந்தமையால் தன்

பெருமையும் உரிமையும் உணராது, விதிவிலக்குகளை மீறி அவர் ஏவல் வழி நின்று இழிவுற்றான்; இதனை உணர்ந்த அரசன் தன் மகன் உணரும் பருவம் வரும்வரையில், வேடர்மூலம் அவன் அறிவை வளர்த்து வந்து, பின் தானே அவனுக்கு ஏற்ற வடிவில் வந்து அவன் உண்மை இயல்பை உணர்த்தினான். உணர்ந்த உடன் மன்னவ குமாரன் வேடர் கூட்டத்தைவிட்டு அரண்மனைக்குச் சென்று, அரசன் ஏவல்வழி நின்று அரசச் செல்வம் முழுவதும் தனதேயாக நுகர்ந்து இன்புற்றிருந்தான். இதுபோல, சிவத்தைச் சார்ந்து தூய இறவாத பேரின்பம் நுகர்தற்கு உரிய நீ, ஐம்பொறி-களும் பிறவும் ஆகிய வேடர் கூட்டத்தில் சேர்ந்து பாசஞானம் உடையவனாய் நின் இயல்பும் நம் இயல்பும் மறந்து துயர் உழந்தாய் என உணர்த்துவன்; அவ்வுயிரும் அவன் உணர்த்தியவாறு உணர்ந்து தத்துவப்பிணிப்பின் நீங்கிச் சிவத்தைத் தலைப்பட்டுப் பேரின்பம் நுகர்ந்திருக்கும்.

இங்ஙனம் சிவன் குருவாய் வந்து உணர்த்த, உயிர் ஞானத்தினை உணரும். இதற்குச் சூத்திரம்:

''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னிய மின்மையின் அரன் கழல் செலுமே''- எனவரும்.

இதில் ஐம்புலன் என்றது ஆகுபெயரால் ஐம்பொறியை உணர்த்தும்; அஃது உபலக்கணம் ஆதலால், ஏனைத் தத்துவ தாத்து விகங்களும் உடன் கொள்ளப்படும். வளர்ந்து அயர்ந்தனை என மாறுக. இஃது ஏகதேச உருவகம் ஆதலின், உயிரை மன்னவன் மகன் என உருவகிக்க. அன்னியமின்மையின் - வேறுதலின்றி, அத்துவிதமாய்.

மா: சூத்திரப் பொருள் இனிது விளங்கிற்று. மாயை காரியமா-கிய தத்துவங்களை முன் விளக்கிற்கு ஒப்பிட்டீர்கள்; இங்கு அவை ஆன்மாவை மறைக்கும் என்கின்றீர்கள். இவை இரண்டும் முரண் அல்லவா?

மெய்: முரண் அன்று. முன்ஆணவமலம் இருளுக்கும், மாயா-காரியப் பொருள்கள் அவ்விருளை நீக்கிப் பொருள்களைக் காட்டும் விளக்கிற்கும் ஒப்பாக வைத்துக் கூறப்பட்டன.

இங்கு, ஆன்மா அத்தத்துவங்களைச் சார்ந்து அறிவு விளங்கினும், அவற்றால் காட்டப்படும் புறப்பொருள்களையே கண்டு நிற்றலால், தன்னியல்பை அறிய வொட்டாமல் விபரீத உணர்வைத் தோற்றுவிக்கின்றன என்பது கருதப் படுகிறது.

ஒரு பளிங்கு தன்னைச் சார்ந்த பன்னிறப் பொருள்களின் நிறத்தைப் பற்றி அவற்றின் நிறத்தையே தன்கண் காட்டித் தன் உண்மையியல்பைக் காட்டவில்லையல்லவா! அப்படியே ஆன்மாவும் தத்துவங்களும் உள்ளன எனக் கண்டு கொள். பளிங்கைச் சார்ந்த பொருள்கள் பளிங்கின் உண்மையியல்பைக் காட்டாமல் தம் நிறத்தையே பளிங்கின்கண் காட்டும்.

மா-: தத்துவங்களை விடின் உயிர் கேவலமாகிய அறியாமையில் அழுந்துகின்றது. அவற்றைப் பற்றினால், அவை தம் இயல்பையே ஆன்மாவின் மாட்டுக் காட்டுகின்றன. ஆகலின், அவற்றை விடுமாறு யாங்ஙனம்?

மெய் : மல வயப்பட்டுத் தத்துவங்களை விடும்போது கேவலம் ஆம். அங்ஙனம் அன்றி விழிப்பு நிலையில், நான் ஆர்? என ஆராயும் முகத்தால், யான் பொறி அல்லன், நுண் உடல் அல்லன், அந்தக் கரணம் அல்லன் என்றாற்போல, மனம் ஒருங்கி ஆராய்ந்து செல்லும் நிலையில், தன்னைத் தெளிவிக்கும் அறிவாய், உயிர்க்குயிராய் மறைந்திருந்து உணர்த்தி வந்த முதல்வன் திருவருள் வெளிப்படும். அத்திருவருளால் முதல்வனைக் கண்டு, அங்ஙனம் காணும் முகத்தால் தன்னையும் காணுதல் கூடும். இதுவே ''தத்துவங்களை விட்டு அரன்கழல் செல்லுதல்'' ஆகும்.

இந்தக்கருத்தை ஓர் உதாரணத்தில் வைத்து உணர்த்துவோம் :—

ஒளி தனித்துக் காணப்படுவதில்லை; அஃது ஒரு பொருளின் மீது பட்டு மீண்டுவரும் போது அப்பொருளைக் காட்டு முகத்தால் தானும் உள்ளது என அதில் அடங்கித் தோன்றும்; இவ்வாறுதான் ஒளியை அறிகிறோம். அதுபோல, ஆன்மா தனித்து உணரப்படுவதன்று; அது யாதானும் ஒன்றை விளங்கக் காணுமுகத்தால் தானும் உண்டு எனத் தன் உண்மை உணரப் படுவது. இதனால்தான், 'ஆன்மா

முதல்வனைக் கண்டபின் தன்னைக் காண்பது' என ஞானநூல்களாற் கூறப்படுவதாயிற்று. ''நின்னைக் காணு மாந்தர் தம்மையுங் காணுத் தன்மையோரே'' என்னும் பட்டினத்தடிகள் வாய்மொழி இக்கருத்துப் பற்றியதே ஆகும்.

**ம-ர் :** சகலத்தைத் தலைப்பட்ட ஆன்மா மீளக் கேவலத்தைத் தலைப்படுதலைக் காண்கிறோம்; அவ்வாறு சுத்தத்தைத் தலைப்பட்ட ஆன்மா மீளச் சகலத்தைத் தலைப்படுமோ என்பது ஐயம்.

**மெய் :** ஆன்மா, மாலைய காரியங்களால் சகலத்தைத் தலைப்படும் போது மூலமல சத்தி முழுவதும் கெடுவதில்லை; ஆதலால் அது மீளக் கேவலத்தைத் தலைப்படுகின்றது. ஆயின், முத்திநிலையில், மலசத்தி முழுவதுங் கெட அருளாற்றலால் முதல்வனை ஆன்மா அணைவதால், அது மீளச் சகலநிலையை அல்லது கேவல நிலையை அணையாது எனக் கொள்க. பாசத்தின் சத்திகட்கு அழிவுண்டு, திருவருள் ஆற்றலுக்கு அழிவில்லை என்பதும் உணர்க.

**ம-ர் :** "நெடுந்தகை நீ என்னை ஆட்கொள்ள யான் ஐம்புலன்கள் பற்றி விடுந்தகையேனை விடுதிகண்டாய்'' என முதல்வன் பாதத்தை அணைந்து இன்புற்ற மாணிக்கவாசகர் கூறுதலின், சுத்த நிலையை எய்தினோரும் ஒரோவழி உலகத்தில் மீளுதல் உண்டு என்பது பெறப் படுதலின், அடிகள் கூறியது அவ்விடத்துப் பொருந்துமோ என்னும் ஐயம் மீளவும் உண்டாகின்றது, ஐயனே!

**மெய் :** அதிதீவிர பக்குவம் உடையார் ஆசிரியன் அருள்மொழியைக் கேட்டவுடன் தெளிவுணர்வு பிறந்து இறைவன் கழல் அணைந்து மீளார். சிலர்க்கு அருண்மொழியைக் கேட்ட அளவில் தெளிவுணர்வு தோன்றி விடுவதில்லை. சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னும் ஏனை மூன்றும் முற்றிய பின்னரே தெளிவுணர்வு அமைகின்றது. அன்னோர் முதல்வனை அணைந்தும் பயிற்சி வயத்தால் உலகத்தில் மீளுங்கால், இறைவனே தமக்கு என்றும் உள்ள சார்பு என்பதை உணர்ந்து அவனையே பற்றுகப்பற்றி உலகத் தொடர்பை நீக்கிக் கொள்வர். இதனையே மணிவாசகர் அருளிச் செய்த நீத்தல் விண்ணப்பம் உணர்த்துகின்றது. அதில் விடுதி என்னும் சொல் விடுதியோ, விடாதே என்னும் பொருளைத்தரும், மகன் எனல் என்றாற்போல. நீத்தல் என்றது நீக்கற்க என்னும் பொருளையே குறிக்கும். இனி, நாளை முதல் படிமுறையான் ஞானம் உணர்வார்க்கு உரிய சிந்தித்தல் முதலிய வற்றின் இயல்புகள் நம்மால் கூறப்படும்.

## ஒன்பதாம் சூத்திரம்

பத்தாம் நாள் பாடத்தில் ஆசிரியரே தொடங்கிக் கூறுவாராயினர். இதுவரையில் யாம் சொற் செய்து வந்த சூத்திரங்களுள், முதல் மூன்றும் முறையே பதி, பாசம், பசு என்னும் முப்பொருள்கள் உள்ளன என்பதை அறிவில் விளங்க வைத்தலின், பிரமாணவியல் என்னும் பகுப்பின்பாற்படும். பின் மூன்று சூத்திரங்களும் எதிர் நிரல் நிறையாக அவற்றின் இலக்கணம் உணர்த்தலின் இலக்கணவியல் எனப் பாகுபடும். இவை ஆறும், கண்ட பொருளைக் கொண்டு காணாத பொருள்களின் உண்மையினையும் இயல்பையும் ஆராய்ந்து உணர வைத்தலின் பொதுவதிகாரம் எனப்படும். பின்னர் எடுத்துக்கொள்ளப்பட்டது உண்மை அதிகாரம். இங்கு உணர்த்தப்படுவன அனுபவம் பற்றிய, அவ்வப்பொருள்களின் தன்னியல்பு.

இவ்வியல்பு பிறபொருட்சார்பால் அவற்றிற்கு வந்தவை அல்ல. பிற பொருட் சார்புபற்றி ஒன்றனுக்குக் கூறப்படும் இயல்பு பொதுவியல்பு எனப்படும். பொது வியல்பை வடநூலார் தடத்த லக்கணம் என்பர்; உண்மையியல்பைச் சொரூபலக்கணம் என்பர். ஆன்மாவுக்குக் கூறி வந்தது போல, ஒரு பொருளை இன்னின்னவற்றின் வேறாய் இருப்பது எனக் கூறுவது அதத்துவியாவிருத்த லக்கணம் எனப்படும்; அதுவும் பொதுவியல்பாய் அடங்கும்.

இனி, உண்மை இயல்பு சாதன முகத்தானும், பயன்முகத்தானும் கூறப்படும் என்னும் மரபு பற்றி ஏழாஞ் சூத்திரத்தில் சாதித்தற்கு உரிய ஆன்மாவின் இயல்பு உணர்த்தப்பட்டது. அது பகையாகிய பாசத்தை விட்டு நட்பாகிய பதியை அடையும் உரிமை உடையது என்பது ஏழாஞ் சூத்திரத்தாற் கூறப்பட்டது. எட்டாஞ் சூத்திரத்தில் சிறந்த சாதனமாவது சிவஞானம் என்பதும், அதனைப் பயப்பிக்கும் கருவியாய் முன்னர் இயற்றற்கு உரியவை சரியைகிரியை யோகம் எனும் தவம் என்பதும், அத்தவமுதிர்ச்சியில் உயிர்க்கு உயிராய் உள்நின்று உணர்த்திவரும் முதல்வனே ஞான குருவாய்

வெளிபட்டுச் சிவஞானத்தை உணர்த்துவன் என்பதும் உணர்த்தப் பட்டன. ''நோய் நாடி நோய் முதல் நாடி அதுதணிக்கும்-வாய் நாடி வாய்ப்பச்செயல்'' என்பது பொதுமறை ஆகலின், ஞான குரவனுல் கேட்டுணர்ந்த ஞானத்தைச் சிந்தித்து உணருமாறு தெரிவிப்பது இவ்வொன்பதாஞ் சூத்திரம். அஃது,

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்

தண்ணிழ லாம்பதி விதிஎண்ணும் அஞ்செழுத்தே''-என வரும். இதன் பொருளை நீரே உரைக்கலாம்.

**ம-ர் :** இதில் **ஊனக்கண்** என்றது குறை அறிவு : அஃதாவது, பசு ஞானம். பாசம் என்றது பாசஞானத்தை; ஞானக்கண்ணினில் என்றது சிவஞானமாகிய கண்ணுல் என்றபடி. சிந்தை என்றது ஆன்ம அறிவை. முதல் இரண்டு அடியின் பொருள், பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறியப்படாத முதல்வனை உன் அறிவின்கண் சிவஞானக் கண்கொண்டு நாடு என்றபடி. நாடி-நாடு. இனி, சிவ ஞானக்கண்ணை எவ்வாறு பெறுவது? என்னும் வினு எழும். அதற்கு விடை பின் பகுதியில் வருகின்றது. உராத்துனைத்தேர்-பேய்த்தேர் எனப்படும் கானல்நீர். பாசம் என்றது நம் அறிவைக் கவரும் உலகப் பொருள்கள்; அவை மண், பெண், பொன் என்பவை. பதி என்றது பதிஞானத்தை.

உலகப்பொருள் அனைத்தையும் பேய்த்தேரின் இயல்புடை யவை என அவற்றின் நிலையாமையைக் கருதிப் பற்றுச் செய்யாது ஒருப்பட்டு நிற்பின், அவ்வொருப்பட்ட உணர்வில் அறிவுக்கு அறிவாய்ச் சிவஞானம் தோன்றும்; அது பிறவி வெப்பத்திற்குத் தண்ணிய நிழல்போல இன்ப ஒளி பரப்பி வெளிப்படும். விதிப்படி அஞ்செழுத்து எண்ணப்படும் என்பது சூத்திரப்பொருள். உராத்-துனைத்தேர் என்னும் சொல்லியல்பும், விதி எண்ணும் அஞ்செழுத்து என்பதன் இயல்பும், வேறு நுண்பொருளும் அடிகளே உணர்த்தி அருளல்வேண்டும்.

**மெய் ;** நல்லது. உராத்துனைத்தேர்- ஏறிச் செலுத்தப்படாத விரைவான தேர்; அல்லது பரவுதற்சண் வேசமுள்ள தேர் எனக் கொள்க. முன்னைய பொருளுக்கு ஊரா என்பது உரா எனக் குறுகி

நின்றது. பின்னைய பொருட்கு உரா- உராவுதல், பரவுதல்; பரவுதற் கண் என்க. துனை - விரைவு. தேர்த்து = தேரின் தன்மைத்து.

இனி, விதி என்றது பாசம் ஒருவி, பதியை ஞானக் கண்ணி-னிற் சிந்தைக்கண் நாடி என விதித்தபடி என்றவாறு. அஃதா வது ந. ம நீக்கி, வவ்வால் யவ்வில் சிய்யை நாடுக என மாட்-டெறிந்தபடி.

திருவைந்தெழுத்தை எண்ணுதல் மானதம், மந்தம், உரை எனப் பொதுவாக மூன்று வகைப்படும். முன்னையது மனத்தால் எழுத்துக்களை நினைத்தல்; பின்னையது பிறர்க்குக் கேளாதபடி நாப்-புடை பெயரும் அளவில் கணிப்பது; மூன்ருவது பிறர் செவிக்குக் கேட்கும் அளவில் கணிப்பது. இங்கு எண்ணப்படும் என்றது சூத்தமானதமாகக் கணித்தலே; அஃதாவது, எழுத்துக்களாற் குறிக்-கப்படும் பொருளை நினைந்து அறிவை நெறிப்படுத்தி நிற்றல்.

இச்சூத்திரத்தில் ''பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி'' என விதித்தது சாதிக்கும் முறையை; விதி எண்ணும் அஞ்செழுத்தே என்றது, அங்ஙனம் தன்னறிவில் முதல்வனைக் கண்ட காட்சி சலியாமைப்பொருட்டு, அதனை நிலைபெறுத்தும் சாதனம். நெஞ்சக் கமலத்தில் இறைவனை அஞ்செழுத்து உருவினனுகக்கண்டு, அவனுக்கு அடியனுய், கொல்லாமை, அருள், பொறை, பொறியடக்கம், வாய்மை, தவம், அறிவு, அன்பு என்னும் எண்மலர்களால் அருச்-சித்து உந்தியிடத்தில் ஓமஞ்செய்து, புருவ நடுவில் முத்தி பஞ்சாக்-கரத்தைச் சிவம் யான் என்னும் பொருள்பட எண்ணின், முதற்-பொருள் விளங்கித் தோன்றி ஆன்மாவைத் தன்கண் அடங்கக் கொண்டு இன்புறுத்தும் எனக்கொள்க.



## பத்தாம் சூத்திரம்

பதினொன்றும் நாள் பாடத்திற்குப் பலர் வந்திருப்பினும் மனவாசகங் கடந்தாரே ஆசிரியரை நேரே வினவுவார் ஆயினர்.

**ம-ர்:** அடிகள் சென்ற இருநாட்களில் கூறிய சாதனத்தில் நிற்பார எய்தும் பயனை வகுத்துணர்த்தி அருளல் வேண்டும்.

**மெய்:** மேற்கூறிய ஞானநெறியின் பயன் பகையாகிய பாசத்தின் நீங்குதலும், உறவாகிய சிவத்தை அணைதலும் ஆகும்; இவை முறையே பாசவீடு, சிவப்பேறு எனக்கூறப்படும் அவற்றை முறையே ஆன்மசுத்தி, ஆன்ம லாபம் எனக் கூறினும் இழுக்காது.

**ம-ர்:** பாசவீடு பெறுமாறு எவ்வாறு என்பதை விளக்கியருளல் வேண்டும்.

**மெய்:** உயிர் உலகத்தை அறிந்து நுகர்ந்து வந்த பிறப்பு நிலையில் அதற்கு உடனாகி நின்று அறிவித்தும் செலுத்தியும் வந்த முதல்வன், தான் எனக் காணப்படாமல் உயிரே என்னும்படி அதன்கண் ஒன்றிப் பின்நின்று அறிந்து வந்தான்; அங்ஙனம் உடனின்றுவந்த திருவருளை உணர்ந்த இம்முத்திக் காலத்து, உயிர் அத்திருவருளை முன்னிட்டுத் தான் அதன் கண் அடங்கி ஒன்றாய் நின்று, அத்திருவருளால் அன்றி ஒன்றை அறிதலும் இயற்றலும் இலதாய் நிற்றல் வேண்டும். அவனோடு ஒன்றி நிற்றலால் மலத்தின் செயலாகிய யான், எனது என்னும் செருக்கு அறும்: அவன் அருளால் அன்றி ஒன்றும் அறிந்து இயற்றாமையால் மாயை மயக்குதலும் அது பற்றி மேல்வினை ஏறுதலும் இல்லையாம்; உடம்பு நுகர்வினை (பிராரத்தம்) நுட்பமாய் வரினும் அஃது அம்முத்தனை இடமாகக் கொள்ளும் முதல்வனால் ஏன்று கொள்ளப்படும். முதல்வன் அவர் உடலை இடங்கொண்டு, அவர்க்கு வரும்வினையை அவர்க்கு நன்மையும் தீமையும் செய்வாரது வினைப்பயனை மிகுவித்தற்கு ஏதுவாக முடிப்பன். மணிவாசகர்

''உடலிடங் கொண்டாய்'' எனவும், அப்பர் ''தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர்தம் கடனாவதுதான்'' எனவும் அருளிச் செய்தமையை ஈண்டு உய்த்து உணர்க. அன்றியும் தக்கார்க்குச் செய்யும் நன்மை தீமைகள் தத்தம்பயனை மிகுதிப் படுத்தித் தரும் என்னும் அறநூல் முடிபையுங் கருதுக.

ம-ர் : இக்கருத்துக்களைத் தோற்றுவித்து உள்ளத்தில் நிலைபெறச் செய்யும் சூத்திரம் சொல்லியருளுக :

மெய்கண்டார் :

''அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே''-என்பது சூத்திரம்.

மேலைச்சூத்திரத்தில் விதி எண்ணும் அஞ்செழுத்து என்றதனால் திருவைந்தெழுத்தை எண்ணுங்கால் இங்குக் கூறிய ஏகனாகி நிற்றல் இன்றியமையாதது என்று அடுத்துக் கூறினமையால் உணர்ந்து கொள்க.

முதல்வன் உயிர்க்கு வேறேயாயினும், அவனை வேறு எனப் பிரித்துக் காண்பார்க்கு, நானே முதல் என்பார்க்குப் போல, யான் என்னும் உணர்வே உள்ளதாகும்; அதனால் முதல்வன் தன்னைக் காட்டாது அவ்வுணர்வில் மறைந்தே நிற்பன். தான் என ஒன்றில்லை, முதல்வனே எல்லாம் என ஒற்றித்து அவன் கண் அடங்குவார்க்கே முதல்வன் அவர்களைத் தானாகச் செய்து பேரின்பமயமாய் வெளிப் படுவன்.

''நானவனென் றெண்ணினர்க்கும் நாடுமுளம் உண்டாதல்
தானெனஒன் றின்றியேதானதுவாய்-நானெனவொன் (று)
இல்லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத்(து)
இல்லென்று தானும் இறை.

என்பதனால் உணர்க.

''எம்பிரான் என்றதேகொண் டென்னுளே புகுந்து நின்றிங்(கு)
எம்பிரான் ஆட்ட ஆடி என்னுளே உழிதர் வேனை
எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுளே கரக்கும் என்றால்
எம்பிரான் என்னின் அல்லால் என் செய்கேன் ஏழையேனே''

என்னும் திருநாவுக்கரசர் திருமொழியும் உன்னத்தக்கது,

யான் எனது என்னும் செருக்கு-யான் என்னும் அறிவோனும், எனது என்னும் அறிவும், அதற்குப் பொருளாய் விளங்கும் எனது எனப்படும் அறியப்படுபொருளும் எனப் பகுத்து நிற்கும் மயக்க உணர்வு. இதனை விளைத்து ஆன்மாவை ஏகதேசப்படுத்தி நிற்பது மலம்; அம்மலவாதனை தீர, ஆன்மா சிவவியாபகத்தைத் தலைப்பட்டு ஏகனாகி நிற்பின், அந்நிலைக்கண் வெளிப்படும் சிவானந்த இன்பத்தை அது நுகரும் என்பது பரம சித்தாந்தம் ஆகும்.

## பதினொன்றும் சூத்திரம்

பன்னிரண்டாம் நாள் மெய்கண்டதேவர் தம் மாணுக்கர்க்குப் பரமுத்தி நிலையாகிய சிவப்பேறு கூறுவார் ஆயினர்.

> "காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
> காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
> அயரா அன்பின் அரன்கழல் செலுமே"-என்பது சூத்திரம்.

என்னுதலிற்றோ எனின், பரமேசுரனது சீபாதங்களை அணையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

மேற்கூறிய சாதனங்களில் நிற்போர்க்கு முதல்வன் பரம ஐசுவரிய சம்பன்னனாய் உயிர்க்குயிராய் நின்று உணர்த்தி வருவது தெளிவாக உணரப்படும். காணுந்தன்மையுடைய கண்ணுக்கு உயிரானது அதனைக் கலந்து நின்று காணுந் தன்மையை விளக்கிப் பின் புறத்துள்ளதொரு பொருளை நோக்குவித்துத் தானும் உடனின்று நோக்கினாலன்றிக் காட்சி உளதாகாது; அதுபோல, முதல்வன் உயிரை அதிட்டித்து நின்று அதனை விடயங்களிற் செலுத்தித் தானும் உடனின்று உணர்ந்தாலன்றி அது யாதொன்றனையும் அறிந்து நுகருமாறு இல்லை. இங்ஙனம் உயிர்களை அவ்வப் பொருள்களை அறியச் செய்வதாகிய காட்டும் உபகாரமும், அறிந்து அழுந்தி நிற்கச் செய்யும் காணும் உபகாரமும் பெத்தம், முத்தி இரண்டினும் முதல்வனால் செய்யப்படுகின்றன. பெத்தத்தில் விடமாய் உள்ளவை உலகப் பொருள்கள்; அப்பொழுது உயிர்க்கு வரும் பயன் இன்பத்துன்ப மயக்க நுகர்ச்சி; முத்தியில் ஆன்மாவுக்கு விடயமாவது பரமேசுரனது சீபாதம் எனப்படும் பேரின்ப அனுபவம். சிவஞானத்தால் சிவத்தைத் தலைப்பட்ட மெய்யுணர்வினர் இவ்வுபகாரத்தைப் பட்டாங்கு உணர்கின்றனர். அதனை மறவாமையால் அவர்க்கு முதல்வனிடத்தில் பேரன்பு மீதூர்ந்து விளைகின்றது. அவ்வன்பே இன்பமாய் நிலவும் சிவத்தில் அழுந்தி நிற்கச் செய்யும். இவ்வாறு, வியாபகமாய் உள்ள திருவருளால் விளங்கும் அறிவு, விழைவு, செயல் என்னும் மூன்றும்

தூயபேரின்ப மயனுகிய சிவனை விடயித்து அழுந்தி நிற்பதே பரமுத்தி நிலைஆகும்.

சூத்திரத்தில் அயரா என்றது. மறவாத என்னும் பொருளது அஃது ஆன்மாவின் வியாபக அறிவைக் குறித்தது; அன்பின் என்றது விழைவைக் குறித்தல் வெளிப்படை; செலும் என்றது அதன் செயலாற்றலைக் குறித்து நின்றது.; அரன்கழல் என்றது பாசத்தை அரிக்கும் (தேய்க்கும்) முதல்வனது வெற்றிப் பாட்டையுடைய பேரின்ப சத்தியைக் குறிக்கும்

காரைக்கால் அம்மையார் புராணத்தில் ''இறவாத இன்ப அன்பு'' என்றதும் திருஞான சம்பந்தர் புராணத்தில் ''ஞானம் ஈசன் பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார்'' என்றதும் இங்குக் கூறிய அயரா அன்பே என்பது தெளிக.

**மா-ர் :** எட்டாஞ்சூத்திரத்தில் ''உணர்த்த விட்டு, அன்னியமின்மையின் அரன் கழல் செலுமே" எனக் கூறப்பட்டது.; இங்கு மீண்டும் ''அயரா அன்பின் அரன் கழல் செலுமே'' எனக் கூறப்படுகிறது. இரண்டிற்கும் உள்ள வேற்றுமையைத் தெரிவித்தருளல் வேண்டும்.

**மெய் :** அரன் கழல் செலும் என்பது ஈரிடத்தும் சிவப் பேற்றினையே குறிக்கின்றது.

அங்கே, சற்குருவின் அருள் உரையைக் கேட்ட துணையானே சிலர்க்குத் தெளிவுணர்வு பிறந்து நிட்டை கூடிச் சிவப்பேறு எய்துதல் கூடும் என்பதைக் குறிப்பிக்க அது கூறப்பட்டது. அன்றியும் சாதனம் உணர்த்தும் வழி, அதன் பயன் யாதோ என அவாய் நிற்றல் ஒருதலையாதல் பற்றி அவ்அவாய் நிலை பற்றியும் கூறப்பட்டது.

மற்றுப் பலரும் கேட்ட துணையான் நிட்டை கூடப் பெருமல், சிந்தித்தல், தெளிதல் என்பவற்றின் பின்னரே நிட்டை கூடிச் சிவப்பேறு எய்துவர்; அவர், ஞானக்கண் விளங்கப் பெற்று, அதனுல் தம் அறிவிற் பதியை நாடிக்கண்டு, அக்காட்சி சலியாமைப் பொருட்டு முத்தி பஞ்சாக்கரம் கணித்து, அங்ஙனங் கணித்தல் பயன் தருதற் பொருட்டு ஏகனுகி இறைபணி நின்று, அயராமையான் விளையும் அன்பான் அரன்கழல் செல்லுமாறு பின் படிமுறையின் வைத்து உணர்த்தினும் என்பது கண்டுகொள்க.

மா ; மேலே கூறியபடி முதல்வனோடு ஏகனாகி அவனருளாலல்லது ஒன்றுஞ் செய்யாது நிற்றலே முத்தனவானுக்குப் போதிய சாதனம் ஆகாதோ? மேலும் அயரா அன்புடையனாய் நிற்றல் வேண்டுமோ? அங்ஙனம் அன்பு செய்தலாற் போதரும் தனிப்பயன் யாது? என அறிதல் வேட்டேன்.

மெய் : ஏகனாகி இறைபணி நிற்றல் என்றது ஞான நெறிக்கண் துரிய நிலையாகிய அருள் நிலையே ஆகும்; அது சிவயோகம் எனவும் குறிக்கப்படும். ஆண்டுச் சிவானந்த ஒளிதோன்றுமேயன்றிச் சிவானந்த விளக்கம் எனப்படும் சிவானுபூதி நிகழ்வதில்லை; அயரா அன்பினால் மட்டுமே சிவானுபவம் எனப்படும் சிவபோகம் விளையும். இதுவே துரியாதீதம் எனப்படும் இன்புறு நிலை ஆகும்.

மா. அன்பு என்பது சீவன் முத்தி நிலைக்கண் உலகத்தார் பயன் கொள்ளுதற் பொருட்டு இறைவனது சகுணவடிவைப் பற்றி நிகழ்வது எனப் பலர் கருதுகின்றனர்; அதன் உண்மையியல்பை விளக்கி அருளல் வேண்டும்.

மெய்:- அங்ஙனம் கருதுவோர் தம்மியல்பையும் முதல்வன் இயல்பையும் நுணுகி உணராதவரே ஆவர்.

முதல்வனைச் சகுணம், நிர்க்குணம் எனப் பிரித்துக் கூறுவதே தவறு அவர்கள் சகுணம் என்னும்போது பிரகிருதி காரியமாகிய முக்குணங்களையுடைமை எனக் கருதுகின்றனர். அது குணமூர்த்திகளாகிய பிரமன், விண்டு, உருத்திரன் என்பாரைக் குறித்தே கூறப்படுவது. அந்நிலை முக்குணங்களுள் ஒவ்வொன்றின் வயப்பட்டு ஒவ்வொரு காலத்திற் செயல்படும் உயிரினத்தின்பாற் பட்டார்க்கே உரியது, முதல்வனுக்கு உரியதன்று.

இனி நிர்க்குணம் என்னும்போது அவர்கள் முதற்பொருளுக்கு யாதொரு குணமும் இல்லை எனவே கருதிக் கூறுகின்றனர். இதுவும் தவறான கருத்தே எக்குணமும் இல்லாதது சூனியப்பொருளே ஆகும். அதனால் யார்க்கும் எந்தப்பயனும் விளையாது. முதற் பொருள் பிரகிருதி, அதற்குமேம்பட்டமாயை, அதனினும்மேம்பட்ட மாமாயை என்பவற்றின் காரியங்களிற் சிறிதும் தோயாத நிலையில் சித்தாகவும் செம்பொருளாகவும் உள்ளது என ஆறும் சூத்திரத்து அளவை முறைமையின் வைத்து உணர்த்தினோம். இவற்றின் விரி-

வைச் சத்து, சித்து, அநந்தம், ஆனந்தம் என உபநிடதங்கள் கூறு கின்றன. இன்னும் ஆகமங்கள் தம் வயமுடைமை, இயற்கை உணர்வுடைமை, எல்லாம் அறியும் தன்மை, பேரின்பமுடைமை, பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, தூய உருவுடைமை இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்றல் என முதல்வனது அருட்-குணங்களை எட்டாக விரித்துக்கூறும். ஆதலின், முதல்வன், நிர்க் குணன் என்பதற்குப் பொருள், அவன் பிரகிருதி குணங்களாகிய சத்துவம், இராசதம், தாமதம், என்னும் முக்குணங்கள் இல்லாத வன் என்பதே ஆகும். ''எட்டுவான் குணத்தீசன்'' எனத்திருமுறை யும், ''எண்குணத்தான்'' எனப் பொதுமறையும் கூறுதல் முதல்வன் அருட்குணங்களை உடையன் என்னும் கருத்துப்பற்றியே என உண-ர்ந்து கொள்க.

இனி ஞாயிற்றுக்கு ஒளியின்றேல், அதனைக் கண் அறியமாட் டாது. அதுபோல, முதற்பொருளுக்கு அருளொளியின்றேல் அவனை அறிதலும் அனுபவித்தலும் உயிர்க்கு உளவாகா என்க.

இங்ஙனமே அன்பு, அறிவு என்பவை உயிர்க்குணங்கள். பிறப்பு நிலையில் அவை முறையே மனத்தாலும், புத்தியாலும் விளங்கி உலகப்பொருள்களைப் பற்றி நிகழும். வீட்டு நிலையில் அவை முதல் வன் திருவருளால் விளங்கி முதல்வனையே விடயமாகப் பற்றும் என்பது உணர்ந்து கொள்க. உலகத்திலும் வீட்டுநிலையிலும் அன்பின் றேல் இன்பமும் இன்றும் என்பது அடிப்படை உண்மை. இக்கரு-த்துப்பற்றியே தொல்காப்பியனர்;

எல்லா உயிாக்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்'' என்றார்.

மே — அன்பு. ''நம்புமேவும் நசையாகும்மே', என்பது சொல்லதி காரச்சூத்திரம், தெய்வப்புலவரும்,

''அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு''—என்றார்.

பொதுப்படுத்தி இவை வீட்டு நிலைக்கும் உய்த்து உணரத்தக்கவை. ம. ர். ''அவையே தானேயாய்'' என இரண்டாம் சூத்திரத்தும், ''ஆங்கவை போலத்தாந்தம் உணர்வின் தமியருள்'' (அளந்தறிந்-

தறியா) என ஐந்தாம் சூத்திரத்தும் முதல்வன் உணர்த்திய போது காட்டும் உபகாரம் ஒன்றே கூறப்பட்டது; இங்குக் "கண்டு காட்ட-லின்" எனக்காணும் உபகாரமும் உடன் கூறப்படுகின்றது. இறைவனும் உயிர்கள் அனுபவிப்பதொன்றனை அறியின், அவன் விகாரப்படானே என ஆசங்கை தோன்றலின், அதனை நீக்கியருளுமாறு வேண்டுகின்றேன்.

மெய்:- உயிர்கள் பொறிவாயிலாக உணரும்போது சுவை, ஒளி முதவியவற்றில் ஒவ்வொன்றையே ஒவ்வொரு காலத்து அறிந்து அதில் அழுந்தும்; ஆதலால் உயிர்கள் ஒன்றை அறிந்து அழுந்தும் போது பிறிதொன்றனை அறியாமல் விகாரப்படும். ஒப்பற்ற பரம்-பொருள், அங்ஙனமின்றி எல்லாவற்றையும் ஒப்ப அறிந்தாங்கு அறிந்தும் உயிர்கள் வாயிலாகச் சிறப்பாக அறிந்தும் வரும். இதனால் பரமன் விகாரப்படுவதில்லை. அப்பர் அடிகள்,

கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்

தெள்ளியே னாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்

உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந்தறிதி யென்று

வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட்டேனே"

என அருளிச் செய்துள்ளார்.

சிவன் முதலே அன்றி முதல் இல்லையென்பதும், எல்லார் செயலும் அவனருளாலன்றி நிகழாதவாறும் பிறப்பு வீடு என்னும் இருநிலையினும் ஒக்கும்; ஆயினும், பிறப்பு நிலையில் அறியாமை காரணமாக,யான் முதல் என்றும், யானே செய்வல் என்றும் கொண்டு நடந்தமையால் அக்காலமெல்லாம் செய்தவை கள்ளத்தொண்டாம் அது சிவானந்தமாகிய பயனைத் தாராத வீண்தொழிலேயாம். பின் தெளிவுணர்வு பிறந்து முதல்வனைப் புறத்தே தேடிக்காணாது, அகத்தே நாடிக் கண்டேன்; கண்டபோது, எண்ணுதலாகிய செயலையுடைய உயிர்கள் எண்ணிய எல்லாவற்றையும் அவற்றின் அறிவில் தங்கிநின்று முதல்வன் அறிந்து வருகிறான் என்பதை உணர்ந்தபோது, அவன் இல்லை என்று அழித்துப் பேசி வந்த என் அறியாமையை நினைந்து வெட்கப் பட்டேன்; வெட்கப்பட்டு, என் அறியாமையைக் கருதி என்னையானே எள்ளி விலாநோவும்படி சிறித்தேன் என்பது இப்பாட்-

டின் பொருள்.

இன்னும் முத்தர்கள், முதல்வனோடு ஒற்றித்து நின்று தமக்குப் பிராரத்தம் பற்றிவரும் வினைப்பயன்களை அவன் அருளே விளைத்து நிற்றலின், அவ்வருளாகவே காண்பார்கள்; செய்வோர் செய்திக்குத் தக்க பயன் தரும் முதல்வன் அவர்களுக்கு அங்ஙனம் வரும் இன்பத்துன்பம் இரண்டையும் சிவபோகமாகவே விளக்கும் பொலிவினை உடையவன்; உயிரின் கண் நீங்காது இங்ஙனம் கருத்த-றிந்து முடித்தல் பற்றியும் உயிர்களின் விடயத்தைத் தானும் அறிவன் என்பது தெளியப் படும். இதனை,

''ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த்தான் விளைந்த பொற்பினன் - ஏகமாய்
உள்ளத்தின் கண் ஆனன் உள்குவார் உள்கிற்றை
உள்ளத்தாற் காணனே உற்று" - என்னும் வெண்பாவான் உளங்கொள்க.

ஒன்று—பரம்பொருள். ஒன்றன் இணையடிகளின் கண் ஏகமாய் நின்றுஉணரச் சிவபோகமாய்த்தான் விளைந்த பொற்பினன், ஏகத்து உள்ளத்தின்கண் ஆனன் ஆகலின் உற்றுக் காணனே எனக் கூட்டி உரைக்க.

ஏகத்து—அத்து விதமாய்; ஆனன்-நீங்கான்.
இதனால், சீவன்முத்தர்க்கு உடம்பு முகந்த வினைவிளையங்கால், முதல்வன் அவர் கருத்தறிந்து அதனை ஏன்று கொண்டு தான் அவர்க்குச் சிவபோகமாய்ச் விளைவன் என்பது பெறப்படும்.

''காணுங் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்
பேணும் அடியார்''— என்னுந் திருவாசகம் இக்கருத்தே பற்றி எழுந்தது.

நம்பி ஆரூரருக்கு உலக வின்பமும், அப்பரடிகட்கு உலகத் துன்பமும் பேரின்பமாய் முறறியவாறு கருதத்தக்கது.

**ம-ர் :** சீவன் முத்தர்கள் உடல் உள்ளபோதே வியாபகமாய முதல்-வனைத் தலைப்பட்டு இன்புறுவர் எனின், அத்தகைய முதல்வனது இருப்பு ஏனையர்க்குச் சிறிதேனும் புலப்படாமைக்குக் காரணம் தெரிவித்தருள வேண்டுகின்றேன்.

மெய் : நண்பகலில் ஞாயிறு தன் ஒளியைப் பரப்பி நிற்பினும் படலத்தால் மறைக்கப்பட்ட கண்ணுக்கு அது மாலையிருளாகவே புலப்படும்; அதுபோல முதல்வன் யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பினும் பாசாத்தார்க்கு அவன்இல்பொருளே ஆவன். மேலும், ஞாயிறு பக்குவம் முதிர்ந்து போதாயுள்ள தாமரையினையே அலர்த்தி மலர்விக்கும்; அதுபோலத் தவமுதிர்ச்சி உடையோரது ஏகதேச அறிவையே முதல்வன் தன் அருளால் விரிவு அடையச் செய்து வியாபக உணர்வுடையவராகச் செய்வன் என்க.

இதனால், உயிர்களது அறிவுமுதல்வனது அறிவை இன்றியமையாவாறு காண்க.

ம.ர். உலகத்தில் ஒரு பொருளை அறிந்தார் அதனை விரும்புதல் இயல்பு விரும்பியவுடன் அப்பொருளைப் பெறுதல் கண்டிலம். இங்ஙனமாகவும், அயரா அன்பின் அரன்கழல் செலுமே என்றதில், அன்பினால் சிவப்பேறு எய்தும் என்னும் பகுதி பொருந்துமாற்றை விளக்கி அருளல் வேண்டும்.

மெய்:- உலகத்துப் பொருள்கள் உயிர்க்கு வேறாய் உள்ளவை. முதல்வன் அங்ஙனம் அன்றி உயிர்க்குயிராய் உடனின்று செலுத்தி வருபவன். உயிரின்கண் நின்ற மலத்தான் ஆய மறைப்பே முதல்வனைச் சார்வதற்குத் தடையாய் நிற்பது. மண்ணில் நின்ற இருளை வளர்மதி படிப்படியாகத் துரந்துவருவதுபோல, முதல்வனது திருவருள் உயிரின் கண்ணதாகிய மறைப்பைப் படிப்படியாக நீக்கியும், இரும்பைக் காந்தம் வலித்து நிற்பது போல, உயிரைத் தன் வசஞ் செய்தும் வருகிறான். ஆதலினால், காந்தத்தின் ஈர்ப்பில் அகப்பட்ட இரும்பு அதனைச்சார்தல் போல, உயிரும் அன்புசெய்தல் மாத்திரையான் முதல்வனைச் சாரும். அவ்வன்பு இறைவனது இச்சா சத்தியினாலே விளைவது எனக்கொள்க. முதல்வன் இங்ஙனம் தொடர்ந்து உயிரைத் தன்னை நோக்கி வருமாறு வலித்து நிற்றல் தன் சந்நிதியில் சத்தி சங்கற்ப மாத்திரையான் ஆகலின், அவன் இதனால் வேறுபடுதல் இலன். உயிர்க்கு உள்ள கேவலம், சகலம், சுத்தம் என்னும் இம் மூன்று நிலைகளும் தொடர்ச்சியாய்ச் செயற்கையினின்றும் இயற்கையை நோக்கி நிகழ்வனவாய் உள்ளன என்பதற்கு ஓர் உவமை கூறுகின்றோம்:

பேரொளியுடைய ஞாயிறு முன்னர் மேகபடலத்தின் செறிவால் மறைக்கப்பட்டிருத்தல் போன்றது உயிர் மலத்தில் மறைந்து அறிவு செயலிழந்து நின்ற கேவலநிலை; பின் காற்றால் மேகபடலம் சிறிது விலக ஞாயிறு ஒரு புடை விளங்கிக் சுடர்தல் போல்வது, உயிர்மாயைகாரியப் பொருள்களோடு கூடித் தன் அறிவு ஏகதேசமாய் விளங்கி உலக நுகர்ச்சியுடைய தாய் நின்ற சகலநிலை; பெருங்காற்றால் மேகம் முற்றும் சிதறி நீங்க, ஞாயிற்றின் ஒளி எங்குமாய் நிற்றல் போல்வது, திருவருளால் மலமாயை கன்மங்கள் முற்றிலும் நீங்கி உயிர் வியாபக உணர்வுடையதாய் முதற்பொருளை அனுபவித் திருக்கும் சுத்தநிலை. இக்கருத்துக்களை,

''மன்னும் இருளை மதிதுரந்த வாறஙபின்
மன்னும் அரனே மலந்துரந்து-தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் தான்''

''பொன்வாள்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே எங்குமாந் தன்மைபோல்—முன்வாள்
மலத்துள் மறைந்துள்ளம் மற்றுலகம் உண்ணும்
மலத்திரித்துச் செல்லும் வரத்து''

என்னும் வெண்பாக்களான் உளங்கொள்க.

ம-ர். ஆன்மா உலகப்பொருள்களை நுகரும்போது காலத்தானும் இடத்தானும் வரம்புபடும் ஒருபுடை உணர்வு (ஏகதேச உணர்வு) உடையதாய் வருகிறது. அது முதல்வனோடு ஒன்றுங்கால், ஏகதேச அறிவு கெட்டு அணையுமோ? கெடாது அணையுமோ? என்பார்க்கு முன்பின் முரணாதவாறு விடைகூறுமாறு யாங்ஙனம் என உணர்த்தியருள்க, பெரும!

மெய்;- ஏகதேச உணர்வு கெட்டுக் கூடும் எனின், குணம் கெடவே குணியும் கெடும் எனப்பட்டு, ஆன்மா அணையும் என்றது இன்றாய் முடியும். அது கெடாது ஒன்றும் எனின், ஒன்றுதலே இன்றாய் முடியும்; பின்னர், நிகழ்வது யாதெனின், ஏகதேச உணர்விற்குக் காரணமாகிய மலம் தன் சத்தி கெடும்; கெடுதலான், ஆன்மா தன் வியாபக இயற்கைநிலையைப் பெற்றுச் சிவவியாகத்துள் அடங்கும். இது எது போலும் எனின், தண்ணீரைச் சேர்ந்த உப்புத் தன் கடினத் தன்மை நீங்கித் தண்ணீர் நிறைவிற் கலந்து தன் இயல்பு கெடாது நிற்றல்

போலும். அங்ஙனம், ஈசன் திருவடியை அணைந்த உயிர் அதனி-னின்றும் கவர்த்தல் இல்லை; அதாவது, மீளாது. இக்கருத்தை,

''நசித்தொன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்று
நசித்திலதேல் ஒன்றுவதில்லை - நசித்துமலம்
அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாம்
கப்பின்றும் ஈசன் கழல்''—என்னும் வெண்பாவான் உளங்-கொள்க.

ம-ர்: பரமுத்தியின் இயல்புகூறி முடிக்கும் இங்கு ''உள்ளம் ஈசன்-கழல் அணைந்து சேடமாம்; கப்பு இன்றுஆம்'' என்றதில், சிவன் திருவடியினின்றும் ஆன்மா (உள்ளம்) கவர்த்தல் இன்று என்பது வியாச சூத்திரத்து இறுதியில் ''மீட்சி இல்லை, உரையளவையான்; மீட்சிஇல்லை, உரையளவையான்'' (அநாவிருத்தி; சப்தாத்; அநாவிருத்தி: சப்தாத்) என எடுத்து ஓதியதை நினைவூட்டு-கின்றது. சேடமாம் என்றதன் கருத்து விளங்கவில்லை; அதனை விளக்கியருள்க.

மெய்: யாதொன்று யாதொன்றன் பொருட்டே உள்ளதோ, அஃது அதற்குச் சேடம் எனப்படும். முத்தான்மா தனக்கென ஒன்றின்றிச் சிவனை இன்றியமையாததாய் அவன் அருள்வழியே நிற்பது ஆகலின், அது சிவனுக்குச் சேடம் எனப்பட்டது. ஏனைப்-பெத்தான்மாக்களும் மாயையும் முதல்வனுக்கு அடிமையும் உடை-மையும் ஆயினும், முத்தான்மாக்கள் முதல்வனை உணர்ந்து அடிமைக்கண் நிற்றலின், சிறப்பாகச் சேடம் எனப்பட்டன ''உன்னைப் பிரானாகப் பெற்ற உன்சீர் அடியோம்'' என்னும் திருவாசகத் தொடரும் காண்க.

ம.ர்- இதுவரை அடியேனுக்குப் போதித்து வந்த சூத்திரங்கள், உபநிட தங்களின் தெளிபொருளை அங்கை நெல்லிக்கனி போற் காட்டி அவற்றில் வரும் அத்வைதம் என்னும் தொல்லை மகாவாக்கியப் பொரு ளோடு இணைத்துத் தெரித்துக் கூறும் வேதாந்த மீமாஞ்சையாகவே இருத்தலைக் கண்டுவியப்பும் தெளிவும் பேரின்பமும் எய்துகின்றேன். இனி அயரா அன்பின் அரன்கழல் அணைந்த முத்தன், உடம்பு உள்ள அளவும் பிராரத்தமும் விளையும் ஆகலின், உலக முகப்படும் போது, முத்தனுடைய அறிவு இச்சை செயல்கள் எவற்றை விடயமாகக் கொள்ளும் என்பதை உணர்த்தி அருளவேண்டும்.

மெய்:- அது நாளை உணர்த்துவோம். இவ்வளவின் அமைந்து நிட்-டை கூடுக.

றியில் செலுத்தி, மலத்தின் காரியமாகிய பிறவிக்குழியில் வீழ்த்தி விடுவர்; அன்பில்லாத அவரது சேர்க்கை அறும்படி மெய்யன்பர் கூட்டத்தில் பேரன்பினனாய், அவர் இனத்தால் நிலைபெறும் சிவ ஞானத்தால் சிவனை உணர்ந்து நிற்கும் மெய்த்தவரைப் பிராரத்த வினைகள் தாக்கமாட்டா.

''மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்
சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை—அறப்பித்துப்
பத்திரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரும்
மெய்த்தவரை மேவா வினை''

என்னும் வெண்பா இக்கருத்தை நினைவிக்கும். இப்பாட்டில், சிறப்பு-அன்பு. சேர்வை - சேர்ச்சி; பத்தர் இனத்துப் பித்தாய் என மாறுக. பத்தரது இயல்பை அன்பர் அல்லார்க்குக் கூறியவற்றிலிருந்து எதிர் மறையாகக் கொள்க.

பத்தர் இனத்து இருந்தாலன்றி அல்லாதார் நீங்கார் எனக் கொள்க.

**ம.ர்.** மெய்யன்பர் திருவேடம் முதல்வன் திருவுருவாமாறு எவ்வாறு என விளக்கியருளுக.

**மெய் :** பிறப்பு நிலையில் உள்ள மக்கள் தன்னை உணர்ந்து வழிபடு தற்பொருட்டு, முதல்வன் தன் வடிவமாகிய திருநீறு, சடைமுடி, கல்லாடை முதலியவற்றைத் தன் அன்பர்க்குக் கொடுத்துள்ளான். அன்பர்கள் தன்னைச் சிவோகம் பாவனையால் உணரச் செய்கிறான், மேலும் ஒருகுறியின்கண் தன்னை வைத்து அவர் உணரத் தான் அவரைத் தன் குறைவிலா நிறைவில் இருத்துகின்றான். அவர்கள் முதல்வனைக் குறியிறந்த நிறைவுநிலை பற்றியும் உணர்கின்றனர். இக் காரணங்களால் அடியார் சிவனேயாவார். முதல்வனும் இவர்களி டத்தில் தயிரில் நெய்போல விளங்கி நிற்பன்; பாசத்தின் நீங்-காத மற்றையோரிடத்து முதல்வன் விளங்குவதில்லை.

**ம.ர்.** அடியார்கள் இங்ஙனம் எண்ணுதலின் சிவவிளக்கம் உடைய ராவர் என்றது பொருந்துகின்றது. திருக்கோயிலின் உள்ளிருக்கும் திருவுருவும் சிவவிளக்கம் உடையதாம் என்பது எவ்வாறு பொரு-ந்தும்?

மெய்: திருக்கோயிலின் உள்ளிருக்கும் திருவுருவங்கள் முதல்வன் தன் அன்பர்க்குக் காட்டியருளிய திருவுருவங்களே. இறைவன் எப்பொருளினும் கலந்திருக்கும் அத்துவித இயல்புபற்றி அவ்வுருவே முதல்வன் எனக் காணவல்ல முத்தர்க்குத் தலையீற்றுப்பசு கன்றை நினைந்தபோது சுரக்கும் பால்போல அவ்விடத்து வெளிப்பட்டு நின்று அருள்வன். அங்ஙனம் தெளியக் காண மாட்டாத ஏனையர்க்கு, விறகிலுள்ள தீ கடைந்தபோது வேறு காணப்படுதல் போல, முன்னையோர் அனுபவித்துக் கண்ட மந்திர சாதகத்தால் ஆண்டு வெளிப்பட்டு அருள்வன் என்பது உணர்க. தலை ஈற்றுப்பசு-முதற் கன்றை ஈன்ற பசு.

இவற்றிற்கு வெண்பாக்கள் :-

> தன்னுணர வேண்டித் தன்னுருவைத் தான் கொடுத்துத்
> தன்னுணரத் தன்னுள் இருத்தலால் - தன்னுணரும்
> நேசத்தார் தம்பால் நிகழும் ததிநெய்போல்
> பாசத்தார்க் கின்றாம் பதி'"—எனவும்,
>
> கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தின் அங்கிவே(று)
> உண்டல் போல் நின்றங் குளதாமால்—கண்ட உருத்
> தானது வாய் அன்றானன் தானது வாய்த் தோன்றானே
> தானதுவாய்க் காணுந்தவர்க்கு''— எனவும் வரும்.

ம.ர். சூத்திரத்தில் ''மலம் கழுவி, அன்பரொடு மருவி- வேடமும் ஆலயமும் அரன் எனத் தொழும்'' எனச் சீவன் முத்தன் செயலாகச் சொல்லி, உரைக்குங்கால், அச்செயல்களை முத்தன் செய்தற்குரிய விதியாகக் கூறி வருவதன் நோக்கம் யாதோ என அறிய விழைகின்றேன்.

மெய்: இவ்விடங்களில் வழிபடுக என யாம் விதித்தது, நாடி நரம்பு முதலியவற்றைத் தான் அதுவாய் வரும் புருடன் அவை ஆகாதவாறு அப்புருடனும் ஆகலான்,

உமது திருவருளால் இத்தொடரின்பொருளை யான் அறிவது; புருடன் எனப்படும் ஆன்மா பருவுடல் முதலியவற்றைத் தானே என உணர்ந்து வருகிறது; பின், தான் அவற்றின் வேறு எனக்

கண்டு அவற்றை விடுகின்றது. அது போல, முதல்வன் எல்லாமாய் அல்லனுமாய் எப்பொருளினும் நிற்றலின், எல்லாமாய் நிற்கும் நிலையை உணர்தல் பற்றிஅப்புருடனுக்கு எய்தும் வழிபாடு, அல்லனாய் நிற்கும் நிலையைக் கருதும்போது இன்றாய் முடியும். அதுபற்றி, சீவன் முத்தர்க்கு இயல்பாய் எய்தும் இவ்வழி-பாடு இகந்துபடாது காத்தற் பொருட்டு விதித்து உரைக்கப் பட்டது என்பது அடிகளது திருவுள்ளக்கிடை.

சூத்திரத்தில் ''தொழுமே'' என்றதிலுள்ள தேற்றேகாரம் இத்திருவுள்ளக் கிடையினையே குறிக்கின்றது என உணர்ந்தேன்.

மேலும், அடியேனுக்கு உணர்த்தக் கருதும் உண்மைகளை உணர்த்தியருளும்படி வேண்டிக் கொள்கிறேன்.

மெய் : உன் நுண்ணறிவை வியந்தோம். உன்சொற்கள் மகிழ்வூட்டு-கின்றன.

''கற்று மனம்போல் கசிந்துகசிந் தேஉருகி
உற்றுசான் லிங்கம் உயர்வேடம்-பற்றாக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனில் நின்றிடுவர் பார்''.

பசுவின்பால் அதன் உடல் முழுதும் பரவி உள்ளதேனும் அதனைக் கறந்து கொள்ளுதற்கு உரிய உறுப்பு அதன் மடியேயாவது போல, இறைவன் யாங்கணும் நீக்கமற நிற்பினும் அவன் விளங்கித் தோன்-றும் இடம் சிவலிங்கம் முதலிய திருமேனிகளே; அவையே அன்பு விளையும் இடம். ஆதலினால் அத்துவித ஞானம் பெற்றோன் ஆண்டே வழிபடுதற்கு உரியன். முதல்வனும் உலகும், அதுவும்இது—வும் எனப் பேதமும், அதுவே என்றோதப்படும் அபேதமும், அதுவா-கிய இது எனக் குணகுணிகள் போல வைத்து ஓதப்படும் பேதா பேதமும் அன்று; இம்மூன்றற்கும் பொதுவாய் ஆன்ம அறிவும் கண்-ணொளியும் போலப் பிரிவறு நிலையாகிய இரண்டன் ஒருமையே முதல்-வனுக்கு உலகத்தோடு உள்ள நிலை; இவ்வத்துவித ஞானத்தை நிலை பெறுத்துவது சிவலிங்க வழிபாடேஆகும். இதற்குச் செய்யுள் :

''அதுவிது என்ற(து) அது வல்லான் கண்டார்க்(கு)

அதுவிது என்றதையும் அல்லான்-பொதுவதனில்

அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே

அத்துவிதி அன்பில் தொழு''—எனவரும்.

அகண்டமும் தைவமே—எல்லாம் தேவனது உடைமையே. அன்பில்-அன்பு விளையும் இடமாகிய சிவலிங்க முதலிய திருமேனிகளில். அது இது என்றது அல்லான், அது (என்றது) அல்லான் எனக் கூட்டி-உரைக்க. அல்லான்-முற்றெச்சம். ஆதல்- ஆதலால்.

**ம-ர்** : சிவஞானி சிவமே **ஆதலின், அவன்** பின்னரும் குருவை ஏன் வழிபட வேண்டும்? சிவஞானிகளை ஏன் தொழ வேண்டும்?

**மெய்** : ''வினையால் அசத்து விளைதலால் ஞானம்

வினைதீரின் அன்றி விளையா – வினைதீர

ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்

ஆனத்தால் அன்பிற் றொழு''.

''தன்னை அறிவித்துத் தான்தானச் செய்தானைப்

பின்னை மறத்தல் பிழையலது – முன்னவனே

தானேதா னச்செய்தும் தைவமென்றுந் தைவமே

மானே தொழுகை வலி'' — என்னும் செய்யுட்களால்

முறையே திருவேடத்தையும் சிவகுருவையும் தொழுதலின் இன்றி-யமையாமையை உணர்ந்துகொள்க.

வினை – பிராரத்தவினை. அசத்து-விருப்பு, வெறுப்பு, மண் முதல் மாயை வரையுள்ள பொருள்கள், விபரீத உணர்வு என்பவை. ஞானம் - அதனை உடைய சிவஞானிகள். ஆனதனல் அன்பினல் தொழு என்க.

தன்னை—ஆன்மாவின் தன்னியல்பை. தான் தானகச் செய்தல்-ஆன்மாவைச் சிவத்துவ விளக்கமுடையதாகச் செய்தல். பிழை-அலது-தீர்திறனுள்ள பிழை அன்று. சிவத்துவ விளக்கம் பெறினும்

தேவனது அடிமை என்றும் அவனுக்கு அடிமையே ஆம்; ஆதலால் அம்மகானைத் தொழுதலே உனக்கு வலியாவது என உரைக்க.

மானே—மகானையே என்க.

**ம-ர் :** அடியேனுக்குக் கேளாதனவெல்லாம் கேட்பித்துச் சிவானந்தப் பெருவாழ்வை நல்கி, அந்நிலையிற் பிறழாவகையும் அருள்செய்தீர். இதற்கு யான் ஒரு கைம்மாறும் இலன். உமது திருவடியே எனக்குக் கதியாவது எனச் சொல்லி வீழ்ந்து இறைஞ்சினர்.

''வாழ்ந்தேன் அருட்கடலே வற்றுப் பவக்கடலில்
வீழ்ந்தே அலையாமல் மேதினியில்—சூழ்ந்துவிடா
வெண்ணைச் சுவேதவன மெய்கண்ட நாதனே!
உண்மைத் தவப்பயனே உற்று.

**மெய் :** இனி நீர் திருவதிகை சென்று தங்கி மங்கல வாழ்த்தோடு கூடிய இச்சூத்திரங்களைப் பரிபக்குவ ஆன்மாக்களுக்கு உணர்த்தி உய்விக்க! நம் அருள் உம்மை என்றும் எங்கும் காக்கும்.



# தசகாரியம்

ஆன்மா மெய்யுணர்வு எய்துதற்கண் நிகழும் உணர்வு மாற்றங்களைப் பத்துவகையில் வைத்துக்கூறும் முறை தசகாரியம் எனப் படும். தசம்=பத்து. காரியம்–செயல், ஞானச் செய்தி.

**பொருள்களை அறியும் முறை :**

உயிர்களின் உணர்வு பொருள்களை முன்னர்ப் பொதுவாகப் பருநிலையில் கண்டு, அவற்றைச் சிறப்பாக நுணுகி உணர்ந்து, பின் அவற்றின் பொருண்மையைப் பற்றும். இதனை நூல் உணர்ந்தோர் கண்டதைக்கொண்டு காணாததிற் செல்வது (From the Known to the unknown) என்றும், படிமுறையால் அறிவு நுணுகி வருதல் என்றும் குறிப்பர். திருவள்ளுவர் அறிவின் இவ்வியல்பை **''அறிதோறு அறியாமை கண்டற்றால்''** என உவமையாக வைத்துக் கூறுகிறார். இத்தொடரின் பொருளைப் பரிமேலழகர் பின்வருமாறு விவரிக்கிறார். ''நூல்களாலும் நுண்ணுணர்வாலும் பொருள்களை அறிய அறிய முன்னை அறியாமை கண்டாற்போல'', ''அறிவிற்கு எல்லையின்மையின் மேன்மேல் அறிய அறிய, முன்னை அறிவு அறியாமையாய் முடியுமாறுபோல'' எனவரும்.

**மூவகை ஞானம் :**

இனி, மெய்யுணர்ந்து அவா அறுத்து, வீடுபேறு எய்துவதே பிறவிப் பயன் என்பது தலையாய அறிவுடையார் எல்லார்க்கும் ஒத்த துணிவு. மெய் உணர்தல் என்பது கடவுள் எனக்கூறப்படும் மெய்ப்பொருளை ஒருவன் தன் உணர்வின் கண் விளங்கக் காண்பதே ஆகும். அங்ஙனம் காணலுறும் நெறியின்கண் உயிர்க்கு விளங்கும் உணர்வு விளக்கங்களை மூன்று படிநிலையில் வைத்துச் சித்தாந்த

சைவம் உணர்த்துகின்றது. அவற்றை முறையே பாசஞானம், பசுஞானம், பதிஞானம் எனப் பெயரிட்டு வழங்குவர். பிறப்புநிலையில் உள்ள உயிர், உடம்பையும் உலகையும் பற்றிநின்று, உலகப் பொருள்களைத் தனித்தனிச் சுட்டி அறிந்து வரும் உணர்வு பாச ஞானம் எனப்படும். தன் அறிவைக் கட்டுப்படுத்தும் பாசமாகிய தத்துவதாத்துவிகங்களால் விளங்கித் தனக்கு வேறான பொருள்களைப் பற்றி நிகழும் ஞானம் அது.

மெய்ப்பொருளைத் தலைப்பட்டு உணர விரும்புவோன், முதற்கண் தன்னைப்பற்றி ''நான் ஆர்?'' என உள்நோக்கி உணர்தல் வேண்டும். அவ்வாறு உணருப்போது, தன்னைத் தூல உடம்பு, சூக்கும உடம்பு முதலியவற்றின் வேறாக, ''இது நான் அல்லேன்'', ''இது நான் அல்லேன்'' எனக் கழித்துச் செல்லும் ஆராய்ச்சி உணர்வு நிகழும். அங்ஙனம் கழித்து மேம்படும் உணர்வு தத்துவக் கட்டுப்பாட்டின் நீங்கி வியாபகமாய் விளங்கும். அந்நிலையில் அவ்வான்மா தான்மட்டும் மெய்ப்பொருள்; முன்கண்டுவந்த பொருள் அனைத்தும், கனவிற்கண்ட பொருள் விழிப்பு நிலையில் மறைவதுபோல, மறைந்தொழிவன என உணரும். இது ''நான் முதல்'', ''அஹம் பிரஹ்மாஸ்மி'' என நிற்பது, இந்த அநுபவ உணர்வே முடிந்த மெய்யுணர்வு எனக்கொள்வாரும் உளர். அவர் இதற்கு ஏற்றபடி மெய்ந் நூல்களில் வரும் அநுபவ உரைகளுக்கு விளக்கம் கூறி மதம் அமைப்பர். ஆனால், சைவசித்தாந்த நெறிப்படி இது, தலைநகரில் உள்ள அரச மாளிகையில் செல்ல விரும்புவோன் தலைநகரைச் சூழ்ந்துள்ள புறநகரை அடைந்தாற் போன்றது.

நானே முதற்பொருள் (அஹம்பிரஹ்மாஸ்மி) என்னும் உணர்வு நிலையில் நின்ற மாணுக்கனைச் சைவ ஆசிரியர் பின்வருமாறு வினவி முதல்வனது அருளின் உண்மையை நினைப்பிக்கின்றார்.

''அன்றுமுதல் இன்றளவும் அண்ணல்அறி விப்பதன்றி
இன்(று)அறிவேன் நான்என்(று) இயம்புவதென் ?—என்றும்
அவத்தைதனில் உணர்த்திஆங்(கு) அருத்திஇன்(று)இத்
தவத்தில் உணர்த்தினர் ஆர்தான் ?
உன்அறிவை நீயே உணர்வையே ஆமாகில்
இந்நெடுநாள் பாசத்(து) இயையாயே - உன்அறிவை
நீங்கா அறிவாகி நீரும் இரதமும்போல்
ஆம்காண் அரனுர் அருள்.
''முதல்வன் அருள் இதுகாறும் மறைந்து நின்று உணர்த்தி

வந்தது. இப்பொழுதும் தவங்காரணமாகச் சற்குரவனாக நின்று உணர்த்தியதால்தான் நீ உன்னை உணர்ந்தாய்; நீ என்றும் முதல் ஆகாய்'' என்கிறார் ஆசிரியர்.

இங்ஙனம் ஞானாசிரியன் உணர்த்த, விளக்கொளி உள்ள-போதே தன் உண்மை உணரப்படும் கண்ணொளிபோல, தனக்குச் சார்பாகவுள்ள திருவருளால் தன்வியாபக நிலை உணரப்பட்டது எனக்கொண்டு திருவருள் உண்மையை உணர்வான் மாணவன். ஆயினும், அந்நிலையில் தனக்கு எல்லாச் செயலும் செய்தல்கூடும் என உணர்வன். இது முதல்வனோடு தன்னைச் சமம் எனக் கருதும் உணர்வு ஆதலால், சிவசம உணர்வு எனப்படும். இவ்வுணர்வும் மெய்யுணர்வாவதில்லை. பழுக்கக் காய்ச்சிய இரும்பாற் சுடும்-போது, சுடுதல் தீயின் செயலேயன்றி இரும்பின் செயலன்று. அதுபோல், பாசத்தின் நீங்கிய ஆன்மாவிற்குக் கூடும் செயல்கள் முதல்வன் செயல்களே அன்றி உயிரின் செயல்கள் அல்ல. இவ்வாறு இவ்வுணர்வு நிகழும்போது, ஆன்மாத் தன்செயலாவது ஒன்றும் இன்று என, நீர்வழிப்பட்ட புணைபோல, முதல்வன் திருவருளில் அடங்கி அதன் வயப்பட்டு நிற்கும்.

மேலே கூறிய உணர்வுநிலைகளில் நான் முதல் (அஹம் பிரஹ்ம) என நின்ற நிலையில் யான் என்னும் செருக்கும், முதல்வன் செய-லோடு ஒத்தசெயல் எனக்கு உண்டு என உணரும் நிலையில் (சிவசம உணர்வு) எனது என்னும் செருக்கும் இருத்தலின், இவ்இவிருவகை உணர்வும் பசுஞானம் எனப்படும். ''நான் ஆர்?'' எனப் பொருள் களைச் சுட்டித் தனக்கு வேறாகக் கழித்துச் சென்ற அறிவு அவ்வாறு பாசப்பற்று அறினும், முன்பயின்று வந்த பயிற்சி காரணமாக யான், எனது என்னும் செருக்காகிய பசுத்துவ வாதனை நீங்காமையால், நான்முதல் எனவும், எல்லாஞ்செயல் எனக்குக்கூடும் எனவும், மேற்-கூறிய உணர்வு நிலைகள் உண்டாதலின், அவை பசுஞானம் எனப்-பட்டன. பசுத்தன்மை முற்றும் நீங்காத நிலையில் விளங்கும் ஞானம் பசுஞானம்.

மேற் கூறியதிலிருந்து, பசுஞானம் ஒருவனுக்கு உளதாகும் பொழுது பாசஞானம் அறியாமையாய்க் கழிதல் விளங்கும். இப் பசுஞானமும் அவ்வாறு நீங்குவதே ஆகும்.

திருவருளின் உண்மையினையும் அதுவே தனக்குச் சார்பாய் நின்று தன் அறிவிச்சை செயல்களை விளக்கிச் செலுத்தும் முதலா தலையும் உண்மையான் உணரும் உணர்வே பதிஞானம் அல்லது சிவ ஞானம் எனப்படும். தலைவனின் அருளைச் சார்தல் பற்றி விளங்கும் ஞானம் பதிஞானம். இதுவே ''பவமதனை அற மாற்றும் பாங்கி-னில் ஓங்கிய ஞானம் உணர்வரிய மெய்ஞானம்'' எனச் சேக்கிழார் அடிகளால் குறிப்பிடப் பெற்றது. இங்கு முதல்வன் திருவருள் ஆன்ம உணர்வின் கண் அளப்பரிய ஆகாயத்தை விளக்கி எழும் ஞாயிறு போன்று பேரொளியாய் எழுவது. அதனை ஒளியாய் மட்டும் உணர்ந்து நில்லாமல், அதில்தன் முனைப்புச் சிறிது மின்றி அடங்கி நிற்பார்க்கு அவ்வருளுக்கு முதலாக உள்ள பரசிவம் இறவாத இன்பஅன்பாய் வெளிப்பட்டு ஆன்மாவைத் தன்னுள் அடக்கிக் கொண்டு தானே ஆகி நிற்கும். அன்பே இன்பமாய் அமரும் இந்நிலையே, ''யான் ஆகிய என்னை விழுங்கி வெறுந்-தானாய் நிலை நின்றது தற்பரமே'', ''அறி-வொன்றற நின்(று) அறிவார் அறிவில் - பிறிவொன்றற நின்ற பிரான் அலையோ'' என்றாற்போல வழி மொழியப்படும் பேசா அனுபூதி நிலை. இச்சிவஞானம் ஒருவன் உணர்வில் விளங்கும் போது, முன் விளங்கிய பசுஞானம் அறியாமையாய்க் கழியும். இங்ஙனம் அவன் அருளே கண்ணாகக் கொண்டு, அவனருளால் அவன்தாள் வணங்கி இருள் கடிந்து, உள்ளத்து எழுகின்ற ஞாயிறே போன்று நின்ற முதல்வன் தன்மையினையே நினைப்பற நினைந்து இன்புறும் உணர்வு நிலையாகிய சிவஞானம், முடிந்த உணர்வு நிலைஆகும்; இதனைக் கழிப்பிக்கும் உணர்-வாய்ப் பிறிதோர் உணர்வு இல்லாமையால், இது ''நன்னலம்பெற நிறைந்த ஞானம்,'' ''சுதந்திர ஞானம்'' எனச் சிறப்பித்துக் கூறப்-படும்.

**பத்து நிலைகளாக வைத்து உணர்த்துதல்:**

மேலே கூறிய முறையில் பாசஞானம் நீங்கிப் பசுஞானம் விளங்கப் பெறுதலையும், பின்னர் அதுவும் நீங்கச் சிவஞானம் விளங்கப் பெறுதலையும் பத்து வகையில் வைத்து விளங்க உணர்த்தும் முறை தச காரியம் எனப்படும்.

ஆன்மா ஐம்பொறி, மனம் முதலிய தத்துவங்களோடு கூடி அவற்றின் செயலை தன் செயலாகக் கண்டு வரும் உணர்வு நிலையே பாசஞானநிலை எனப்பட்டது. அதை நீக்கிக் கொள்ளுதற்கு முதற்-

கண் தத்துவங்களின் இயல்பைச் சுட்டி உணரவேண்டும். பின்வரும் உதாரணத்தைக் கவனிப்போம்; ஒருபொருளை கண்ணாற் காண்கிறோம்: அப்பொழுது "நான் இதனைக் காண்கின்றேன்" என்னும் உணர்வு நிகழ்கின்றது. இங்கே உயிர் கண்ணேதான் என உணர்ந்து நிற்கின்றது; கண் ஒரு பொருளின் உருவை மட்டும் காண உதவுகிறது; மேலும், ஒரு பொருளைக் கண்டபின், கண்ணை மூடிக்கொண்டு எண்ணும் போது அப்பொழுதும் உள்ளத்தில் அதன் உருவம் தோன்றும். அத்தோற்றம் கண்ணால் காணப்படுவது அன்று; முன் கண்ணோடு ஒன்றி நின்று உணர்ந்த மனத்தால் நிகழ்வது அது. கண் முதலிய பொறிகளுள் ஒன்று அறியும் புலனை மற்றொன்று அறியாது. ஆனால், அவற்றின் வேறாக உள்ள மனம், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தையும், விருப்பு, வெறுப்பு, அன்பு முதலிய பிழம்பு அறியப்படாத பொருள்களையும் உணரும். இதனால், நாம் கண் முதலிய பொறிகளுக்கு வேறாய் இருந்தும் அவற்றோடு கூடி நின்று புலன்களை அறிந்து வருகிறோம் என்று உணரலாம். இவ்வாறு நமக்குப் பொருள் உணர்வைத் தோற்றுவிக்கும் கருவிகளை முப்பத்தாறு தத்துவங்களாக ஞானநூல்கள் வகுத்துக் கூறுகின்றன.

அவற்றின் நீங்குதற்கு அத்தத்துவங்களால் நமக்கு விளங்கும் அறிவிச்சை செயல்களின் விருத்திகளை இன்ன இன்ன என முன்னர் உணர்தல் வேண்டும். அங்ஙனம் உணரும் உணர்வு **தத்துவ ரூபம்** எனப்படும். பின், அவை தாமே அறிவன அல்ல; கண்ணுக்குக் காட்டும் கண்ணாடிபோல, உயிர்க்குக் காட்டும் அறிவில் பொருள்கள் என்று உணர்தல் வேண்டும்; அங்ஙனம் உணர்தல் **தத்துவ தரிசனம்** எனப்படும். அதன்பின்னே நமக்கு அன்றாடம் நிகழும் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், தன்வசம் அழிதல் என்னும் நிலைகளில் வைத்து, அத்தத்துவங்கள் ஆன்மாவினின்று நீங்குவனவாயிருத்தலையும் சுட்டி உணர்தல் வேண்டும். இது **தத்துவசுத்தி** எனப்படும். இங்கு உருவம், தரிசனம், சுத்தி என்னும் சொற்கள் பொதுவாகக்-காணுதல், ஐயுறவோடு காணுதல், தெளியக் காணுதல் என்ற பொருளில் உள்ளன. தத்துவசுத்தி என்னும் பாசத்தைப் பற்றிய தெளிவுக்காட்சி எய்திய ஆன்மா, அக்காட்சி பற்றிப் பாசத்தின் நீங்குதலின், பாசஞானத்தின் நீங்கித் தன்வியாபகநிலை உணரப்பெற்றுத் தான் முதல்என நிற்கும். இங்ஙனம் தன்னை உணர்தலே ஆன்மாவின் இயல்பைப் பொதுப்படக் காண்டல். ஆதலால் இக்காட்சி **ஆன்மரூபம்** எனப்படும். மேலே கூறியபடி, இவ்வுணர்வு நீங்குதற்குக் காரணமாய், ஞானஆசிரியனால் நினைப்பிக்கப்படும்

திருவருளின் உண்மையை உணரும் உணர்வு சிவரூபம் எனப்படும். ஆகாயத்தின் அளப்பருந் தன்மையைக் காணும்போது, அங்குக்-காணப்படுவது வெறும் வெளிமட்டுமன்றி அவ்வெளியின் அளப்-பருந் தன்மையைக் காட்டிநிற்கும் ஞாயிற்றின் ஒளியும்ஆகும். அவ்-வொளி பற்றியே ஆகாயத்தின் பரப்பு உணரப்படுகின்றது. அது-போல, ஆன்மவியாபகம் உணரப்பட்டதுஅதற்குச் சார்பாய் யாங்கணும் நிறைந்துள்ள திருவருள் ஒளி இருத்தல் பற்றியே எனத் திருவருளின் உண்மையைப் பொதுவாக உணர்வதே சிவரூபம் எனப்பட்டது. இச்சிவரூபம், ஆன்மரூபம் எனப்பட்ட பசுஞானத்தை அறியாமையாய்க் கழிப்பித்துச் சிவசம உணர்வு தோன்றுவதற்கு முன்னிலையாகி நிற்கும். தான் முதல் அன்றெனினும், ''எல்லாம் செய்தல் எனக்கே கைகூடும்'' எனத் தன்னை உணர்தல் ஆன்ம தரிசனம் எனப்படும். முத்திநிலைக்கண் முத்தான்மாக்களிடத்து நிகழும் அற்புதச்செயல் அனைத்தும் முதல்வன் செயலே அன்றிப்-பிறிதில்லை; அது மின் ஆற்றல் ஒருபொருளைப் பற்றி நின்று (Resistance wire) தன்னை விளக்குதல் போன்றது எனத் திருவருளின் ஆற்றலைச் செம்மையாக உணர்தல் சிவதரிசனம் எனப்படும். இவ்-வுணர்வு எனது என்னும் செருக்காய் நின்ற ஆன்ம தரிசனம் எனப்பட்ட பசுஞானம் கழிதற்கு ஏதுவாவது.

இங்ஙனம், சிவரூபம், சிவதரிசனம் என்னும் உணர்வுகளால் ஆன்மரூபம், ஆன்மதரிசனம் என்னும் பசுஞானங்கள் பற்றறக்-கழியும்போது பசுத்துவவாதனை முற்றிலும் நீங்கி விடுகிறது. அந்நிலையில் ஆன்மா, திருவருள் உண்மையை முன்னெல்லாம் காணாது தானே என நின்றாற்போல, இப்போது தான் அதுவே யாகித் தற்போதம் சிறிதும் இன்றித் திருவருள் வயப்பட்டு ஒன்றி நின்று, அவ்வருளால் அன்றி ஒன்றையும் அறிதலும் செய்தலும் இன்றி நிற்கும். யான் முதல் அல்லேன்; என்செயலும் இல்லை; எல்லாம் முதல்வன் செயலே என உணர்ந்து நிற்கும் உணர்வு ஆன்ம இயல்பைத் தெளிய உணர்தலாகிய ஆன்மசுத்தி எனப்படும். இவ்-வுணர்வு நிலையில் ஆன்மஉணர்வு திருவருளோடு பிரிப்பின்றி ஒன்றி அதன் வயப்பட்டு நிற்றலின், அங்ஙனந்தன்னைத் தன்வயப்படுத்தித் தானேயாய் நிற்றல் முதல்வன் இயல்பு என்பது உணரப்படும். இவ்வுணர்வே சிவயோகம் எனப்படும். இது நின்மலதுரியஅருணிலை எனவும் கூறப்படும். ''எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத்,

தானேயாகிய தயாபரன் எம்மிறை'', ''ஒருவனே உருத்திரன். இரண்டாவதாக நிற்பவன் அல்லன்; அவன் தன் ஆளும் சத்தியால் எல்லாவற்றையும் ஆண்டு, காணப்படாமல் உள்ளே நிலையுறுகின்-ருன்'' என்ருற்போல எழுந்த சுருதிகள் இவ்வநுபவ வெளிப்பாடே ஆகும்.

இந்நிலைக்குமேல், திருவருளுக்கு முதலாகிய சிவத்தை மெய் யன்பாற்றலைப்பட்டு அன்பே இன்பமாய் அமரும்நிலை **சிவபோகம்** எனப்படும். இதுவே பிறவியின் முடிநிலைப் பெரும்பயன் ஆதலால், இஃது **ஆன்மலாபம்** எனவும்படும். இந்நிலை இப்பிறவி-யில் இப்பொழுதே பெறக்கூடியது (Here and now). இது நின்மல துரியாதீத **ஆனந்தநிலை** எனவும் கூறப்படும். இங்குக் கூறிய தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் பத்துமே தசகாரியம் எனப்படும்.

சூரியன் ஈர்ப்புச் சூழலில் பூமியும், பூமியின் ஈர்ப்புச் சூழலில் சந்திரனும் அடங்கி நின்று, ஒவ்வொன்றும் தானும் தன் ஈர்ப்புச் சூழலும் (Gravitational field) என இருவகைப் பட்டு இயைந்து நின்று வியாபக வியாப்பியமாய் நிற்றல்போல, முதற்பொருள் சிவம், சத்தி என இரு தன்மைப் பட்டு, இயைந்து நின்று உயிரையும் பாசத்தை யும் தன்கண் அடங்கக் கொண்டு தொழிற் படுத்தும்; சிவசத்தியில் அடங்கி நின்று தொழிற்படுல் உயிர் ஆணவமலங் காரணமாக அச்-சத்தியின் உண்மையை அறியாது, தத்துவங்களாகிய பாசத்தைப் பற்றித் தொழிற் பட்டும் தொழிற் படுத்தியும் வரும். முதல்வன் வியாபகத்தில் உயிர் அடங்கி நிற்றல் போல, உயிரின் வியாபகத்தில் தத்துவங்கள் அடங்குவன; உயிர் தனக்கு முதலாகத் தன்னை அடக்கிக் கொண்டுள்ள முதற் பொருளை நோக்காது தத்துவங்களைப் பற்றிச் சிறுமைப் பட்டு உலக போகங்களை நோக்கி நிற்கும் நிலையே பிறப்பு நிலை. இதுபாற்கடலில் உள்ள மீன் தனக்குப் பரம ஆதாரமாக உள்ளபாலைப் பருகிவாழ எண்ணுது அதன் கண் வீழ்ந்து கிடக்கும் வேறுசிறு பொருள்களை நோச்கி அருந்த எண்ணி முயலுதல் போலும்.

மேலே விளக்கிய தசகாரியம் புறப்பொருளை நோக்கி நின்ற உயிரை, முன்னர்த் தன்னை உணரவைத்து, பின் அங்ஙனம் உணரும்

நிலையிலேயே உடன் உள்ள திருவருளையும், அத்திருவருளுக்கு முதலாக உள்ள சிவத்தையும் உணரவைக்கும் படி முறையாகும்.

முப்பொருளும் வேறு வேறு பிரிந்து நில்லாமல் ஒன்றோடொன்று கலந்து பிரிப்பின்றி உடன் நிற்பவை ஆதலால், மேலே கூறிய பத்து ஞானச் செய்திகளும் ஒன்றன்பின் ஒன்றாய் நிகழாமல், அவற்றுள் சில உடன் நிகழ்வனவாம். இது மேற்கூறிய விளக்கத்தாலும் உணரப் படும். குறிப்பாக, சிவரூபம் ஆன்ம தரிசனத்தைப் பயத்தலால் அஃது அதில் அடங்கும்; அங்ஙனமே சிவதரிசனம், சிவயோகம் என்பவை ஆன்ம சுத்தியில் அடங்கும். சிவபோகம் ஆன்ம லாபம் எனப்படும். இவ்வாறாதலின், ஆணவத்தின் நீங்கிய நின்மல சுத்தாவத்-தையை ஐந்தவத்தையென வைத்து உணரும் பொழுது தச காரியங்-களைத் (1) தத்துவரூபம், (2) தத்துவதரிசனம், (3) தத்துவசுத்தி, (4) ஆன்மரூபம், (5) ஆன்மதரிசனம், (6) ஆன்மசுத்தி, (7) ஆன்மலாபம் என ஏழு அவதரங்களாக உணர்த்தி, இவற்றுள் ஆன்மரூபம் வரை-யுள்ள நான்கும் நின்மல சாக்கிரம், ஆன்ம தரிசனம் நின்மல சொப் பனம், ஆன்மசுத்தி, நின்மலதுரியம், ஆன்மலாபம் நின்மலதுரியா-தீதம் என அடக்கிக் கூறுவது துறைசையாதீன ஞான அநுபவ மர-பாக உள்ளது. நின்மல சுழுத்தி என ஓர் அவத்தை இங்குக் கூறப்-படுவதில்லை. அஃது ஆன்மா தனக்கு எல்லாச் செயலும் உள்ளன என உணரும் அளவில் தோன்றிப் பின் மறைவது.

இந்நிலைகள் கரும்பை நுனியினின்றும் நுகர்வோனுக்கு இன்பம் பெருகுதல் போல, மேன்மேலும் இன்பத்தைப் பெருக்கி முடிவில் வரம்பிலா இன்பத்தில் உய்ப்பன. ஆதலால், மேலே கூறிய சுத்தா வத்தையைப் பத்து முழம் உள்ள கரும்பாகவும், அஃது ஏழு கூறு உடையதாகவும் உருவகித்து அவற்றில் முதல் நான்கும் ஒரு கணு, பின் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கணு எனக் கூறியுள்ளனர் பெரி-யோர். பின் வரும் பஞ்சாக்கரப் பஃறொடை அடிகள் கருத்தில் வைக்-கத் தக்கவை. இது திருவாடுதுறை ஞான ஆசிரியர்களுள் ஒருவராகிய பேரூர் வேலப்பதேசிகர் அருளிச் செய்தது;

''பிரியாத ஐந்தவத்தைப் பேற்றிற் - சரியாய்த்
தெசகாரியம் ஏழாய்ச் சேரும்; உவமை
வசமாம் கரும்பின் வகைகேள் - நிசமான
சுத்தவத்தை யாங்கரும்பின் தொல்கணு ஐந்தாகும்; முறை
முத்தி வருசாக் கிரமுதலாம்; - பத்து
முழம்கா ரியம் : அவற்றின் மூன்றடக்கிப் பங்கேழ்
தத்துவ ரூபமுடன் தற்காட்சி சுத்தி உயிர்
ஒத்த உருவம் உயர் காட்சி - சுத்தி
இலாபம் இவை ஏழில் இலங்கும் உயிர்க் காட்சி
நிலாவு சிவரூபம் நேராம்; குலாவு சுத்தி
தன்னிற் றரிசனமும் சார்யோகம் ஆம் இரண்டும்
மன்னும்; இவை ஏழும் வரும் முறையில் - துன்னுகின்ற
சாக்கிரத்தில் நான்கு; தருஞ் சொப்பனம் ஒன்று;
நீக்குஞ் சுழுத்தி; நிறை துரியத்(து) - ஆக்கியிடும்
ஒன்றும்; அதீதத்தே உற்றிடும் ஒன்(று) ஆகும்''.



# சைவ சித்தாந்தத் திறவு

## அருஞ்சொற் பொருள்விளக்கம்

*அகலர்* - கலையில்லாதவர், விஞ்ஞானகலர், பிளயாகலர் என்னும் இருதிறத்து உயிர்வகைகளுக்கும் பொதுப்பெயர்: சகலர் என்பது இதன் எதிர்ச்சொல். இங்குக் கலை என்பது பந்தம் அல்லது தடை என்னும் பொருளில் ஆளப்படுகிறது.

*அசற்காரியம்* - காரியம் காரணத்தில் முன் இல்லாமல் புதிதாக உண்டாகிறது என்னும் கொள்கை.

*அசத்து* – மாற்றம் உள்ளது; இல்லது.

*அசித்து* - அறிவில்லது.

*அசுத்த மாயை* - மலம் கன்மம் என்பவற்றோடு கலந்து உள்ள மாயை

*அபாவம்* - இன்மை, உண்மையின் மறுதலை.

*அபேதம்* - பேதம் இன்மை; வேறுபாடின்மை.

*அத்துவிதம்* - இருதிறன் இன்மை, வேறுதல் இன்மை, பிரிப்பின்மை. துவி—இரண்டு, துவிதா—இருதிறன்: அ (= ந) — மறுக்கும் இடைச்சொல்.

*அநாதி* - தோற்றம் இன்மை; அந்(=ந)—மறுக்கும் இடைச்சொல். ஆதி - தோற்றம்.

*அளவை* - அளத்தற்கருவி; அளத்தல்—உண்மையாக அறிதல்: மெய்யறிவிற்குக் கருவி; பிரமாணம் என்னும் வட சொற்கு ஒத்தசொல்லாகத் தமிழில் ஆளப்படுவது.

**அவத்தை** - உணர்வுநிலை; கேவலம், சகலம், சுத்தம் என்பவை காரண அவத்தை; நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்பவை காரிய அவத்தைகள்.

**ஆகந்துகம்** - செயற்கை; பின்வந்து கூடியது; மாயையும் கன்மமும் ஆகந்துக மலம் எனப்படும். ஆணவம் சகசமலம்.

**ஆகுபெயர்** - ஒரு பெயர் தன் இயற்பொருளை விட்டு, அதனோடு தொடர்புள்ள பிற பொருளை உணர்த்து மிடத்து ஆகு பெயர் எனப்படும். 'பாவைதாள்' என்னும் போது பாவை ஆகுபெயர்; பாவை போல்வாள் என்பது கருத்து.

**ஆக்கம்** - காரியம், செயற்கை.

**ஆதி** - முதல், தோற்றம்.

**ஆதியான்மிகம்** - வினைப்பயன் வெளிப்படும் வாயில்கள் மூன்றனுள் ஒன்று; தன்னால் வருவது.

**ஆதிதெய்விகம்** - தெய்வத்தான் வருவது: ஆதியான்மிகம் என்பதன் விளக்கத்தையும் காண்க.

**ஆதிபௌதிகம்** - மழை, புயல் முதலாகப் பூதங்களால் வருவது; ஆதி-யான்மிகம் பார்க்க.

**உபநிடதம்** - வேதத்தின் முடிந்த பாகமாய் மெய்யுணர்வு இயல் உணர்த்தும் பகுதி: ஈசாவாசியம், கேனம், சுவேதா சுவதரம், கடம், பிரச்சினம், தைத்திரீயம், சாந்தோக்கியம், பிருகதாரணியகம் என்பவை சில உப நிடதங்கள். ஆசிரியன் பக்கத்தில் இருந்து கேட்பது என்பது சொற்பொருள்.

**உபலக்கணம்** - ஒரு சொல் தனக்கு இனமாக உள்ள பிற சொற் பொருளையும் குறித்தல்; வெற்றிலையுண்டான் என்னும்போது வெற்றிலை என்னும் சொல் தன் இன மாகிய பாக்கு, சுண்ணும்பு என்பவற்றையும் குறித்தல் காண்க.

*உபாதானம்* - முதற்காரணம்.

*உயிர்* - உயிர்த்தற்குக் காரணமாக உள்ள அறிவுடைப் பொருள், ஆன்மா. உயிர்ப்பையும் சில இடத்துக் குறிக்கும்.

*உய்த்துணர்தல்*- பொருந்துமாறு பற்றி அறிவைச் செலுத்தி உணர்தல். இச்செய்விளைந்தது என்றால், இந்நிலம் தன் கண் இட்ட விதைகள் முளைத்தற்குத் தகுதியாய் இருந்தது என நுணுகி உணர்தல் போன்றது.

*ஒண்தளை* - அறிவை விளக்கும்தளை, மாயை.

*கரணம்* - கருவி, சிறந்த காரணம். (தனு, கரண, புவனபோகம் என்பதில் கரணம் தத்துவம் எனப்பொருள்படும்.)

***காண்டம்*** - தொகுதி; பிரேரக காண்டம், போசயித்துரு காண்டம், போக்கிய காண்டம்.

***காரணம்*** - முதல்நிலை; தோன்றும் பொருளுக்கு இன்றியமை-யாத தாய் முன் உள்ளது.

***காரண அவத்தை*** - அவத்தை பார்க்க.

*காரிய அவத்தை* - அவத்தை பார்க்க.

*கேவலாத்துவிதம்* - ஒரு பொருட்கொள்கை, ஏகான்ம வாதம். அத்து விதம் என்னும் சொல்லின் பொருளை ஒன்று எனக் கூறி, அதன் கருத்தைத் தெரிவிக்கும்போது, கேவலம் ஒன்று, ஒன்றே என்னும்படி இருத்தல் என விளக்கும் கொள்கை. சங்கரர் முதலாயினர் கொள்கை.

*கோசரம்* - உணர்வுக்கு விளக்கமாவது; விடயமாவது; புலனாவது.

***சகலர்*** - கலையினாற் பிணிப்புண்டோர்: அகலர் என்பது இதன் எதிர்ச் சொல்.

***சங்கற்பம்*** - பொருளை நோக்கும் திருவருள், நினைவு, கருத்து.

*சதசத்து* - அசத்தைச் சார்ந்து அசத்தாயும் சத்தைச் சார்ந்து அசத்தின் நீங்கிச் சத்தாயும் விளங்குவது. அஃது ஆன்மா.

*சத்தி* - ஆற்றல், வல்லமை; அறிதல், விழைதல், இயற்றுதல் என நிகழ்தற்குரிய வல்லமை.

*சத்தி நிபாதம்* - திருவருளின் வீழ்ச்சி: சத்தி-திருவருள், நி-ஏற்றமாக, பாதம்-வீழ்ச்சி.

*சத்து* - மாறுபடாத செம்பொருள், முதற்பொருள், சிவம், பரம் பொருள்.

*சமட்டி* - கூடியநிலை: அ, உ, ம் என்பவற்றின் கூடியநிலை ஓம் என்பது; வியட்டி என்பது எதிர்ச்சொல்.

*சற்காரியம்* - காரியம் வெளிப்படுவதற்குமுன் காரணத்தில் வெளிப்படாது உள்ளது என்னும் கொள்கை. சத்திகாரணம், வியத்தி காரியம் (ஆற்றல் உருவே காரணநிலை, புலப்படுநிலை காரியநிலை) என்னும் கொள்கை. சத்-உள்ளது; காரியம்-ஆக்கப்பாடு எய்துவது.

*சாதகம் (சாதனம்)* - குறித்த பயனை எய்துவிக்கும் வாயில் அல்லது ஒழுக்கமுறை; கருவி.

*சிறப்பியல்பு* - குறித்த பொருளின் கண்ணே இருக்கும் இயல்பு (பொது நூல்களில்); பிற பொருட்சார்பு பற்றாது குறித்த பொருளில் உள்ளதாக அறியப்படும் இயல்பு (சாத்திர வழக்கு): பின்னையது உண்மையியல்பு, சொரூபலக்கணம் எனவும்படும்.

*சுழல்*-காரண காரியமாகச் சுழன்று வரும் வட்டம்: புத்தியின் குணங்களாகிய அறம், அறிவு, வெறுப்பு, செல்வம், பாவம், அறியாமை, விருப்பு, வறுமை என்னும் எட்டும் புத்திபாவகச் சுழல் எனப்படும். இவை, தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதன்மம, அஞ்ஞானம், அவைராக்கியம், அநைசுவரியம் எனவும் குறிக்கப்படும்.

**சாமுசித்தர்** - முற்பிறவிகளில் தவத்தை முடித்து மெய்யுணர்வு விளகுகுதற்குரிய பக்குவ முதிர்ச்சியுடையவர். சம்சித்தம் நன்ருகக் கூடப்பெறுதல்) உடையவர் சாமுசித்தர்.

**சூத்திரம்** - சிலவாய சொற்களில் கருதிய பொருளைக் குறிக்கும் சொற்றொடர்: உ-ம் பிரம்ம சூத்திரம் நூற்பா: கருதிய பொருளைச் செம்மையாகச் செறித்து நுண்ணுணர்வினுற் கொள்ள வைப்பது: உ-ம் சிவஞான போத சூத்திரம்

**ஞாதுரு** - அறிவடிப்படை மூன்றனுள் ஒன்று: அறிவோன்.

**ஞானம்** - அறிவு, (அறிவோனையும், அறியப்படு பொருளையும் உடன் கொண்டு வருவது).

**ஞேயம்** - அறிவடிப்படை மூன்றனுள் ஒன்று: அறியப்படு பொருள்

**தடத்தவியல்பு** - பிற பொருட் சார்பு பற்றி ஒரு பொருட்குக். கூறப்படும் இலக்கணம் தடத்த இயல்பு எனப்படும் தடம்-அணிமை; தம்-உள்ளது. இது பொது இய-ல்பு எனவும் குறிக்கப்படும்.

**தத்துவம்** - உண்மை; படைப்புக்காலம் முதலாக ஒடுக்க காலம் வரை தன் தன்மை மாருது உள்ள பொருள், தத்-அதனது. த்வம்-தன்மை. சைவத்தில் தத்துவம் 36; சாங்கி-யத்தில் 25.

**தனு**- உடம்பு, தனு, கரணம், புவனம், போகம் என்பவை உடன் எண்ணப்படும்: இவை மாயையின் காரியங்கள்.

**தாதான்மியம்** - அது தானுதற்கு ஏதுவாகிய சம்பந்தம்; இஃது இரு வகைப்படும்: ஒரு பொருளே குணம் குணி எனவோ, அவயவம் அவயவி எனவோ ஒருவகையால் இரண்டு என வழங்குவதற்கு ஏதுவாயது ஒன்று: இது தாதான்மிய சம்பந்தம், தற்கிழமை, சமவாயம் என

வழங்கும், மற்றொன்று இரண்டு பொருள்கள் ஒரு-வகையால் ஒன்று என்று சொல்லும்படி செயற்பட ஏதுவாய் உள்ளது: இஃது. அத்துவிதம்-எனப்படும் ஒரு பொருளைக் காணும்போது, கண்ணுக்கும் அதை விளக்கிச் செலுத்தும் ஆன்ம அறிவுக்கும் உள்ள சம்பந்தம் இது.

**தாற்பரியம்**-சொற்பொருளுக்கு மூலமாக உள்ள கருத்து தத்-அது பரம்-மூலம். சொல் வேறு, பொருள்வேறு, கருத்து வேறு என்று வேறுபடுத்தி உணர்தல் வேண்டும். வேதங்களில் ஏகம் எனவருவது சொல்; அதன்பொருள் ஒன்று என்பது; தாற்பரியம் பதிப்பொருள் ஒன்று என்பது. பதார்த்தம் ஒன்றென்பது அன்று.

**தாரகம்**–சார்பு, ஆதாரம். முதல்வன் உலகிற்குத் தாரகம்: முதற் பொருளைக் குறிக்கும் பிரணவமும் தாரகம் எனப்படும்

**திருநோக்கம்**-தீக்கையின் வகைகளில் ஒன்று: ஆசிரியன் மாணுக்கனை நோக்கி அவனது அறியாமைப் பிணிப்பை நீக்குவது. நோக்கம்-பார்த்தல்.

**தீக்கை**-ஆகமச் சார்புள்ள நெறிகளில் செய்யப்படும் ஒரு தொடக்கச் சடங்கு: அது திரு நோக்கம் முதலாகவும், சமயம், விசேடம் நிருவானம் எனவும் பலவகைப்படும். தீ-கொடுத்தல், க்ஷா-கெடுத்தல். மலப்பிணிப்பைக் கெடுத்து மெய்யுணர்வைக் கொடுப்பது தீக்கை (தீக்ஷா) எனப்படும். சமயம்-சமய நுழைவும் திருவைந்தெழுத்தோதவும் செய்வது; விசேடம்-சிவலிங்க பூசை மேற்கொள்விப்பது, நிருவாணம்-வினையை நீக்கி ஞானோபதேசம் கொள்விப்பது. சிவபூசையே சிவ யோகமாக முற்றும்.

**துணைக்காரணம்**-ஒரு காரியத்திற்கு வேண்டிய முதல், துணை நிமித்தம் என்னும் மூன்று காரணங்களுள் ஒன்று.

முதற்காரணம் காரியமாகும்வரை உடன்நிகழ்ந்து பின் பிரிவது. குடமாகிய காரியத்திற்கு மண் முதற்காரணம், தண்டு, திரிகை, குலாலன் கை என்பவை துணைக்காரணம். உலமாகிய காரியத்திற்கு மாயை முதற்காரணம், இறைவனது வல்லமையும் அதன் வழிப்படும் இருவினைகளும் துணைக்காரணம்.

*நியாயம்* - ஆறு தரிசனங்களில் ஒன்று (நியாயம் வைசேடிகம், சாங்கியம், யோகம், பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை அல்லது வேதாந்தம்); பொருள் விளக்கத்திற்கு எடுத்துக் காட்டாகக் கூறப்பட்டு வரும் சில உவமைகள்: உ-ம்: பிரமரகீட நியாயம், தூலாருந்ததி நியாயம்.

*நிமித்தகாரணம்* - தொழிலிற் சுதந்திரம் உடையோன்: ஒரு காரிய-நிகழ்ச்சியில் முதற்காரணம் முதலியவற்றின் இயல்பு அறிந்து செய்வோன், வினை முதல். செய் தொழிலில் தன்வயம் உடைய அறிவுடையோன்,

*பக்குவம்* - குறித்த பயனைத் தருதற்குரிய வளர்ச்சியுடைமை: ஒருவன் செய்த வினை தன்பயனை விளைத்தற்குரிய செவ்வி; உயிரைப் பற்றியுள்ள மலப்பிணிப்பு நீங்குதற்கு உரிய செவ்வி (மல பரிபாகம்): மலரும் பருவத்தை எய்தியுள்ள போது (மொட்டு) போல, உயிர் திருவருளைத் தலைப்பட்டுணர்ந்—தின்புறுவதற்குரிய நிலை,

*பசுஞானம்* - ஆன்மா தான் உடல் முதலிய புறப்பொருள்களின் வேறு என்று உணரும் நிலையில் திருவருளின் உண்மையை உணராமையால் தானே முதல்வன், தன்னின் வேறாய பொருள் ஒன்றுமில்லை எனச் செருக்கி நிற்கும் உணர்வு. இது பரா அகந்தை எனப் பிறநெறியினரால் குறிக்கப்-படுகிறது.

*பதார்த்தம்* - சொற்குப் பொருள்: பதம்-சொல், அர்த்தம்-பொருள். சொல்லாற் பெயரிட்டு வழங்கப்படும் பொருள், குணம்

செயல், பொதுமை, சிறப்பு, ஒற்றுமைச் சம்பந்தம், இன்மை'' எனப் பிரித்து உணர்வன அனைத்திற்கும் பொதுவாக வழங்கும் பெயர்.

*பதிஞானம்* - முதற்பொருளை அதன் அருளொளி வாயிலாகத் தலைப்பட்டுணரும் மெய்யுணர்வு. சிவஞானம் எனவும் குறிக்கப்படும்.

*பத்ததி* - முறைமை; சிவநெறியிற் கூறப்படும் வழிபாடு, தீக்கை முதலியவற்றை நடைமுறையிற் கடைப்பிடித்தற்கு உரிய விதிகளை ஒழுங்கு செய்து தெரிவிக்கும் நூல்; சோமசம்பு பத்ததி, அகோர சிவ பத்ததி என்றாற் போல உள்ளவை: இவை கிரியாக்கிரமாவளி (செயல் முறை வரிசை) எனவும் வழங்கப்படும்.

*பரிசம்* -தொடுதல்; தீக்கை வகைகளில் ஒன்று-ஆசிரியன் தன் கையைச் சிவமாக எண்ணி மாணாக்கன் நெஞ்சிலும் தலையிலும் வைத்தல்; ஆசிரியன் தன் அடிகளை மாணவன் முடிமேல் வைத்தலும் பரிச தீக்கையே யாகும்.

*பாவம்* - சமய நூல்களில் விலக்கியவற்றைச் செய்தல்; பின் துன்பத்தைத் தருவது,

*பாவனை* -(ஒருவன் தன் உள்ளத்தில்) எண்ணுதல். ஆசிரியன் மாணாக்கனை ''இவன்சிவம்'' என எண்ணுதல் அருளுருவப் பாவனை; ''நீ சிவம்'' என அறிவுறுத்தப் பட்ட மாணவன் ''சிவம் நான்'' எனப்பாவித்தல் சிவோகம் பாவனை எனப்படும்; சோகம் (அது நான்) என உன்னுதல் சோகம் பாவனை, இவை உபாசனை (இறைவனை அணுகும் முறை) வடிவில் உள்ளவை.

*பிரமரகீட நியாயம்* - வண்டு புழுவைத் தன் வண்ணமாக்குவது போன்றதோர் முறை, பிரமரம்-வண்டு (குளவி); கீடம்-புழு. குளவிதான் இடும் முட்டையினின்று வெளிப்படும் புழுவடிவமே பின் குளவி வடிவத்தைப் பெறும்: வெளியிலிருந்து எடுத்துச் செல்லும் புழு குளவியின் குட்டிக்கு உணவாகின்றது. வேறு சொல்லி வருவது தவறாகும்.

*பிரமாணம்* - அளவை, மெய்யறிவிற்குக் கருவி-பிரமாகரணம் பிரமாணம்: பிரமா-மெய்யறிவு.

*பிரளயாகலர்* - மூவகை உயிரினங்களுள் ஒன்று; ஆணவம், கன்மம் என்னும் இரண்டாற் பிணிப்புண்டிருப்போர். விஞ்ஞானகலர், சகலர், அகலர் என்பவற்றையும் பார்க்க.

**புத்திகுணம்** - மனிதன் பொருளை இன்னது எனத் துணிவதற்குக் கருவியாக உள்ள அகவுறுப்பு புத்தி எனப்படும். அதன்கண் தோன்றும் குணங்கள் அறம், அறிவு, வெறுப்பு, செல்வம், பாவம், அறியாமை, விருப்பு, வறுமை என எட்டாகக் கூறப்படும். இவற்றை அமைதி, அடர்ச்சி, மந்தம் (சத்துவம், இராசதம், தாமதம்) என்னும் மூன்றில் அடக்குவர்: இவை முறையே இன்பம், துன்பம் என நுகரப்படும்.

**பூருவமீமாஞ்சை** - வேதத்தின் முன்பாகமாகிய கன்ம காண்டப் பொருளை ஆராயும் ஆராய்ச்சி நூல்.

**பேதவாதம்** - உலகமும் உயிர்களும் முதற்பொருளின் வேறு எனப் பேசும் பேச்சு: வாதம்-பேச்சு

**பேதாபேதம்** - காரணகாரியங்கள் தமக்குள் பேதமும் அபேதமும் ஆக உள்ளன எனக்கொள்ளும் கொள்கை.

*மாயை* - காணப்படும் உலகப் பொருட்களின் முடிந்த முதற் காரணம். மாயா என்னும் வடசொல் மாயை என வழங்கப்படுகிறது. மா - ஒடுங்குதல், யா - வருதல்: எல்லாப் பொருள்களும் எதன் கண் ஒடுங்கி எதிலிருந்து தோன்றுமோ அது மாயை என்பர் சைவ சித்தாந்திகள். ஒரு பொருட் கொள்கையினர் ''யமாச எனச் சொற்பொருட் காரணங் காட்டி, எது ஆராயும்போது இல்லை என முடிக்கப்படுகிற தோ அது மாயை எனக்கூறுவர்.

*மாட்டேற்று* - ஒன்றன் இயல்பை மற்றொன்றற்கும் ஏற்றிக் கூறுதல்.

*மாவாக்கியம்* - பெருமொழி; சோயமஸ்தி; தத்துவமசி, சோகமஸ்மி, பிரஞ்ஞானம் பிரம்ம என்பவை வேதங்களில் உள்ள முடிந்த உண்மையைக் காட்டும் பெருமொழிகள் எனப்படும். பெரும் பெயர், ஒருவார்த்தை எனவும் வழங்கப்படும். சைவ சித்தாந்தத்தில் ''சிவாயநம'' என்னும் திரு எழுத்தைந்தே பெருமொழிகளிற் பெரு மொழி எனக்குறிக்கப்படும்.

*வாக்குமனாதீதம்* - சொல்லையும் நினைவையும் கடந்து நிற்றல்; பாச அறிவு பசுஅறிவுகளுக்கு அப்பாற்பட்டு இருத்தல்.

*விசிட்டம்* - விசேடணத்தோடு கூடியது; விசேடணம் - அடைமொழி.

*விசிட்டாத்துவிதம்* - பரம் பொருள் விசிட்டத்தினால் ஒன்று என்னுங் கொள்கை; அத்துவிதம்-ஒன்று; அறிவில்லாத உலகமும், அறிவுள்ள உயிர்களும் பரம்பொரு ளுக்கு வேறாகஉள்ளன: பரம்பொருள் அளவற்ற உயர்ந்த குணங்களையும் உடையது. அவை பரம்பொருளுக்குக் குணமாகவும், உடைமை அடிமைகளாகவும் விசேடணங்களாக இருத்-

தலின், அவ்விசேடணங்களால் அடுக்கப்பட்டுத் தலைமைப் பொருளாக உள்ள பரம்பொருள் ஒன்றுதான்; அத்துவிதம் (ஒன்று) என்னும் கருத்து பரம்பொருளுக்குக் குணங்கள் இல்லை எனவோ, உலகு உயிர்கள் இல்லை எனவோ குறிப்பிக்கவில்லை என்னும் கொள்கை.

*விஞ்ஞானகலர்* - விஞ்ஞானத்தினுல் கலையை நீங்குவோர்; மூலமலம் ஒன்றுல் மட்டும் பிணிப்புண்டிருப்போர் விஞ்ஞான கலர் எனவும் வழங்கப்படும், சகலர், அகலர், பிரளயாகலர் என்பவற்றையும் பார்க்க. பிரளயத்தில் தளையை (கட்டை) நீங்குவோர் பிரளயாசலர்.

**வியஞ்சகம்** - விளக்குவது; காட்டு; இருளில் உள்ளபொருளை விளக்கி காட்டுவது ஒளி; குற்றமுடைய பார்வையினருக்குப் பொருள்களை விளக்கிக் காட்டுவது மூக்குக் கண்ணுடி; சுவை, ஒளி முதலிய புலன்களை ஆன்மாவிற்கு விளக்கிக் காட்டுபவை நா, கண் முதலிய பொறிகள். ஒளி, கண்ணுடி, பொறி முதலியவை காட்டு, அல்லது வியஞ்சகம் எனப்படும்.

*வியட்டி* - பிரிந்து நிற்பது; அ, உ, ம் என்பவை (நாதம், விந்துஎன்பவை உள்பட) வியட்டிப் பிரணவம் எனப்படும். எதிர்ச்சொல் சமட்டி: இவ்வெழுத்துக்களைக் கூட்டி மொழிந்தால் ஓம் என ஆகும்: அது சமட்டிப் பிரணவம், தோப்பு - சமட்டி, தனிமரங்கள் வியட்டி.

*வியத்தி* – விளங்கி நிற்பது; அரும்பில் அடங்கி உள்ள மணம் மலரில் வியத்தமாய்த் தோன்றுகிறது.

**விருட்டி** -ஒரு காரணத்திலிருந்து காரியந்தோன்றும் முறைகள் பலவற்றுள் ஒன்று: ஒரு துணியையே கூடாரமாக, குடையாக,

சட்டையாக அமைக்கின்றோம்: இம்முறை விருத்தி எனப் படுகிறது. பாலில் பிரை சேர்த்தால் அது தயிராகத் திரிகிறது; இது பரிணமம் எனப்படும்.பலர்ஒன்று சேர்ந்தால் கூட்டம் உண்டாகிறது; இது சமூகம் எனப்படும்: நூலை ஒழுங்குபடப் பின்னிச் சேர்த்தால் ஆடை உண்டாகிறது; இது ஆரம்பம் எனப்படும்; இப்பி வெள்ளியாகக் காணப் படுவது போல ஒன்றன் வேறுபடுதோற்றத்தை விவர்த்தம் என்பர்.

**விவர்த்தம்-வேறுபாடு தோற்றம் :** கயிறு பாம்பாகக் காணப்படுவது; விருத்தி-பார்க்க.



# பிற்சேர்க்கை

## மூன்றாண்டுகளுக்கு முன்

நடு நாட்டில் திருப்பெண்ணாகடத்தில் வாழ்ந்து வந்த அச்சுத-களப்பாளர் என்னும் வேளாண் குலத்தலைவர் தம் மனைவியாருடன் ஒருநாள் துறையூர் சென்றார். அங்குத் தம் குலகுரு சகலாகம பண்டிதரை, மலர், பழம் முதலியவற்றை வெள்ளித்தட்டில் ஏந்திச் சென்று கண்டு, காணிக்கையாக அவர் திருவடியில் வைத்துத் தொழு திறைஞ்சினார். அப்பொழுது அவருக்கு வயது ஐம்பதிற்கு மேல் இருக்கும். சகலாகம பண்டிதர் அப்பொழுது சிவபூசை, தமிழ்மறைப் பாராயணம் என்பவற்றை முடித்துக் காலை உணவு கொள்ளும் நிலையில் இருந்தார். சீடரை நலம் விசாரித்தபோது, களப்பாளர், கூறுவாராயினர்:

*அச்சுதர் :* உமது திருவளால் எல்லாவற்றாலும் நிறைவு உடையேன். ஆயினும் மகப்பேறு இல்லையே என்று சில சமயங்களில் எண்ணுவது உண்டு. அதுபற்றி அடியேனுக்கு மனவருத்தம் இன்றேனும், இவள் (தம் மனைவியைச் சுட்டி) பெரிதும் வருந்துகிறாள்.

*சிவாசாரியர் :* யாமும் இப்பொழுது தான் பூசையை முடித்து வெளிப்போந்தோம்; நீங்களும் தூய்மையுடன் இருக்கின்றீர்கள். இறைவன் திருவுள்ளத்தை அறிவோம்: இங்ஙனம் கூறி, வந்தவர்களைத் தாம் அன்றாடம் வழிபடும் வித்தியா பீடத்தை வழிபடச்செய்து திருநீறு அணிவித்து, அப்பீடத்தின்மேல் இருந்த அடங்கன் முறை ஏட்டுச் சுவடியில் கயிறு சாத்தச் செய்தார்.

என்ன வியப்பு! பின்வரும் திருப்பாட்டு உதயம் ஆயிற்று:

''பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளம்நினை(வு)
ஆயினவே வரம்பெறுவர்: ஐயுறவேண் டாவொன்றும்:
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந்தீவினையே''—

என்பது திருஞான சம்பந்தர் திருப்பாட்டு.

மூங்கில் போன்ற அழகிய தோள்களையுடைய உமையம்மையைப் பாகங்கொண்ட சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருவெண்காட்டில் அவன் அருள் உருவாக அமைந்து உள்ள ஞாயிறு, திங்கள், அங்கி என்பவர் பெயரால் வழங்கும் முக்குளங்களில் முழுகும் விரதம் உடையாரைத் தீவினைகள் வாதியா; அவர்களைப் பேய் பிடிப்பதில்லை; பிடித்திருந்தால் பிரிவு எய்தும்; மகப்பேறு முதலாக அவர் நினைப்பன-வற்றை வரமாகப் பெறுவர்; இவற்றில் சிறிதும் ஐயம் வேண்டு-வதில்லை என்பது பாட்டின் பொருள். ஆசாரியருக்கும் வந்த தம்பதிகளுக்கும் உண்டான மகிழ்ச்சியையும் வியப்பையும் அளவிடமுடியாது. சகலாகம பண்டிதர் கூறிய முறைப்படி, அச்சுத களப்பாளரும் அவர் தம் வாழ்க்கைத் துணைவியாரும் நல்ல நாளில் திருவெண்காடுசென்று, முக்குளத்தில் மூழ்கி இறைவனை வழிபட்டு நாற்பத்தெட்டு நாள் நோற்பாராயினர். நோன்பின் இறுதிநாள் இரவில் சிவபிரான் அச்சுத களப்பாளர் கனவிற்றோன்றிக் கூறுவார்:

''நீ வருந்தி நோற்கின்றாய்: உன் வழிபாட்டிற்குப் பெரிதும் மகிழ்ந்தோம்; ஆயினும், இப்பிறப்பில் உனக்கு மகப்பேறு அரிது'' என்றார்.

*அச்சுதர் :* உமது திருவருளின்படி நடக்கக்கடவேன்; எனினும், முத்தமிழ் நான்மறை ஞான சம்பந்தர் திருமொழி பொய்க்குமோ!

*சிவபிரான் :* பொய்யாது; அஃது எனதுரையே. வினை காரணமாக உனக்கு மகப்பேறு இன்று: உன்தவம் காரணமாகத் திருஞான சம்பந்தனைப்போல் ஓதாது உணரும் ஒரு சுத்தான்மாவை உனக்கு மகவாகத் தருதும். நாளை இவ்விரதம் முடித்துத் திருப்பெண்ணாகடம் செல்க.

இறைவன் ஆணைவழி விரதம் முடித்து இறைவனை வழிபட்டுத் தம் ஊருக்குச் சென்றார். பின் அவர்தம் மனைவியார் வயிறு வாய்த்தார். பத்துத்திங்களினும் செய்கடன்கள் சுற்றமும் நட்பும் சூழ்ந்து மகிழும்படி குறைவறச் செய்யப்பட்டன.

ஒரு நல்ல நாளில் சிவன் அருளால் ஆண்மகவு அச்சுத களப்பாளருக்கு உளதாயிற்று. சாதகன்மம் முதலியவற்றை அணி பெறச் செய்து திருவெண்காட்டு முதல்வன் அருளால் அவதரித்த இளமுளை ஞாயிறு அனைய குழவிக்கு "வெண்காடன்" (சுவேதவனப் பெருமாள்) எனப் பெயரிட்டு வளர்த்து வந்தனர்.

அக்குழவியை அதன் தாய்மாமன் அன்னையுடன் தம் ஊராகிய திருவெண்ணெய் நல்லூருக்கு அழைத்துச் சென்று சைவத்திரு சிறந்து தோன்றப் பாராட்டி வளர்ப்பாராயினர்.

அக்குழவியே "மெய்கண்டான்" என்னும் திருநாமம் பெற்று மனவாசகங்கடந்தார் முதலியவர்க்குச் சிவஞான போத சூத்திரங்கள் வாயிலாக உபய வேதத் தெளிபொருள் உணர்த்தி வாழ்வித்து வருவதாயிற்று.



## திருவடி சூட்டல்

சகலாகம பண்டிதர் தாம் நடத்தி வந்த பாடசாலையில் மாணுக்கர்கள் குறைந்து வருவதை உசாவி அறிந்தார். தம் சீடர் மகன் ஒருவன் மூவாண்டு நிரம்பாத இளங்குழவிப் பருவத்தில் முதலில் திருவருட்டுறை என்னும் திருக்கோயிலிலும், பின் தனக்கெனப் பொது மக்களால் அமைக்கப்பெற்ற திருமடத்திலும் இருந்து சிவஞானம் உணர்த்தி வருவதைக் கேள்வியுற்ருர்.

குழந்தையை நேரிற்சென்று காண விழைந்தார். திருவெண்ணெய் நல்லூரில் இருந்த தம் சீடர்களுக்குத் திருமுகம் போக்கி ஒரு நல்ல நாளில் அவ்வூருக்குச் சென்ருர். தம்மை வரவேற்ற தம் சீடர் குழுவில் குழந்தையைக் கண்டிலர். மெய்கண்டதேவர் பாடம் நடத்தும் இடத்திற்கே வந்தார். மெய்கண்டதேவர் கிழக்கு நோக்கி வீற்றிருக்கின்ருர். தம்மிடம் கற்று வந்த மாணவர் பலரும், பிறரும் அவர் அடிக்கு அணிமையில் வடக்கு நோக்கியிருந்து மனவொருமையுடன் பாடங்கேட்பதைக் கண்டார், வியந்தார்; பெருமிதங்கொண்டார். ஆயினும், தாம் அவ்வகுப்பில் பிறரோடு ஒப்ப இருத்தல் தம் பெருமைக்கு ஏற்றதாகக் கருதவில்லை.

அப்பொழுது, நான்காம் சூத்திரத்து இரண்டாங்கூறு, ''ஆன்மாச் சகசமலத்துணராது'' என்ற பகுதியின் பொருள், விளக்கம் செய்யப்பட்டது. அக்குழந்தைக்கு, சைவம் அல்லாத பிற சமயங்களில் பேசப்படாத மூலமலத்தைப்பற்றி நன்ருகத் தெரியுமா என்னும் ஐயம் பண்டிதர் உள்ளத்தில் எழுந்தது. மெய்கண்டதேவர் முன் நின்று, ''சகசமலத்தின் இலக்கணம் யாது?'' என வினவினர். எதிரில் நிற்பவர் அரியகற்று ஆசு அற்றவர் என்றும், அனுபவ மெய்யுணர்வு பெறுதற்கு உரிய சத்திநிபாதர் என்றும், மெய்கண்டதேவர் உணர்ந்தார்.

நின்றவரை இருந்தவர் அடியிற்கொண்டு முடியின் காறும்' திருநோக்கம் செய்து, அவர் முகத்தை நோக்கித் தம் வலக்கைச் சுட்டு விரலால் சுட்டினர்.

சிவனே குழவி வடிவில் ஞானகுருவாய் எழுந்தருளியிருப்பதை உணராதபடி தம் உள்ளத்தைக் கவர்ந்தெழுந்த செருக்கே மலத்தின் காரியம் என்பதை உணர்ந்தார் பண்டிதர். மலேவுதீர்த் தருளும் கல்லால் நிழற் கடவுளே மெய்கண்டதேவர் என்பதை யுணர்ந்து வசீகரிக்கப் பட்டுக் கீழே வீழ்ந்து இறைஞ்சினர்.

மெய்கண்ட முதல்வரும் பண்டிதரது சென்னியில் கலேஞானம் என்னும் குன்றினுக்குச் செம்பொன் மணிமுடி சாத்துவது போலத் தம் திருவடிகளைச் சூட்டினர். சகலாகம பண்டிதர் தம் வியாபக நிலேயை யும் அதனை அடக்கி நிற்கும் சிவவியாபகத்தையும் உணர்ந்து, ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினர். அந்நிலேயில் அவரை ''அருள் நந்தி'' என்னும் தீக்கைப் பெயரான் அழைத்துத் தம் முன் வலப்பக்கத்தில் ஏனைய மாணுக்கருள் தலேவராக இருத்தினர் மெய்கண்ட தேவர். அருள் நந்தி தேவர் கண்ணீர்வார நின்று,

கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்- வெண்ணெய்நல்லூா
மெய்கண்டான் என்றொருகால் மேவுவரான் வேறின்மை
கைகண்டார் உள்ளத்தின் கண்''-

என்னும் வெண்பாவால் ஆசிரியரைத் துதித்தார். பின் பரமாசா-ரியன் அருளாணையால் முன் இருந்து கலேஞானம் பற்றித் தமக்கு-இருந்த ஐயங்களைத் தெரிவித்து, அவர்தம் தெள்ளிய வாய்மொழி-களால் ஐயத்தின் நீங்கித் தெளிந்தார். ஆசிரியரைத் தாம் வினவிய

வினாக்களையும் அவர் கூறிய விடைகளையும் அமைத்து ''இருபா இருபஃது'' என்னும் ஓர் அரிய ஞானநூலைச் செய்து ஆசிரியர் திரு முன்பு அரங்கேற்றினார். அந்நூலின் முதற்பாட்டாக மேற்காட்டிய வெண்பா வைக்கப்பெற்றது.

''திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள மெய்கண்ட தேவன் தனக்கே உரிய நெற்றிக் கண்ணையும் திருநீல கண்டத்தை-யும் மறைத்துக் குருவடிவில் இருந்து இவ்வுலகத்தின் அறியாமை யின் அழுந்தியுள்ள மக்கள்தம் மலத்தை நீக்கிச் சிவத்துவம் விளங்-கச் செய்வன் என்று எண்ணி ஒருமுறை விரும்பி அடைவாராயின் தம் உணர்வின்கண் முதற்பொருள் வேறின்றிக் கலந்திருப்பதை எளிதின் உணர்வர்'' என்பது பாட்டின் பொருள்.

மேவுவராயின் என்பது மேவுவரான் எனத் திரிந்து நின்றது; ''என்னுனும் ஒன்றுதங் கையுறப் பெற்றக்கால்'' என்பதில் உள்ள என்னுனும் என்பதிற்போல. துணிவு பற்றிக் கைகண்டார் என இறந்த காலத்தால் கூறப்பட்டது.



## வார்த்திகம்

அருணந்தி தேவரை முதல் மாணுக்கராக வைத்து, மேலே மனவாசகங் கடந்தார்க்கு உணர்த்திய சிவஞானபோதம் என்னும் தலைமணி ஞானநூலை உணர்த்துவார் ஆயினர் மெய்கண்ட தேவர்.

பாயிரவியலில், மங்கல வாழ்த்தின் பின் சித்தாந்த சைவத்தின் உயர்வும் ஏனைச் சமயங்களின் நிறைவின்மையும் தோன்றப் பின்வரும் வெண்பாவை அவையடக்கமாக அமைத்தருளினுர்.

''தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை உடைமை எமைஇகழார்-தம்மை
உணரார் உணரார், உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்''-என்பது அச்செய்யுள்

இதன் பொருள்; தன்வயமில்லாத ஆன்மாவின் இயல்பை முன் உணர்ந்து, பின் அவ்வான்மாவை அடிமையாக உடைய, தன்வயம் உள்ள முதல்வனைத் தலைப்பட்டு உணரும் மெய்யுணர்ந்தோர் மெய்ப்பொருளே ஆவர், ஆதலால், அவர் எம்மைத் தமக்கு அடிமையாக உடையாரவர். அவர் எம்மை நன்கு உணர்வராகலின், எம்மை இகழ்தல் செய்யார்; யாம் செய்யும் சிவஞானபோதம் என்னும் இந்நூலினையும் அதற்கு யாம் இயற்றும் வார்த்திகத்தினையும் பொருட்படுத்தி உணர்ந்து பிறர்க்கும் உணர்த்தித் திருவருள் ஒளி விளங்கச் செய்வர். தம்மியல்பினையே உணராதவர், முதல்வன் இயல்பையும் உணராதவரே ஆவர். உண்மை உணர்வு இன்மையால், யானையைத் தடவி அறிந்து தாம் அறிந்தவாறே அதன் இயல்பைக்கூறி ஒன்றுபடாமல் கலாம் விளைத்த குருடர்போன்று, அன்னோர் கூறும் புறன் உரைகளை யாம் பொருட்படுத்தோம்.

''அருட்கண்ணுல் நோக்காதார் அல்லாதாரே'' எனும் திருநாவுக்கரசர் வாய்மொழியை உட்கொண்டு கூறியது இது.

தாம் ஒரு பொருள் உண்டு என்று உணராதவரும், முதல்வன் உளன் என்று கொள்ளாதாரும், தாமே முதல் என்பாரும், முதல்-வனுக்குப் பிறப்பு இறப்பு முதலிய உயிர்க்குணங்கள் உள்ளன என்பாரும் முதலாக உள்ள சமயவாதிகள் அனைவரும் தம்மை உணரார்.

சூத்திரங்களைப் பாடமாகச் சொல்லி வரும்போது, அவற்றிற்குக் கருத்துரைகளும் வார்த்திகப் பொழிப்பும் உடன் சேர்த்தருளினர். சூத்திரத்தின் அமைந்துள்ள பொருட் கூறுகளை மேற்கோள் என வைத்து அதற்கு இன்றியமையாத ஏது அல்லது பொழிப்புரையும், அவற்றின் பொருள் நிலையைத் தடை நீக்கி வலியுறுத்தும் உதாரணச் செய்யுட்களும் சேர்த்து வைக்கப்பெற்ற பொழிப்புரையே இங்கு வார்த்திகம் எனப்பட்டது. இது இலக்கண நூலுக்கு எழுதப்படும் காண்டிகை உரைபோன்றது.

ஒவ்வொரு கூறும் அதிகரணம் எனப்படும். அதிகரணம்-இடம்; அஃதாவது தான் கூறும் மேற்கோள், அதன் கண் ஐயம், பிறர் கூறும் பக்கம், அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபு, இயைபு என்னும் ஐந்தும் தன்கண் தோன்ற நிற்பது.

பன்னிரண்டு சூத்திரங்களும் பன்னிரண்டு முதன்மையான பொருள்களைக் கொண்டவை. அவற்றின் உட்பிரிவுகள் முப்பத்-தொன்பது. இவற்றில் அறிவு நூற்பொருள்களெல்லாம் செறிந்து உள்ளன.

இறுதியில், உயிர்கள், மலம் ஒன்றுனே பிணிப்புண்ணும் விஞ்ஞானகலர், மலம் கன்மம் என்னும் இரண்டானும் பிணிப்புண்ணும் பிரளயாகலர், மலம் கன்மம் மாயை என்னும் மூன்றுனும் பிணிப்புண்ணும் சகலர் என மூவகைப்படும்; அவற்றுள் விஞ்ஞான கலர்க்கு உள் நின்று உணர்த்திப் பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கச் செய்வன் முதல்வன்; பிரளயாகலர்க்கு நாற்றோளும், கறைக் கண்டமும், சடை முடியும் முதலியவற்றையுடைய தன் தேவகுரு-வடிவு காட்டித் திருநோக்கம் பரிசம் வாசகம் என்பவற்றுல் பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கச் செய்வன் முதல்வன். இந்நூல் அநுபவமுள்ள தேசிகனுல் சகலர்க்கு உணர்த்தி வீடுபெறு-வித்தற்கு உரிய உபதேச நூல் எனக் கூறிமுடித்தனர்.

''சிவமென்னும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்ரும் கண்வா சகத்தின் – சிவமுண்டாம்
ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கிங் கொண்குருவால்
இன்றிந்நூல் மும்மை மலர்க்கு''.

என்பது அவர்தம் அறிவுரை. சிவம் என்னும் அந்ததர என்பது விளி; மாணவரைச் சீவன் என்ற பெயர் நீங்கிச் சிவம் என்னும் பெயர்க்கு உரிமை எய்திய வேதாந்தத்தின் மேலதாகிய சித்தாந்த ஞானத்தைப் பெற்ருேனே என அழைக்கின்ருர். இதனுல் அருணந்தி சிவம் என அவரைப் பிறர் அழைப்பர் என்பது பெற்ரும்.

ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு (முறையே) சிந்தைக்கண் இருந்து நேர் நோக்கவும், தேவகுருவாய் முன்நின்று கண், (பரிசம்), வாசகத்தால் உணர்த்தவும் பவம் இன்ரும், சிவம் உண்டாம். இந்நூல் ஒண்குருவால் மும்மை மலர்க்கு (பவம் நீங்கிச் சிவம் உண்டாதற்கு) உணர்த்துதற்கு உரியது எனக் கூட்டி உரைக்க.



## சிவஞான சித்தி

அருள்நந்தி சிவத்தைப் பின் மெய்கண்ட தேவர் தாம் செய்-தருளிய சிவஞான போதத்திற்குத் தாம் உரைத்தருளிய வார்த்-திகப் பொழிப்பை அடிப்படையாகக் கொண்டு சிவாகமஞான-பாதத்திற்கு விரிவான ஆய்வு நூல் ஒன்று எழுதும்படி கட்டளை-யிட்டார். அருணந்தி சிவனுர் 628 திருவிருத்தங்களாலான சிவ-ஞானசித்தி என்னும் ஞானநூலை இயற்றி ஆசிரியர் திருமுன்பு அரங்கேற்றினுர். அது பரபக்கம், சுபக்கம் என இரண்டு பிரிவை-யுடையது. பரபக்கம் அக்காலத்து வழங்கிய புறமதங்களின் கொள் கைகளைக் கூறிப் பின் அவற்றை மறுத்துரைப்பது: 301 செய்யுட்களை உடையது. அதனைச் சிவஞான போதத்தின் அவையடக்க வெண் பாவின் விரிவு எனக்கொள்ளல் பொருந்தும். சுபக்கம் 327 திரு-விருத்தங்களை உடையது. மங்கல வாழ்த்தால் இறைவன் இயல்பைப் பொதுவாக உணர்த்தி, அவையடக்கம் முதலியவற்ருல் இறைவன் நூல் இவை என்பதும் அவை பொது, சிறப்பு என இருவகைப்படுவன என்பதும் உணர்த்துகின்ருர். பின் அளவையியல் உணர்த்தி, முதல் நூலின் சூத்திரங்களின் பொருளைத் திருவிருத்தங்களால் உரைத்து, அவற்றின் பொருளைப் பரந்து சென்று ஆராய்ந்து முடிவு கூறுகின்ருர். இதனை மாதவச் சிவஞானயோகிகள் ''சிவாகமாத்தங்களுக்கெல்லாம் உரையாணி எனச் செய்யப்பெற்று நிலவுவது எனப் போற்றுகின்ருர். பரபக்கம், சுபக்கம் என்பவற்றை இரு நூலாகவும் கொள்ளவைத்தார் என்னும் மரபுபற்றி, ''ஒரு கோட்டன்'' எனத் தொடங்கும் காப்புச் செய்யுள் சுபக்கத்தினும் முதற்கண் வைத்துக் கூறப்படும். இதனுல், சுபக்கம் 328 திருவிருத்தங்களை உடையதாகக் காணப்படும். சுபக்கத்தில் நூல்வழி உரைக்கும் செய்யுள் ஓர்ந்து உணரத்தக்கது:

'' என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளினுலே தாளிணை தலைமேற் சூட்டும்
மின்னமர் பொழில்சூழ் வெண்ணை மேவிவாழ்
மெய்கண் டானூல்
சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்ரும்''

என்பது அது.

கலைஞானச் செருக்கினல் பிறவிக்கடலில் அழுந்துவேனுயிருந்த எளிய என்னை அக்கடலில் வீழாதபடி தன் கருணைக்கையால் எடுத்துக் கரை சேர்த்தி என் அறிவில் தற்சொரூபம் விளங்கும்படி செய்தற்குத் திருவருளோடு ஒன்றி நின்று தம் திருவடிகளை என் சென்னிமிசைச் சூட்டி ஆட்கொண்ட, மேகந்தங்கும் சோலை சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரில் விரும்பி எழுந்தருளும் மெய்கண்ட முதல்வர் அருளிச் செய்த உயர் ஞானநூலை எல்லாப் பிரமாண நூல்களுக்கும் தலையாய தாக உளங்கொண்டு சிவாகமப் பொருள் வகையாகிய சித்தாந்தத்தை விளக்கப்புகுகின்றேம் என்பது இதன் பிண்டப்பொழிப்பு.

என்னை எனவும், என் சித்தத்தே எனவும் முதற்கண் கூறியது தாம் ஆசிரியரைத் தலைப்படுதற்கு முன் இருந்த எளிய நிலைகருதி, தெரிக்கலுற்றும் என முடிவின்கண் கூறியது ஆசிரியரைத் தலைப்பட்ட பின் தாம் சிவம் ஆனவாறு பற்றி எனக்கொள்க. ஒருமை பன்மை மயக்கம் அன்று.

இதனுல் மெய்கண்டதேவர் பெருமை எவ்வளவினது என உய்த்துணர்ந்து உலகம் உய்யக்கடவது.



## குருமரபு

கல்லால் நிழற்கீழ் இருந்து அறம் உரைத்த தவமுதல்வனுகிய முதற்கடவுள். எவ்வுலகிற்கும், எல்லா மக்கட்கும் முதலாசிரியன் ஆவன். அவன் முதற்கண் நான்கு முனிவர்கட்கு ஒளி நெறியைக் காட்டினுன் என்பதும், அம்முனிவர் வாயிலாக நான்மறைகள் உலகிற்குத் தரப்பட்டன என்பதும் மரபு. அம்முனிவர்களே பின்ஞெருஞான்று முதல்வனிடத்துச் சென்று தம் மனம் ஒன்று தற்பொருட்டு வேண்டிக்கொண்டனர் என்று கந்தபுராணம் சொல்லு கின்றது. அவர்கள் பின்வருமாறு கூறினர். ''இறைவனே! நின்னுல் எமக்கு அருளப்பெற்ற வேதங்கள் எல்லாப் பொருள்களேயும் உடையனவாய்க் கலக்கத்தை விளேக்கின்றன. இருட்காலத்தில் புயலும் மழையும் நிறைந்து பேரலேகளே வீசும் கடலின்கண் வீழ்ந்த ஒருவன் திசை தெரியாது மயங்குவது போல, அவ்வேதங்களில் நுழைந்த எம் அறிவு குழப்பத்தை அடைகின்றது. ஆதலினுல் உண்மையின் இணேப்பு நிலேயை எங்களுக்கு அறிவுறுத்தி அருளல் வேண்டும்''-என்றனர்.

முதல்வன் அவர்களுக்கு வேதத்தெளிவாக உள்ள சிவாகம முறைபற்றி இறை, உயிர், தளே என்னும் முப்பொருள் உண்மையினே யும், அவற்றது இயல்புகளேயும், உயிர் தளேயின் நீங்கி இறையைச் சார்தற்குரிய நெறி முறைகளேயும் உணர்த்தினர். அப்போதும் அவர் ஒரு நெறிய மனம் வைத்து உணரமாட்டாராய், எமது புந்தி ஒன்றும் படி ஞானபோதகம் அருளுக என மேலும் வேண்டினர்.

சிவபிரான் ஞானபோதகம் சொல் நடை அன்று; இவ்வாறு இருந்து உணர்வதே ஆகும் எனக்கூறி மோனமுத்திரை அத்தனுய்த் தன் உண்மை நிலேயில் இருந்து அவர்களுக்கு உணர்வூட்டினன். அப்பொழுது அவர் அனேவரும் மோன நிலே எய்தி உண்மையை உணர்ந்தனர். அவர் வழியில் உலகில் யாண்டும் குருமரபு தோன்றி, அவ்வவ்விடங்களுக்கும், மக்கட் குழுவினருக்கும் ஏற்றவகையில் பல ஆசிரியாகள் மூலமாகப் பல நெறிகள் போதிக்கப்பட்டன.

இங்ஙனம் உலகிற் பரவிய நெறிகள் பற்பலவாயினும், எல்லாம் ஒரே முதல்வனை நோக்கிச் செல்வன என்பது சித்தாந்த சைவத்தின் அடிப் படைக்கொள்கைகளில் ஒன்று.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருந்து யோகக் காட்சியால் உண்மையை உணர்ந்து ஆதித்தமிழாகமம் அகிய திருமந் திரத்தை உலகிற்குத் தந்த திருமூல நாயனர், **ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்** என்று அருளிச் செய்திருக்கின்றார்.

இனி, தமிழகத்தைப் பொறுத்தமட்டில், பண்டைத்தமிழ் மரபும் வடக்கிருந்து வந்த பௌத்த சைன மரபுகளும் பிற மரபுகளும் வந்து கலந்து, மக்கள் உண்மை தெளியமாட்டாராய் மயங்கியபோது, அவர்களுக்கு உலகியல் கூறிப் பொருள் இது எனத் தெளிவித்தவர் தெய்வப் புலவர் திருவள்ளுவனர். இவர் அருளிச் செய்த நூல் திருக்குறள் எனப்படும். புத்த சமயத்தால் சிவநெறி இடருற்ற காலத்து மக்களுக்குச் சிவவழிபாட்டிற்கு இன்றியமையாது வேண்டப் படும் பொருள் சேர் புகழ் துலக்கும் திருவாசகத்தையும் ஞானயோக நுண் பொருளை உலகியற் பொருளோடு கலந்து நுகர்விக்கும் திருக் கோவை என்னும் நூலையும் அருளிச் செய்து தமிழ் மக்களுக்கு உதவினவர் மாணிக்கவாசகர். அவரைப் போலவே சைன சமயத் தால் வந்த இடர் நீக்கி இசைத்தமிழ்த் திருப்பதிகங்கள் இயற்றி ஆங்காங்குள்ள மக்களுக்கு அவற்றை ஓதி வழிபடும்படி ஆணைதந்த பெருமக்கள் தேவார ஆசிரியர் எனப்படும், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர் எனப்படுவர். இவர்களுக்குபபின் இறைவன் திருவருளைப் பெற்றுச் சிவநெறியைப் பயிற்றும் நூல்கள் இவைதான் எனத் தொகுத்து அருளிச்செய்தவர் நம்பியாண்டார் நம்பிகள் என்பவர். இவருக்குப்பின் வரலாற்று முறையில் நாயன்மார் களது வரலாறுகளைக் காவியநயம் பொருந்தப் பெரிய புராணமாக அருளிச்செய்தவர் சேக்கிழாரடிகள் ஆவர்.

இவர்களுக்குப்பின் வடமொழியில் உள்ள உபநிடதங்களும் அவற்றின் பொருளை ஆராய்ந்து உணர்தற்குத் துணை செய்யும் பிரம்ம சூத்திரமும் தமிழகத்தில் சமய உலகில் பாவிக் குழப்பம் விளைத்த காலத்தில்தான் மெய்கண்டதேவர் மரபு தோன்றிற்று. இவர் மரபைப்பின் வருமாறு இறைவனேடு இணைத்துக் கூறுவது வழக்கமாக உள்ளது.

முதலாசிரியர் சிவபிரான். அவர்தம் சிறந்த மாணுக்கர் திருநந்திதேவர். அவர்தம் மாணுக்கர் பல்லோருள்ளும் சிறந்தவர் சனற்குமாரர். இவர் பெயர் சாந்தோக்கியம் என்னும் உபநிடதத்தில் வருகிறது. இவரைக் கந்தர் எனவே கூறுவார்கள் என அவ்வுபநிடதம் உரைக்கின்றது. சிவபெருமானிடத்து முதற்கண் நால்வேதப் பொருள் உணர்ந்து பின் ஒரு காலத்து ஞானபோதகம் உணர்த்தப் பெற்றவர்கள் எனப்பட்ட நால்வருள்ளும் இவர் ஒருவராகக் கருதப்படுகின்றனர். அந்நால்வரில் ஏனைய மூவர் சனகர், சனந்தனர், சனுதனர் எனப்படுகின்ருர்கள். இச்சனற்குமாரர் மாணுக்கர் சத்திய ஞானதரிசனிகள். அவர் தம் மாணுக்கர் பரஞ்சோதி முனிகள் பரஞ்சோதி முனிகளின் மாணுக்கரே மெய்கண்டதேவர். மெய்கண்டதேவரின் மாணுக்கர் அருள்நந்தி சிவனுர். அவர் மாணுக்கர் மறைஞானசம்பந்தர். அவர் மாணுக்கர் உமாபதி சிவனுர். அவர் வழியில் வந்தனவே இப்பொழுது சிவநெறியைத் தமிழகத்துப் பரப்பி வருகின்ற திருவாவடுதுறை, தருமபுரம் முதலிய சைவ ஆதீனங்கள்.

மேற்கூறிய ஆசிரியர்களுள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வரும் சைவ சமயசாரியர் எனவும், சைவ சமய குரவர் எனவும் அழைக்கப்படுவர்.

மெய்கண்டதேவர், அருள்நந்திசிவனுர், மறைஞானசம்பந்தர், உமாபதி சிவனுர் என்னும் நால்வரும் சைவ சந்தான ஆசிரியர் அல்லது குரவர் எனப்படுவர். மெய்கண்டதேவருக்கு முற்பட்டவர்களாகக் கூறப்படும் திருநந்திதேவர், சனற்குமாரர், சத்தியஞான தரிசனிகள், பரஞ்சோதி முனிகள் என்னும் நால்வரும் தேவகுரவர் எனவும், அகச்சந்தான குரவர் எனவும் வழங்கப்படுகின்றனர்.

மெய்கண்டதேவர் காலத்திற்குமுன் தமிழ்மொழியில் எழுந்த சுருக்கமான சாத்திரங்கள் திருவுந்தி, திருக்களிற்றுப்படி என்பவை ஆகும். திருவுந்தியார் திருவியலூர் உய்ய வந்த தேவநாயனுராற் செய்யப்பட்டது; அவர் தம் மாணுக்கர் ஆளுடையதேவர்: ஆள்உடையதேவர்மாணுக்கர் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனுர். இவர் திருவுந்தியாரின் வழி நூலாக விரித்துச்செய்த நூலே திருக்களிற்றுப்படி. உய்யவந்த தேவர் மரபு முன்னும் பின்னும் தெரிந்திலது.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

பிற்சேர்க்கை 1

# சிவஞானபோத மூலம்
# சிறப்புப்பாயிரம்

''மலர்தலை உலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருள்தீர்ந்(து)
அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்டதேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே''.

மெய்கண்டதேவர் அருளிச்செய்த

# சிவஞான போதமும்

கருத்துரை வார்த்திகங்களும்

## தற்சிறப்புப்பாயிரம்

காப்பு

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

## அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார்-தம்மை
உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

# நூல்

## பொது அதிகாரம்

### பிரமாண இயல்

### முதற்சூத்திரம்

"அவனவள் அதுவெனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்"-
என்பது சூத்திரம்.

என்னுதலிற்றோ எனின், சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாக உடைத்து இவ்வுலகம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க

### வார்த்திகம்

#### முதல் அதிகரணம்

(அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்)

**மேற்கோளும்-ஏதுவும் :** ஈண்டுத்தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின், உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசம் உடைத்தென்றது.

**உதாரணம் :**

பூதாதி ஈறு முதலுந் துணையாகப்
பேதாய் ! திதியாகும்; பெற்றிமையின்—ஓதாரோ
ஒன்றொன்றிற் றோன்றி உளதாய் இறக்கண்டும்
அன்றென்றும் உண்டென்ன ஆய்ந்து. (1)

## இரண்டாம் அதிகரணம்

(தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்)

**மே-ஏ :** இனி இல்லதற்குத் தோற்றம் இன்மையின் உள்ளதற்குச் செய்வோர் இன்றிச் செய்வினை இன்மையின், ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி இல்லை என்றது.

உதாரணம் :

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தால்
இலயித்த வாறுளதா வேண்டும்—இலயித்த (து)
அத்திதியில் என்னின் அழியா தவையழிவ(து)
அத்திதியும் ஆதியுமாம் அங்கு. (2)

வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்
அத்தன்றாள் நிற்றல் அவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான் கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து. (3)

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தில்
தாக்காது நின்றுளத்திற் கண்டிறைவன்—ஆக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனில் இற்றின்றாங் கட்டு (4)

## மூன்றும் அதிகரணம்

(அந்தம் ஆதி)

**(மே-ஏ)** இனிச் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான், சங்காரமே முதலென்றது.

**உதாரணம் :**

ஒன்றலா ஒன்றால் உளதாகி நின்றவா(று)
ஒன்றலா ஒன்றிலவை ஈறாதல்—ஒன்றலா
ஈறேமுதலதனின் ஈறலா ஒன்றுபல
வாறே தொழும்பாகும் அங்கு. (5)

## இண்டாம் சூத்திரம்

''அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே – என்பது சூத்திரம்.

என்னுதலிற்றோ எனின் புனருற்பவம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகம்

### முதல் அதிகரணம்

### (அவையேதானே ஆய்)

**(மே–ஏ)** ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய் நிற்கும் என்றது, அத்துவிதம் என்ற சொல்லானே ஏகம் என்னில், ஏகம் என்று சுட்டுவதுண்மையின் அத்துவிதம் என்ற சொல்லே அந்நியநாத்தியை உணர்த்துமாயிட்டு

**உதாரணம் :**

சுட்டும் உறுப்பும் கரணமும் கொண்டுள்ளம்
இட்டதொரு பேரழைக்க என்னென்றுங்(கு)—ஒட்டி
அவனுளமா கில்லான் உளமவனு மாட்டா(து)
அவனுளமாய் அல்லனுமாம் அங்கு. (1)

ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண் – ஒன்றின்றால்
அக்கரங்கள் இன்றாம் அகர வுயிர் இன்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு. (2)

பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
எண்ணும் சுவையும்போல் எங்குமாம்—அண்ணல்தாள்
அத்துவித மாதல் அருமறைகள் ஒன்றென்னு(து)
அத்துவிதம் என்றறையும் ஆங்கு. (3)

அரக்கொடு சேர்த்தி அணைத்த அக் கற்போல்
உருக்கி உடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்
யானே உலகென்பன் இன்று. (4)

## இரண்டாம் அதிகரணம்

*(ஆணையின் இருவினையின்)*

**மே-ஏ :** இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என்றது, ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவல் இட்டாங்கு அவை அவனது ஆக்கினை ஆகலான்.

**உதாரணம் :**

உள்ளதே தோற்ற உயிரணையும் அவ்வுடலின்
உள்ளதாம் முற்செய்வினை உள்ளடைவே-வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று (5)

அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாஞ்சென்றங்(கு)
அவ்வினையைக் காந்த பசாசம்போல் - அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு. (6)

நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி
மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கமலத்தாம். (7)

## மூன்றும் அதிகரணம்

*(போக்குவரவு புரிய)*

**மே-ஏ :** இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வரும் என்றது, தோற்றமும் ஈறும் உள்ளதற்கல்லது உளதாதல் இன்மையான்.

**உதாரணம் :**

கண்ட நனவைக் கனவுணர்விற் றுன்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினுற் - கண்செவிகெட்டு
உள்ளதே தோற்ற உளம்அணுவாய்ச் சென்றுமனம்
தள்ள விழுங்கருவிற் றுன். (8)

அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு
பரகாயம் போய்வரும்அப் பண்பும் - பரவில்
குடாகாய ஆகாயக் கூத்தாட்டம் என்பது
அடாதுள்ளம் போமாறு அது. (9)

## நான்காம் அதிகரணம்

*(ஆணையின் நீக்கமின்றி நிற்கும்)*

**மே-ஏ :** இனி அவன் நீக்கம் இன்றி நிற்கும் அன்றே என்றது, அவன் ஏகாநேகம் இரண்டுமின்றி சருவவியாபியாய் நிற்றலான்.

**உதாரணம் .**

எங்குமுளன் என்றளவை ஒன்றன் றிரண்டென்னில்
எங்கும் உளனன்று எவற்றெவனும் - அங்கண்
அவையவன் அன்றில்லை பொன்னொளிபோல் ஈசன்
அவைஉடைமை ஆளாம்நாம் அங்கு. *(10)*

## மூன்றும் சூத்திரம்

"உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா"—என்பது சூத்திரம்.
என்னுதலிற்றோ எனின், ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று.

## வார்த்திகம்

### *முதல் அதிகரணம்*

**மேற்கோள் பொழிப்புரை :** இனி இலதென்றலின் ஆன்மா உளதென்றது, எவற்றினையும் அன்று அன்று என விட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளது ஆகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உதாரணம் :

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றுன் றுளததுவே நீ அனைத்தும் - நின்றின்று
தர்ப்பணம்போல் காட்டலால் சார்மாயை நீ அல்லை. (1)
தற்பரமும் அல்லை தனி.

## இரண்டாம் அதிகரணம்

மே-பொ : இனி எனதுடலென்றலின் ஆன்மாஉளது என்றது, என் பதி என் மனை என்றாற்போல என் கை என் கால் என நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உதாரணம் :

எனதென்ற மாட்டின் எனதலாது என்னுது
உனதலா துன்கை கால் யாக்கை - எனதென்றும்
என்னறிவ தென்றும் உரைத்துநீ நிற்றிகாண்
உன்னிலவை வேறும் உணர். (2)

## மூன்றும் அதிகரணம்

(ஐம்புலனொடுக்கம் அறிதலின் என்றது ஐம்புலனறிதலின், ஒடுக்கம் அறிதலின் என்று உணரற்பாற்று).

மே-பொ : இனி ஐம்புலன் அறிதலின் ஆன்மா உ.ளதென்றது, ஐம்புலனாகிய சத்தப் பரிசரூப ரசகந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறியாமையின் இவ்வைந்தினாலும் ஐம்பயனும் அறிவது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உதாரணம் :

''ஒன்றறிந்த தொன்றறியா தாகி உடன்மன்னி
அன்றும் புலனுய அஞ்செழுத்தை - ஒன்றறிதல்
உள்ளதே ஆகில் அதுநீ தனித்தனிகண்டு
உள்ளலவை ஒன்றல்லை ஓர்.''

## நான்காம் அதிகரணம்

**மே-பொ :** இனி ஒடுக்கமறிதலின் ஆன்மா உளதென்றது, நனவின்-கண் கனவு கண்டாரமென்றும் கண்டிலம் என்றும் நிற்பது உளதா-கலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

**உதாரணம் :**

> ''அவ்வுடலின் நின்றுயிர்ப்ப ஐம்பொறிகள் தாங்கிடப்பச்
> செவ்விதின் அவ்வுடலிற் சென்றடங்கி - அவ்வுடலின்
> வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
> மாறல்உடல் நீ அல்லை மற்று. (4)

## ஐந்தாம் அதிகரணம்

**மே-பொ :** இனிக் கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மா உள தென்றது, ஒடுங்கின இடத்து இன்பத் துன்பம் சீவனம் பிரகிருதிக்கு இன்மையின், ஒடுங்காத இடத்து இன்பத் துன்பம் சீவியா நிற்பது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது.

**உதாரணம் :**

> ''கண்டறியும் இவ்வுடலே காட்டொடுங்கக் காணுதே
> உண்டிவினை இன்றி உயிர்த்தலால் - கண்டறியும்
> உள்ளம்வே றுண்டாய் ஒடுங்கா துடனண்ணில்
> உள்ளதாம் உண்டிவினை ஊன்.'' (5)

## ஆறும் அதிகரணம்

**மே-பொ :** இனி உணர்த்த உணர்தலின் ஆன்மா உளதென்றது, அவன் அறிந்தாங்கு அறிவன் என்று அறிவிக்க அறிந்து உபதேசி-யாய் நிற்பது உளதாகலின் அதுவே, அவ்வான்மாவாம் என்றது.

**உதாரணம் :**

> ''அறிந்தும் அறிவதே யாயும் அறியாது
> அறிந்ததையும் விட்டங் கடங்கி - அறிந்தது
> எதுஅறிவும் அன்றுகும் மெய்கண்டான் ஒன்றின்
> அது அது தான்என்னும் அகம்.'' (6)

### ஏழாம் அதிகரணம்

**மே-ஏ :** இனி மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளதென்றது, அவைதாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான்.

உதாரணம் :

> ''கலையாதி மண்அந்தம் காணிலவை மாயை
> நிலையாவாம் தீபமே போல - அலையாமல்
> ஞானத்தை முன்னுணர்ந்து நாடில் அதுதனுவாம்
> தான்அத்தின் வேருகும் தான்.'' (7)



# இலக்கண இயல்

## நான்காம் சூத்திரம்

"அந்தக் கரணம் அவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணராது
அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே"—

என்பது சூத்திரம்

என்னுதலிற்றோ எனின், இதுவுமது.

### வார்த்திகம்

*முதல் அதிகரணம்*

(அந்தக்கரணமவற்றின் ஒன்றன்று)

**(மே-ஏ) :** ஈண்டு இவ்வான்மா அந்தக் கரணங்களாய் உள்ள மனோபுத்தி ஆங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது, அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

**உதாரணம் :**

மனமாதி யாலுணர்தல் மன்னு புலன்கள்
மனமாதி மன்புலனின் அல்லன்-மனமேல்
உதித்தொன்றை உள்ளம் உணர்தல் அதனின்
உதிக்கும் கடற்றிரையை ஒத்து (1)

சிந்தித்தாய்ச் சித்தம் தெளியாதாய் ஆங்காரம்
புந்தியாய்ச் ஆய்ந்து மனமாகிப்-பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ளம் இவ்வேறும்
அவ்வேறும் போதுபோல் ஆங்கு. (2)

அகார உகாரம் அகங்காரம் புத்தி
மகாரம் மனஞ்சித்தம் விந்துப்-பகாதிவற்றை
நாதம் உளவடிவாம் நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று. (3)

எண்ணிலவு ஓங்காரத் தீசர் சதாசிவமாம்
நண்ணிய விந்துவொடு நாதத்துக்-கண்ணில்
பகரயன்மா லோடு பரமன் அதிதெய்வம்
அகரஉக ரம்மகரத் தாம். (4)

## இரண்டாம் அதிகரணம்

(சகசமலத்து உணராது)

மே-ஏ) : இனி இவ்வான்மாச் சகசமலத்தினுல் உணர்வின்று என்றது. அதுதான் ஞான திரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான்.

உதாரணம் :

மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணுதேல்
ஆயாதாம் ஒன்றை அதுவதுவாய் - வீயாத
வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றும் காட்டம்போல்
தன்னைமலம் அன்றணைதல் தான். (5)

## மூன்ரும் அதிகரணம்

(அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத்தைத்தே)

(மே-ஏ) : இனி இவ்வான்மாச் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆகிய பஞ்சாவத்திதனுய் நிற்கும் என்றது, அதுதான் மலசொரூபத்தின் மறைந்து அரூப சொரூபமாய் நிற்-றலான்.

உதாரணம் :

ஒன்றணையா மூலத் துயிரணையும் நாபியினிற்
சென்றணையும் சித்தம் இதயத்து - மன்ற ஏய்
ஐயைந்தாம் நன்னுதலிற் கண்டத்து வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு (6)

இலாடத்தே சாககிரத்தை எய்திய உள்ளம்
இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் - இலாடத்தே
அவ்வவ இந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
அவ்வவற்றின் நீங்கலது ஆங்கு (7)

## ஐந்தாம் சூத்திரம்

''விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே'' - என்பது சூத்திரம்.

என்நுதலிற்றோ எனின், இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.

## வார்த்திகம்

### *முதல் அதிகரணம்*

(விளம்பிய உள்ளத்து....................அளந்தறிந்தறியா)

**மே-ஏ :** ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும் என்றது, அவற்றினுல் ஆன்மா ஒற்றித்துக்காணின் அல்லது அவை ஒன்றையும் விடயியா ஆகலான்.

**உதாரணம் :**

''ஐம்பொறியை ஆண்டங் கரசாய் உளம்நிற்ப
ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம் - ஐம்பொறியின்
காணுதேற் காணுது காணுமுளம் காணுதேல்
காணுகண் கேளா செவி.'' (1)

### இரண்டாம் அதிகரணம்

(ஆங்கதுபோல.............காந்தங்கண்ட பசாசத்தவையே)

**மே–ஏ :** இனி இவ்வான்மாத் தன்னுலே உணரும் இந்திரியங்களைப்போலத் தானும் தன்னை உணராது நிற்றலால், இதுவும் தமது முதலாலே உணரும் என்றது.

உதாரணம் :

மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்தது
என்னும் மறையின் இயல்மறந்தாய் - சொன்ன சிவன்
கண்ணு உளம்வினையால் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணுன் சிவன் அசத்தை இன்று. (2)

வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல - மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனைக்
கண்டுடனுய் மன்னுதலைக் காண். (3)

அருளுண்டாம் ஈசற் கதுசத்தி அன்றே
அருளும் அவனன்றி இல்லை - அருளின்
றவனன்றே இல்லை அருட்கண்ணுர் கண்ணுக்கு
இரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து.'' (4)

## ஆரும் சூத்திரம்

''உணருரு அசத்தெனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே''-என்பது சூத்திரம்;
என்னுதலிற்றோ எனின், சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்-
துதல் நுதலிற்று.

### வார்த்திகம்

### (முதல் அதிகரணம்)

### (உணருரு எனின் அசத்து)

மே-ஏ : ஈண்டு அறிவினல் அறியப்பட்ட சுட்டு அசத்தென்றது. அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

**உதாரணம் :**

அசத்தறியாய் கேள்நீ அறிவறிந்த வெல்லாம்
அசத்தாகும் மெய்கண்டான் ஆயின்-அசத்தலாய்
நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரிலவை இன்றுமா றெப்பு.

## இரண்டாம் அதிகரணம்

(இருதிறனல்லது சிவசத்தாம்)

**மே-ஏ :** இனிப் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவது இன்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசம் இன்மையானும், அவ்விரண்டு தன்மையுமின்றி, வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாய் உள்ள சிவம் என்று உணரற்பாற்று.

**உதாரணம் :**

எண்ணிய சத்தன் றசத்தன்றும் என்றல்என்
கண்ணி உளதென்றல் மெய்கண்டான்-எண்ணி
அறிய இரண்டாம் அசத்தாதல் சத்தாம்
அறிவறியா மெய்சிவன்தாள் ஆம்''. (2)

உணர்ப அசத்தாதல் ஒன்றுணராது ஒன்றை
உணருநீ தானுணராய் ஆயின்-உணருமுனின்
தானிரண்டாம் மெய்கண்டான் தன்னால் உணர்தலால்
தானிரண்டாய்க் காணன் தமி. (3)

பாவகமேல் தானசத்தாம் பாவனா தீதமெனில்
பாவகமாம் அன்றென்னில் பாழதுவாம்-பாவகத்தைப்
பாவித்தல் தானென்னில் பாவகமாம் தன்னருளால்
பாவிப் பதுபரமில் பாழ்.'' (4)

அறிய இரண்டல்லன் ஆங்கறிவு தன்னால்
அறியப் படானறிவின் உள்ளான்-அறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு. (5)

அதுவென்னும் ஒன்றன் றதுவென்றி வேறே
அதுவென் றறியறிவும் உண்டே-அதுவென்று
அறிய இரண்டல்லன் ஆங்கறிவுள் நிற்றல்
அறியுமறி வேசிவமும் ஆம்.



# உண்மை அதிகாரம்

சாதன இயல்

## ஏழாம் சூத்திரம்

''யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்திலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா''-என்பது சூத்திரம்;
என்னுதலிற்றோ எனின் மேலதற்கோர் புறனடை உணர்த்துதல்
நுதலிற்று.

### வார்த்திகம்

### முதல் அதிகரணம்

(யாவையும்.........சத்தே அறியாது)

(மே-ஏ): ஈண்டு சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது என்றது, மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

உதாரணம்:

அந்நியமி லாமை அரற்கொன்றுணர் வின்றாம்
அந்நியமி லானசத்தைக் காண்குவனேல்-அந்நியமாய்க்
காணுன் அவன்முன் கதிர்முன் இருள்போல
மாணு அசத்தின்மை மற்று. (1)

### இரண்டாம் அதிகரணம்

(அசத்து இலது அறியாது)

(மே-ஏ): இனி அசத்தினுக்கு உணர்வின் றென்றது, அதுதான் நிருபிக்கில் இன்றாகலான்,

உதாரணம் :

''பேய்த்தேர்நீர் என்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின் - வாய்த்ததனைக்
கண்டுணர்வார் இல்வழியிற் காணும் அசத்தின்மை
கண்டுணர்வார் இல்லதெனக் காண்''. (2)

## மூன்றும் அதிகரணம்

(மே-பொ) : இனி ''இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' என்றது, இவ்விரண்டையும் அறிவதாய், உபதேசியாய், நின்ற அவ் அறிவு அவ்விரண்டின் பாலும் உள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது.

உதாரணம் :

அருவுருவம் தானறிதல் ஆயிழையாய் ஆன்மா
அருவுருவம் அன்றாகும் உண்மை-அருவுருவாய்த்
தோன்றியுடன் நில்லாது தோன்றாது நில்லாது
தோன்றல் மலர்மணம்போல் தொக்கு. (3)

மயக்கம துற்றும் மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசில் - அசத்துமலை
நீஅறிந்து செய்வினைகள் நீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான் (4)

மெய்ஞ்ஞானம் தன்னில் விளையாது அசத்தாதல்
அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண் - மெய்ஞ்ஞானம்
தானேஉள அன்றே தண்கடல்நீர் உப்புப்போல்
தானே உளம் உளவாய்த் தான்.'' (5)

## எட்டாம் சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே'' — என்பது சூத்திரம்.

என்னுதலிற்றோ எனின், ஞானத்தினை உணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.

## வார்த்திகம்

### முதல் அதிகரணம்

### (தவத்தினில் உணர்த்த)

மே-ஏ : ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது, மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி அல்லது மோட்சத்தைக் கொடா ஆகலான்.

உதாரணம் :

தவம்செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து
பவம்செய்து பற்றறுப்பார் ஆகத்-தவம்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றூர்சூழ் சொல்லுமாம் கண்டு.

பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
இசைத்து வருவினையில் இன்பம்-இசைத்த
இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தான்
மருவுவனும் ஞானத்தை வந்து (2)

### இரண்டாம் அதிகரணம்

### (தம்முதல் குருவுமாய்)

(மே-ஏ) : இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்துமென்றது, அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.

உதாரணம் :

மெஞ்ஞானம் தானே விளையும்விஞ் ஞானகலர்க்கு
அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய்-மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்தும் தான்குருவாய் முன்''.

',அறிவிக்க அன்றி அறியா உளங்கள்
செறியுமாம் முன்பின் குறைகள்-நெறியின்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு''.

''இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல்·இல்லா
அருவாகி நின்றானை ஆரறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று.

## மூன்றும் அதிகரணம்

(ஐம்புலவேடரின் அயர்ந்தனை வளர்ந்தென)

(மே-ஏ) : இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணரா என்றது, அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.

உதாரணம்:

பன்னிறம் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டும் தகைநினைந்து – பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு''.

## நான்காம் அதிகரணம்

(விட்டு அன்னியமின்மையின் அரன்கழல் செலுமே)

(மே-ஏ) : இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும் என்றது, ஊசல் கயிறற்றால் தாய்தரையே ஆம் துணையான்.

உதாரணம் :

சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலன்உணர்வில் தீர்ந்து-சிறைவிட்டு
அலைகடலில் சென்றடங்கும் ஆறுபோல் மீளாது
உலைவிலரன் பாதத்தை உற்று. (7)

எவ்வுருவும் தானென்னில் எய்துவார் இல்லைதாள்
இவ்வுருவின் வேறேல் இறையல்லன்-எவ்வுருவும்
கண்டோல் அவயவங்கள் காணு அக்கண்ணில்லார்
கண்பேறே காண் அக் கழல். (8)

ஐம்பொறியின் அல்லையெனும் அந்த தரசிவனை
ஐம்பொறியை விட்டங்கு அணைசகலன்-ஐம்பொறியின்
நீங்கான் நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரில்
நீங்கானை நீங்கும் நினைந்து (9)

### ஒன்பதாம் சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழ லாம்பதி விதியெண்ணும் அஞ்செழுத்தே''
என்பது சூத்திரம்.

என்னுதலிற்றோ எனின், ஆன்மசுத்தி பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகம்

#### முதல் அதிகரணம்

(பதியை ஞானக் கண்ணினில் நாடி)

**(மே ம-ஏ)** ஈண்டு அம்முதலை ஞானக் கண்ணாலே காண்க என்றது, அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.

**உதாரணம் :**

நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ
தேடி எனையறியேன் தேர்ந்தவகை-நாடிஅரன்
றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்
என்னும் என அறிவார் இன்று. (1)

காட்டிய கண்ணே தனைக்காணு கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணு-காட்டிய
உள்ளம் தனைக்காணு உள்ளத்தின் கண்ணாய
கள்வன்றான் உள்ளத்தில் காண். (2)

## இரண்டாம் அதிகரணம்

(ஊராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்தண்ணிழ லாம்பதி) (மே-ஏ) ; இனி அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞான சொரூபமென்று உணரற்பாற்று;

உதாரணம் :

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன்-அற்புதமாய்
ஆன அறிவாய் அளவிறந்து தோன்றானே
வானே முதல்களையின் வந்து (3)

சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்தென்னச்
சட்ட இனிஉளது சத்தேகாண்-சுட்டி
உணர்ந்தநீ சத்தல்லை உண்மையைத் தைவம்
புணர்ந்ததனால் பொய்விட்டுப் போம். (4)

கண்டதை அன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்
அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப்-பண்டணைந்த
ஊனத்தைத் தான்விடுமாறு உத்தமனின் ஒண்கருட
சானத்தில் தீர்விடம்போல் தான், (5)

## மூன்றும் அதிகரணம்

(விதி எண்ணும் அஞ்செழுத்தே)

(மே-ஏ) : இனி இவ்விடத்துப் பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது, இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்கும் ஆகலின், அது நீக்குதற்கு எனக் கொள்க.

உதாரணம் :

அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில்-அஞ்செழுத்தால்
குண்டலியிற் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்
அண்டனும் சேடனும் அங்கு. (6)

இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணும்-உந்தவே
காட்டாக்கில் தோன்றிக் கனல்சேர் இரும்பென்ன
ஆட்டானும் ஓதஞ் செழுத்து. (7)

மண்முதல்நா ளம்மலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும்-நண்ணிற்
கலைஉருவாம் நாதமாம் சத்திஅதன் கண்ணும்
நிலை அதிலாம் அச்சிவன்தாள் நேர். (8)





# பயன் இயல்

பத்தாம் சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி

ஏக ஞகி இறைபணி நிற்க

மலமாயை தன்ஞெடு வல்வினை இன்றே''-என்பது சூத்திரம். என்னுதலிற்ஜே எனின், பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

வார்த்திகம்

(முதல் அதிகரணம்)

(அவனே தானே ஆகிய அந்நெறி ஏகஞகி நிற்க மலம் இன்றே)

**(மே-ஏ) :** ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையால் அவனிடத்து ஏகஞகி நிற்க என்றது, அவ்வாறு நிற்கவே யான் எனது என்னும் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையும் ஆகலான்.

**உதாரணம் :**

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல்

தானெனவொன் றின்றியே தானதுவாய்-நானெனவொன்று

இல்லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத்து

இல்லென்று தாஞம் இறை. (1

இரண்டாம் அதிகரணம்

(இறைபணி நிற்க மாயை தன்ஞெடு வல்வினை இன்றே)

**(மே-ஏ) :** இனி இறைபணி வழுவாது நிற்க என்றது, அவனருளால் அல்லது ஒன்றையும் **செய்யான்** ஆகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா **ஆகலான்.**

உதாரணம் :

நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி
நாமல்ல நாமும் அரன்உடைமை-ஆம் என்னில்
எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்கு இல்லேவினே
முற்செய்வினே யுந்தருவான் முன். (2)

சார்ந்தாரைக் காத்தல் தலேவர் கடனுதல்
சார்ந்தாரைக் காத்தும் சலமிலனுய்ச் - சார்ந்தடியார்
தான்தானுச் செய்துபிறர் தங்கள்வினே தான்கொடுத்தல்
ஆய்ந்தார்முற் செய்வினேயும் ஆங்கு. (3)

இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்
முன்செய் வினேமாயை மூண்டிடினும் - பின்செய்வினே
மாயையுடன் நில்லாது மற்றவன்தான் மெய்ப்பொருளே
ஆய அத னுல்உணரும் அச்சு. (4)

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும் — எண்ணி
அரனடி ஓர்பவர் ஐம்புலனிற் சென்றும்
அவர்திறல் நீங்கார் அதற்கு. (5)

சதசத்தாம் மெய்கண்டான் சத்தருளிற் காணின்
சிதமித்தல் பாசத்தில் இன்றிக் - சுதமிக்கு
எரிகதிரின் முன்னிருள்போல் ஏலா அசத்தின்
அருகணேயார் சத்தணேவார் ஆங்கு. (6)

## பதினேராம் சூத்திரம்

''காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைச் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே -'' என்பது சூத்திரம்.

என்னுதலிற்ருே எனின், பரமேசுரனது சீபாதங்களே அணேயுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

## வார்த்திகம்

### *முதல் அதிகரணம்*

(உள்ளத்தைக் கண்டு காட்டலின்)

**(மே-ஏ) :** ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றது, இவ்வான்மாக்கள் அவனை இன்றியமைந்து ஒன்றையும் விடயியா ஆகலான்.

**உதாரணம் :**

ஐந்தினையும் ஒக்க உணரா தவற்றுணர்வது
ஐந்தும்போல் நின்றுணரும் ஆதலால்-ஐந்தையும்
ஒன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே எவ்வுலகும்
ஒன்றொன்றாப் பார்க்கும் உணர்ந்து (1)

ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினான்-ஏகமாய்
உள்ளத்தின் கண்ணானன் உள்குவார் உள்கிற்றை
உள்ளத்தாற் காணானே உற்று. (2)

### இரண்டாம் அதிகரணம்

(அயரா அன்பின் அரன்கழல் செலுமே)

**(மே-ஏ) :** இனிப் பத்தியினான் மறவாது ஏத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது, அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான்.

**உதாரணம் :**

அருக்கன்நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்கு
இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன்-அருட்கண்ணால்
பாசத்தை நீக்கும் பகலலர்த்தும் தாமரைபோல்
நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர். (3)

மன்னும் இருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னும் அரனே மலம்துரந்து-தன்னின்
வலிததிரும்பைக் காந்தம் வசம்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் தான். (4)

நசித்தொன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்று
நசித்திலதேல் ஒன்றுவ தில்லை-நசித்துமலம்
அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாம்
கப்பின்றும் ஈசன் கழல். (5)

பொன்வாள்முன் கொண்மூவில் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே எங்குமாம் தன்மைபோல்-முன்வாள்
மலத்துள் மறைந்துள்ளம் மற்றுலகை உண்ணும்
மலத்திரித்துச் செல்லும் வரத்து. (6)



## பன்னிரண்டாம் சூத்திரம்

''செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன்எனத் தொழுமே''-என்பது சூத்திரம்.

என்னுதலிற்றோ எனின் அசிந்திதனுய் நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

### வார்த்திகம்

### முதல் அதிகரணம்

(அம்மலங் கழீஇ)

**(மே-ஏ) :** ஈண்டு ஆணவ மாயை கான்மியம் என்னும் மலங்களைக் களைக என்றது, அவைதாம் ஞானத்தை உணர்த்தாது, அஞ்ஞானத்தை உணர்த்தும் ஆகலான்.

**உதாரணம் :**

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்
மண்முதல் மாயைகாண் மாயையும்-கண்ணிய
அஞ்ஞானம் காட்டுமிவ் ஆணவமும் இம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

### இரண்டாம் அதிகரணம்

(அன்பரொடு மரீஇ)

**(மே-ஏ) :** இனிச் சிவபத்தர்களோடு இணங்குக என்றது, அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவர் ஆகலான்.

உதாரணம் :

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்
சிறப்பில்லார் தம்திறத்துச் சேர்வை-அறப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரும்
மெய்த்தவரை மேவா வினை.

## மூன்றாம் அதிகரணம்

(நேயமலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழும்) (மே-ர) : இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுக என்றது, அவன் இவ்விடங்களில் பிரகாசித்து நின்றே அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னுள் இருத்தலால்-தன்னுணரும்
நேசத்தர் தம்பால் நிகழும் ததிநெய்போல்
பாசத்தார்க் கின்றாம் பதி, (3)

கண்டதொரு மந்திரத்தால் காட்டத்தில் அங்கிவேறு
உண்டல்போல் நின்றங்கு உளதாமால்-கண்டஉருத்
தானதுவாய் அன்றானன் தானதுவாய்த் தோன்றானே
தானதுவாய்க் காணும் தவர்க்கு (4)

## நான்காம் அதிகரணம்

(தொழுமே)

(மே-ர) : இனி இவ்விடங்களில் வழிபடுக என்றது, நரம்பு, நாடி முதலானவற்றைத்தான் அதுவாய் வரும் புருடன் அவை ஆகாதவாறு அப்புருடனும் ஆகலான்.

உதாரணம் :

அது இது என்ற ததுவல்லான் கண்டார்க்கு
அது இது என்றதையும் அல்லான்-பொதுவதனில்
அத்துவித மாதல் அகண்டமும் தைவமே
அத்துவிதி அன்பில் தொழு. (5)

வினையால் அசத்து விளைதலால் ஞானம்
வினைதீரின் அன்றி விளையா – வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும்
ஆனத்தால் அன்பிற் றெழு. (6)

தன்னை அறிவித்துத் தான்தானுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது – முன்னவனே
தானேதா ஞச்செய்தும் நைவமென்றும் தைவமே
பானே தொழுகை வலி. (7)

கேட்போர்

சிவமென்னும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்ரும் கண்வா சகத்தின் - சிவமுண்டாம்
ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கிங் கொண்குருவால்
இன்றிந்நூல் மும்மை மலர்க்கு. (8)

—0—

நூல்வழி

எந்தை சனற்குமரன் ஏத்தித் தொழஇயல்பாய்
நந்தி உரைத்தருளும் ஞானநூல் - சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தால் இன்று.

# சிவஞானபோதப் பொருணிலை

### காப்புச் செய்யுள்

*''கல்லால் நிழன்மலை*
*வில்லா ரருளிய*
*பொல்லா ரிணைமலர்*
*நல்லார் புனைவரே*

இறைவன் ஆவான் இயற்கை முற்றுணர்வினன்; உணர்த்த உணர்வன உயிர்கள். பலநூல்களையும் ஒருவன் தானே முயன்று கற்பதனுல் குழப்ப உணர்வே மிகும். அக்குழப்பம் நீங்கித் தெளிவுணர்வு பெறுதற்குக் கல்லால் நிழலில் எழுந்தருளியிருந்து மெய்யுணர்வு நல்கும் சிவபெருமான் திருவருள் வேண்டும். அத்திருவருள் கைகூடுதற் பொருட்டுப் பெரியோர்கள் விநாயகமூர்த்தியை வழிபடுவார்கள். அவரை வழிபடுவார்க்கு எல்லா இடையூறும் நீங்கி எண்ணிய எண்ணங்கள் எண்ணியவாறு நிரம்பும்.

### அவையடக்கம்

''தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமை யிகழார் - தம்மை
உணரார் உணரார் ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.''

செம்பொருளாகிய சிவத்தைத் தலைப்பட்டு உணரும் உணர்வே மெய்யுணர்வு எனப்படும். மீளாவடிமையாகிய தம் (உயிரின்) இயல்பை முன்னர்த் தெளிய உணர்ந்தார்க்கே முதல்வனை உணரும் மெய்யுணர்வு வரக் கூடியது. தம் இயல்பை முன்னர் உணர்ந்து யான் எனது என்னும் செருக்கற்று, முதல்வனைச் சார்ந்து உணர்வோர் அவனேடு ஒன்றிச் சிவமேயாய் நிற்பர். அத்தகையோர் எம்மாற் செய்யப்படும் இந்நூலின் செம்மையை உணர்வர். ஆதலின், அவர் மம்மை யிகழ்தல் செய்யார்.

இது மெய்கண்ட தேவர் தம் ஆசாரிய பரம்பரையினையும் குறிப்பால் வாழ்த்துவது ஆகின்றது.

முதற் சூத்திரம்

'அவனவன் அதுவெனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்''- என்பது சூத்திரம்.

உலகம் நம் அறிவால் சுட்டியறியப்படுவது. அறிவினால் அறிந்த யாவும் அசத்தே (தோன்றி நின்று மறைவதே) ஆகும். ஆதலால், இவ்வுலகம் முற்றும் ஒருகாலத்தில் தோன்றி, இப்போது இருப்பதாய்ப் புலனாகி, பின் ஒருகாலத்தில் தன் காரணநிலையில் மறைந்து போகக் கூடியது. இங்ஙனம் மாற்றமடையும் உலகை நியமித்து ஒழுங்குபட நடத்துதற்கு இயற்கை முற்றுணர்வுடைய முதல்வன் ஒருவன் இருத்தல் வேண்டும். அவன் சுட்டி அறியப்படாதவனாய், எவ்வகையான மாறுதலும் உறுத செம்பொருளாய், எல்லா உலகையும் ஒருங்கே தோற்றி, நிறுத்தி ஒருங்கே ஒடுக்க வல்லவனாய் இருத்தல் வேண்டும். உயிர்களுக்கு அறியாமையை விளைத்து நிற்கும் மூல மலத்தின் வலி குறைதற் பொருட்டு உலகப் படைப்பையும், அவற்றின் இளைப்பாறுதல் போன்ற கன்மமல பரிபாகத்தின் பொருட்டு அதன் ஒடுக்கத்தையும், கால வட்டத்துட்படுத்தி, அவன் செய்கின்றான். முதல்வன் தன் செயல்களைக் கரணங்களை அவாவாது தன்சத்தி சங்கற்பத்தால் செய்தலின், அவன் எத்தகைய மாறுதலும் அடைவதில்லை. முதல்வன் எல்லார் செயலையும் தன் முதன்மைக்கண் அடங்கக் கொள்ளும் ஒருவனேயாய் எல்லாவற்றிற்கும் முடிநிலைச் சார்பாக உள்ள வினைமுதலாய் உள்ளவன் எனக்கருதுதல் வேண்டும்

இரண்டாம் சூத்திரம்

''அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே''—என்பது சூத்திரம்.

முதல்வன் இவ்வுலகைத் தொழிற்படுத்தும்போது, இரும்புத் துண்டைத் தன் ஈர்ப்பு ஆற்றற் சூழலில் அகப்படக்கொண்டு இயக்கும் காந்தக் கல்லைப்போல, உயிர்களைத் தன் அருள்வெளிக்குள் அகப்படுத்தித் தொழிற்படுத்துகின்றான். இந்நிலையில், அவன் உயிர்களிற்

கலந்து ஒன்ருய், பொருட்டன்மையால் தான் உயிர்களுக்கு வேருன பொருளேயாய், அவற்றை உள்நின்று செலுத்துந் தன்மையால் அவற்ரேடு உடனுய் நிற்கின்ருன். இங்ஙனம் முதல்வனுல் ஒன்றி உடனுகிச் செலுத்தப்பெறும் உயிர்கள், தமக்குத் தோன்ருத் துணையாயுள்ள முதல்வன் செயலே அறியாது, தாமே எல்லாஞ் செய்வதாக உணர்ந்து முயலுதலினுல், அம்முயற்சியே அவற்றின். எதிர்காலத்தைக் கட்டுப்படுத்தும் வினையாக அவற்றைப் பற்றும். இங்ஙனம் அறியாமை காரணமாக வரும் இருவினை (இருள் சேர்–இருவினை) க்கு ஏற்றபடி இறந்தும் பிறந்தும் வரும்படி, அவற்றை முதல்வன் தான் செய்யும் ஐந்தொழிலில் அகப்படுத்தி நடத்துவன். இஃது உயிர்களின் பிறப்பு நிலையில் உள்ளது. இங்ஙனம் தனக்கு வேருன உயிர்களைப் பற்றி நின்று நடத்துதல் பற்றி, முதல்வன், தானும் தன் சத்தியும் எனத் தன்னுள் இருவகைப்பட நின்று உலகை நடத்துவன் என்பது கருதியுணர்தற்கு உரியது.

குறிப்பு: ஞாயிறு தன்னைச் சுற்றிவரும் கோள்களைத் தன் ஈர்ப்பு ஆற்றற் சூழலிலும் பேரொளியிலும் அடங்கக்கொண்டு, அவற்றைத் தொழிற்படுத்துதல் போல, இறைவன் உலகுயிர்களைத் தன் அருளாற்றலில் அகப்படுத்தி ஐந்-தொழிற்படுத்துவன் எனக்கொள்க.

ஞாயிறுபோல முதல்வன் உளன்; ஞாயிற்றின் ஒளியை அல்லது ஈர்ப்பு ஆற்றலைப்போல அவன்றன் அருளாற்றல் அல்லது சத்தி உள்ளது. இதனுல்தான் முதற்பொருளை அம்மையப்பராகக் கருது–கின்றனர் மெய்யுணர்ந்தோர்.

முதல்வனுக்கு உலகு உயிர்களோடு உள்ள சம்பந்தம் அத்து-விதம் (இருமையின் ஒருமை) எனப்படும். முதல்வனுக்கும் அவன்றன் சத்தியாகிய அருளாற்றலுக்கும் உள்ள சம்பந்தம் தாதான்மியம் (ஒருமையின் இருமை) எனப்படும்.

முன் இரண்டு சூத்திரங்கள், இவ்வாறு இறைவன் உண்மை-யினையும் இயல்பினையும், காணப்படும் உலகைக் காட்டி உய்த்–துணரவைக்கின்றன. இஃது அண்டத்தின் வைத்து உணர்த்துவது. இனி, அடுத்துவரும் சூத்திரங்கள் உயிரின் இயல்பை நம் உடம்பில் நிகழ்ந்துவரும் உணர்வு நிகழ்ச்சிகளை நோக்கி உணரவைத்து (பிண்டத்தில் வைத்து) விளக்குகின்றன.

## மூன்றாம் சூத்திரம்

''உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா''—என்பது சூத்திரம்.

உடம்பு தோறும் காணப்படும் ஒழுங்குபட்ட அறிவு செயல்களுக்கு மூலமாய், யான் என்னும் உணர்வு வடிவில் விளங்குவதே உயிர் அல்லது ஆன்மா எனப்படும். அதனை யாதோ என ஆராய்ந்த பலர் பலவகைப்படக் கூறியுள்ளனர்:—

1. அஃது இன்னது என அறிய வாராமையின், அதனைச் சூனியம் என்றனர் புத்தர்;

2. உடம்பையே யான் என வழங்கி வருதலின், உடம்பே ஆன்மா என்றனர் உலக வாதிகளுள் ஒரு சாரார்;

3. அவருள் மற்றொரு சாரார் ஐம்பொறிகளே அறியக்காண்டலின், அப்பொறிகளே ஆன்மா என்றனர்;

4. உயிர்ப்பு இல்லையாயின் உயிரில்லை எனக் கோடலின், உயிர்ப்பாகிய பிராணவாயுவே ஆன்மா என்றனர் ஒருசாரார்;

5. நாம் கண்டவற்றையும் கேட்டவற்றையும் மனத்துக் கொண்டு, சிந்தித்து, நிச்சயித்து, இன்பத்துன்ப வேதனைப் படுதலின், இவை அகத்தே நிகழ்வன ஆகலின், இவ்வாறு சிந்தித்தல், துணிதல், வேதனைப்படல் என்னும் தொழிற்பாடுள்ள உள்ளத்தின் கூறுபாடுகளாகிய அந்தக்கரணங்களே (மனம், புத்தி, அகங்கர்ரம், சித்தம் என்னும் அகக்கருவிகள்) ஆன்மா என்றனர் வேறொருசாரார்.

6. கனவின்கண் நுண்உடல் கொண்டு நனவிற்போலக்கண்டு கேட்டு உண்டுஉயிர்த்து உற்றறிந்து வருதலின், அதற்குக் காரணமாகவுள்ள நுண் உடம்பே ஆன்மா என்றனர் மற்றொருசாரார்.

7. ''பிரஞ்ஞானம் பிரம்ம'' என உபநிடதம் கூறலின், சச்சிதானந்த மயமாயுள்ள பிரம்மமே ஆன்மா என்றனர் சங்கரர் முதலாயினர்.

8. உடலின் கூறுகள் உளத்தின் கூறுகள் அனைத்தும் ஒருங்குகூடி ஒழுங்குபட இயங்கும் போதே நமக்கு உணர்வு உண்டாகின்றது; அல்லாதபோது உணர்வு இல்லை; ஆகலின், அகப்புறக் கருவிகள் அனைத்தின் கூட்டமே ஆன்மா; இவற்றுக்கு வேறாய் ஆன்மா என ஒன்றில்லை என்றனர் புத்தரில் ஒருசாரார்.

இந்த எண்மர் மதங்களில் எழுவர் மதம் மூன்றாஞ் சூத்திரத்தால் மறுக்கப்பட்டு ஆன்மாவின் உண்மை தெளிவிக்கப் படுகின்றது, அந்தக்கரணங்களே ஆன்மா என்பார் மதம் நான்காஞ் சூத்திரத் தால் மறுக்கப்படுகிறது.

### மூன்றாம் சூத்திரத்தின் பொருள்

1. *ஆன்மா சூனியம் அன்று :* பல வகையால் எது ஆன்மாஎன ஆராய்ந்து, முடிவில் சூனியமே ஆன்மா எனத் துணியும் போது, அவ்வாறு துணியும் அறிவு உள்ளது அல்லவா? அவ்வறிவே ஆன்மா என உணரத்தக்கது.

2. *பருஉடல் ஆன்மா அன்று :* என்ஊர், என்வீடு, என்மனைவிஎன, ஊர், வீடு, மனைவிமுதலிய உடைமைகளை நமக்கு வேறாக உணர்கிறோம் அல்லவா? அதுபோல, என்கை, என்தலை, என்உடம்பு என இந்த உடம்பு நமக்கு வேறாக உணரப் படுகின்றது ஆதலால் யான் என்னும் உணர்வு வடிவில் விளங்கும் ஆன்மா இவ்வுடம்புக்கு வேறாக உள்ளது.

3. *ஐம்பொறிகள் ஆன்மா அல்ல :* கண்காணும்; ஆனால் கேளாது செவிகேட்கும்; ஆனால் காணாது. இங்ஙனம் ஐம்பொறிகளுள் ஒன்று அறிந்ததை மற்றொன்று அறிவதில்லை. ஆயின், ஒருபழத்தைக்கண்டு வாங்கி, மோந்து, சுவைத்து நுகரும்போது, கண்டயானே வாங்கினேன்; பின்அதனை மோந்தேன்; பின் சுவைத்து உண்டேன்-எனச் சுவை, ஒளி, ஊறு ஓசை நாற்றம் ஆகிய ஐம்புலன் உணர்வும் ஒரே அறிவின்கண் அணைந்து தொடர்புபட நிகழ்தலின், இவ்வாறு அறிவதாகிய ஆன்மா ஐம்பொறிகளுக்கும் வேறாதல் வேண்டும்.

4. *கனவுடலாகிய நுண்உடம்பு ஆன்மா அன்று :* கனவின்கண் கண்டவற்றை நனவின்கண் தெளிய உணரமாட்டாது மயங்கி அரைகுறையாகவும் வேறுபடவும் உணர்கின்றோம். கனவுடம்பே ஆன்மா

ஆயின், நனவின்கண் இம் மருட்கை உளதாகாது. நனவில் பருவு-வுடம்பிற் பட்டும், கனவில் நுண்ணுடம்பிற்பட்டும் உணர்தல் பற்றி உடம்பு வேறுபாடு - கரண வேறுபாடு இருத்தலால்தான் ஈரிடத்தும் அறிவு வேறுபட நிகழ்கின்றது. ஆகலின், கனவில் நுண்ணுடம்பைப் பற்றுவதாகவும், நனவில் அதைவிட்டுப் பருவுடம்பைப் பற்றுவதா-கவும் உள்ள அறிவு (ஆன்மா) அவை இரண்டிற்கும் வேறேயாம்.

5. *பிராணவாயு ஆன்மா அன்று :* நனவு, கனவு, உறக்கம் மூன்றி-லும் பிராணவாயு ஒரு படித்தாக இயங்குதலைக் காண்கிறோம். நன-வில் பருவுடம்பு தொழிற்படுகிறது; இன்பத்துன்ப நுகர்ச்சிக்குக் காரனமாக அது நிகழ்கின்றது; ஆனால் உறக்கத்தில் பருவுடம்பின்-கண் தொழிற்பாடும் இன்பத்துன்ப நுகர்ச்சியும் நிகழவில்லை. பிராண வாயுவே ஆன்மாவாயின், நனவு, கனவு, உறக்கம் மூன்றிலும் இன்பத் துன்ப நுகர்ச்சியும் தொழிற்பாடும் பருவுடம்பில் ஒரேமாதிரி நிகழ வேண்டும். அவ்வாறு நிகழாமையின், பருவுடம்பு, கனவுடம்பு, மனம் புத்தி, அகங்காரம் என்னும் அகக்கருவிகள்-என்பனவற்றுடன் கூடி-யும் பிரிந்தும் அவத்தைப்படும் ஆன்மா பிராணவாயுவுக்கு வேறே-யாம்.

6. *பிரம்மம் ஆன்மா அன்று :* முதற் பொருளாகிய பரப்பிரம்மம் இயற்கை மூற்றுனர்வுடையது; எக்காலத்தும் எல்லாப் பொருள்-களையும் ஒருபடித்தாக அறிந்து நிற்பது; ஆயின், உடம்பு தோறும் யான் என நிகழும் உணர்வு உணர்த்த உணரும் செயற்கைச் சிற் றறிவாக உள்ளது. இஃது உடம்பில் உள்ள கருவிகளால் விளக்கப்பெறுவது; நனவு நிலையினும், நூல் ஆசிரியன், உடன்பயில் வோர் உலக அநுபவம் என்னும் உதவிகளால் படிமுறையில் ஐய-மும் மருட்கையும் நீங்கி அறிவு வளரப் பெறுவது. ஆதலால், பரப்பிரம்மத்திற்கு வேருக அதன் உதவியைப் பெறுவது ஆன்மா என்பதே உண்மை நூல்களின் துணிபு.

7. *உடம்பு முதலாகவுள்ள கருவிகளின் கூட்டமே ஆன்மா என்றலும் பொருந்துவதன்று :* அக்கருவிகளெல்லாம் கலைமுதலாக நிலம் வரை முப்பத்தொரு பெயர் பெறும்; அவற்றைத் தொகுத்துக் காணும் போதும் பருவுடம்பு, நுண்ணுடம்பு, பரவுடம்பு எனப் பெயர் பெறுவதன்றி ஆன்மா எனப்பெயர் பெறுவதில்லை. ஆதலின் ''இது'' எனச் சுட்டப்படும் பொருள்கள் அனைத்திற்கும் வேருய்

அவ்வாறு பிறபொருளைச் சுட்டி உணர்ந்து அவற்றில் அழுந்தியும், ''இது நான் அன்று'' என அவற்றின் நீங்கியும் அவத்தைப் பட்டு வரும் உணர்வே ஆன்மா. அது கண்ணுக்குக் கண்ணடி போல நின்று உதவும் மாயா காரியமாகிய பொருள்களுள் ஒன்றும் அன்று; முதல்வன் மாயையைக் கடந்து நிற்பவன் ஆதலின், முதல்வன் ஆதலும் இன்று; மாயா காரியத்திற்கும் முதல்வனுக்கும் வேருய், அவ்விரண்டாலும் பயன் கொள்ளும் மூன்ருவது பொருளாம்.

குறிப்பு :- ஊன்றிநோச்கின், நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், மீமாஞ்சை, வேதாந்தம் என்னும் ஆறு தரிசனங்களிலும், உலகாயதம், பௌத்தம், சமணம் என்னுய் புறச் சமயங்களிலும் கூறப்படும் பதார்த்த நியமனம் எல்லாம் இது காறும் சுருக்கமாக விளக்கப்பட்ட மூன்று சூத்திரப் பொருள் நிலையில் அடங்கி மறுப்புண்டு போதல் விளங்கும்.

## நான்காம் சூத்திரம்

அந்தக் கரணம் அவற்றினென் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணராது
அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே-என்பது சூத்திரம்.

உயிர்க்கு நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்னும் ஐந்து உணர்வு நிலைகள் அன்ருடம் முறையே ஏறு வரிசையிலும், பின் இறங்கு வரிசையிலும் நிகழக்காண்கிரும். ஏறு வரிசையில் பொருள் உணர்வு (Objective Conscousness) மேன்மேலும் விளக்க முற்று வருதலும், இறங்கு வரிசையில் அவ்வுணர்வு. மங்கி அறியாமை மேம்பட்டு நிகழ்தலும் நம் அநுபவமாக உள்ளன ஆதலினல், உயிருக்கு அறியாமையை விளைவிப்பதாக இயற்கை மலம் ஒன்று உண்டென்பது உணரப்படும். மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்னும் அகக்கரணங்கள் அவ்வறியாமையைவிலக்கி, உலகப் பொருள் களை உணர்ந்து தக்கபடி எதிர் இசைவு புரிய (Respond) உதவுகின்றன என்பதும் உணரப்படும்.

''யான் இதனை அறிகிறேன்'' என நிகழும் உணர்வில், யான் என நிகழ்வது, தன் நோக்கு உணர்வு, (தற்பிரகாசம் self consciousness); இதனை அறிகின்றேன் எனப் புறப் பொருளை நோக்கும் உணர்வு பொருள் உணர்வு (பரப்பிரகாசம், Objective awareness); ஆன்மா பொருள் உணர்வோடு தன் நோ கு உணர்வும் உள்ளது. அதற்கு உதவியாக உள்ள அந்தக் கரணங்கள், ஐம்பொறிகள் முதலி

யவை ஆன்மா உடனுகி நிற்கும்போது பொருள் நோக்கு உடையவை யாய்த் தோன்றும்; ஆயினும், தன்நோக்கு உடையவை ஆகா. இவ் வேறுபாட்டை உள்நோக்கு தற்சோதனை (introspection) உணர்ந்து. அந்தக்கரணங்களைத் தனக்கு வேறு என்று அறிக என்கிறார் மெய்கண்டதேவர்; அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான் என்னும் ஏது, அந்தக் கரணங்கள் பரப்பிரகாசமாகிய பொருள் நோக்கு உடையவையாயிருந்தே தற்பிரகாசம் (தன் நோக்கு உணர்வு) இல்லாதவை ஆதலால்-எனப்பொருள்படும். இது சிவஞான சுவாமிகள் கொடுக்கும் விளக்கம்.

இங்குக்காட்டிய அநுபவம் பற்றி மேலும் தற்சோதனை Introspection) உள்நோக்கு நெறியில் நின்று நோக்கின், உயிர்க்கு மூன்று அடிப்படை உணர்வுநிலைகள் உள்ளன என்பது விளங்கும. அவை கேவலம், சகலம், சுத்தம் எனப்படும். கேவலம் அறியாமை யில் அழுந்தும் நிலை; இது நூல்களில் இரவுஎனப்படும். சகலம் உலகப் பொருள்களின் தன்மையில் அழுந்தும் நிலை; இது பகல் எனப்படும். சுத்தம் முதல்வன் திருவருளில் அழுந்தும் 'நிலை; இதுவே நூல்களில் இராப்பகலற்ற இடம் எனப்படும். கேவலத்திலிருந்து சகலத்தைத் தலைப்படும் நெறியில் மேலே காட்டிய உயிர்ப்படக்கம், பேருறக்கம், உறக்கம், கனவு, நனவு என்னும் ஐந்து ஆக்கநிலைகளும் இவ்வாறு ஏறு வரிசையில் நிகழும். இவைபோலவே சகலத்தில் ஐந்து ஆக்க நிலைகளும், சுத்தத்தில் ஐந்து ஆக்க நிலைகளும் உள்ளன. தன்னை. உணரப்புகுவார் இந்த நிலைகளையெல்லாம் சகலத்தில் நின்று முன்னும் பின்னும் கூட்டி உணர்தல் வேண்டும்.

## ஐந்தாம் சூத்திரம்

''விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே''-என்பது சூத்திரம்.

மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளும் தத்தமக்குரிய ஊறு, சுவை, உரு, நாற்றம், ஓசை என்பவற்றை அறியும் போது மேலே சொல்லிய உயிரால் செலுத்தப்பட்டே அறியும்; ஆயினும் அவை புறநோக்கு ஒன்றே உடையவை ஆதலால்,

தம்மையும் அறிவதில்லை, தம்மைச் செலுத்தி நிற்கும் உயிரையும் அறிவதில்லை. இவற்றைப் போன்ற இயல்புதான் உயிர்களாகிய நமக்கு உள்ளது. உயிர் ஒரு பொருளை அறியும்போதும் ஒருசெயலைச் செய்யும் போதும், முதல்வனால் அறிவிக்கப் பெற்றும், செலுத்தப் பெற்றுந்தான், அறிகிறது; செய்கிறது. ஆயினும், அது பொருள் நோக்கு (Objective Consciousness) உடையதாகவே இருத்தலின், தன்னையும் அறிவதில்லை; தன்உணர்வின் முதலாக இருந்து தொழிற் படுத்தும் முதல்வனையும் அறிவதில்லை. காந்தம், தான் அசைவின்றி இருந்தே, இரும்பைத் தன் ஆற்றலால் இயக்குமாறு போல, இறைவன் உயிர்களைத் தொழிற் படுத்துகின்றான். ஆதலின் அவன் எல்லா உயிர்களுக்கும் உபகரிப்பவனாக இருந்தும், தான் சிறிதும் விகாரப்படுவதில்லை.

இஃது உயிர்க்கு அறிவு செயல்கள் மாயையின் சார்பால் விளங்குவன எனினும், அவ்விளக்கம் முதல்வனது உபகாரம் இன்றி உளதாகாது என உணர்த்திற்று.

முதல்வனது உண்மையை அவன் நம் உணர்வுக்கு முதல் எனக்கண்டு உணரவேண்டும் என நியமித்ததூஉம் ஆயிற்று.

அத்துவிதம் என்பதன் மெய்ப்பொருளை இரண்டாஞ் சூத்திரத்தில் தோற்றுவாய் செய்த ஆசிரியர், இச் சூத்திரத்தில் மேலும் விளக்கி, பதினொன்றாஞ் சூத்திரத்தில் அதன் முழு இயல்பையும் பயனையும் கூறிமுடிக்கின்றார். பன்னிரண்டாஞ் சூத்திரத்தில், திருவேடம், ஆலயம் என்பவற்றைச் சிவனெனக் கண்டு தொழுவதற்கும் அத்துவித உணர்வே துணையாதலைத் தெரிவிக்கின்றார்.

இவற்றை நோக்கி உணர்ந்த தாயுமான அடிகள்,

> "பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
> மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ"!

என்றமை கருதி உணரத்தக்கது.

### ஆறாம் சூத்திரம்

> "உணருரு அசத்தெனின் உணராது இன்மையின்
> இருதிறன் அல்லது சிவசத் தாமென
> இரண்டு வகையின் இசைக்குமன் உலகே" - என்பது சூத்திரம்,

முதல்வன் நம் அறிவால் அறியப்படுபவனு? அல்லனு? அறியப் படுபவன் என்ருல், அறியப்படும் பொருள்களெல்லாம் அறிவில் பொருள்களாகவும் அழிவனவாகவும் இருத்தலின், முதல்வனும் அறி- வில் பொருளாய் முடிவான். எவ்வாற்ருனும் அறியப்படாதவனே ஆவன் எனின், நம் உணர்வில் தட்டாத பொருளால் நமக்கு எப்- பயனும் உளதாகாது; ஆதலினுல், அவனை இல்பொருள் என்றே கொள்ளநேரும். இங்ஙனமாகலின், அவன் சுட்டறிவுக்கு அப்பாற் பட்டவன் எனவும். பாசங்களினீங்கி, சுட்டாது ஒற்றித்து நின்று உணரும் அநுபவ உணர்வுக்கு விடயமாகுவன் எனவும் கொள்ளு- தலே பொருத்தம் ஆகும். இதனுல் அவன் சித்தாகவும் செம்- பொருளாகவும் உளன் என்பதையும் உணரலாம். எனவே முதல்- வனைச் சிவசத்து எனக்கூறலாம். சிவம்-சித்து; சிவசத்து-சித்துச்- சத்து; அறிவுவடிவாய் உள்ள செம்பொருள்.

இச்சூத்திரம் மேலே ''அளந்தறிந் தறியா'' என்றமை பற்றி வரும் ஐயம் நீக்கித் தெளிவிக்கின்றது.

உயிர் அறியாமையில் அழுந்திநிற்கும் கேவல நிலையினும், மாயையின் காரியங்களால் அவ்வறியாமை ஓரளவு நீங்கிப் பொரு- ளறிவு பெற்று நிற்கும் சகல நிலையிலும் முதல்வனை அறியாது எனினும், இருளும்மருளும் நீங்கி முதல்வன் திருவருளைத் தலைப்- பட்டு நின்றுணரும் மாசறுகாட்சியில் (சுத்தநிலையில்) அம்முதல்வனை அறிவின்பச் செம்பொருளாய்ச் சார்ந்து உணர்ந்து இன்புறும் என்பது இதனுல் உணர்த்தப் பட்டது.

''இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு''.

''தூஉய்மை என்பது அவாவின்மை'' என்னும் திருக்குறட் பகுதிகள் புடைபட வைத்து நோக்குதற்கு உரியன.

### ஏழாம் சூத்திரம்

''யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்திலது அறியாது

இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா'' என்பது சூத்திரம்.

சத்தாகிய சிவத்தின்முன் அசத்தாகிய உலகம் முனைந்து தோன்ருது; ஞாயிற்றின் ஒளிமுன் விளக்கொளி முனைந்து தோன்ரு- தன்றே! அது போல. ஆதலால், சிவம் உலகத்தை நுகராது; அஃதா- வது, அதுவது வாய் அழுந்தி நின்று அதன் ·தன்மையை ஏற்றுக் கொள்ளாது.

அசத்தாகிய உலகமும், அறிவில் பொருள் ஆதலால், சிவத்தை அநு-பவியாது பின்னர் இவற்றை அறிந்து பயன் உறுவது எது என்னில், ஆன்மாவே இரண்டனையும் அழுந்தி அறிந்து பயன்கொள்ளும். அது சத்து அசத்து என்ற இரு திறனையும், இருதிறனாலும் அறிவதாய், அவ்-விரண்டனையுஞ் சார்ந்து அவற்றின் பால் உள்ளதாய் விளங்கும். இஃது அதன் சிறப்பியல்பு.

சத்து-செம்பொருள், எவ்வகை மாறுதலும் எய்தாதது, அசத்து தோன்றி நின்று மறைவதாகிய மாற்றம் உடையது.

விளக்கம்: பிறப்புநிலையில், ஆன்மா, அசத்தாகிய, முக்குணவடிவில் உள்ள உலகப்பொருள்களை அறிந்து நுகரும்; அந்நுகர்ச்சி தனுகரணங் களாகிய அசத்தால் அதற்கு உளதாவது; அந்நிலையில். ஆன்மா தனு கரணங்களே தான் என உணர்ந்து அவற்றின் மயமாய் இருக்கும்.

வீட்டுநிலையில், இதுபோல, சத்தாகிய சிவத்தை அதன் திரு-வருளாகிய சத்தாற் கண்டு உணர்ந்து, சத்தாகிய அதன் எண் குணங்-களும் தன் பால் மேம்பட்டு விளங்கச் சிவமாய் நிற்கும். இதுபற்றி ஆன்மா எனஒன்றில்லை; சிவமே ஆன்மா என்றல் அடாது.

முன் அசத்தைச் சார்ந்து அசத்தாய் நின்ற ஆன்மா, பின்-சத்தைச் சார்ந்து, அசத்தின் நீங்கிச் சத்தாய் நிற்றலின், அது சதசத்து எனப்படும்.

''சேர்வார்தாமே தானாகச் செயுமவன்'' திருஞானசம்பந்தர்

தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச்

செம்மையுள் நிற்பர் ஆகில் சிவகதி விளையும் அன்றே' திருநாவுக்கரசர்.

''அவனிவன் ஆன தவனருளா லல்லது
இவன் அவன் ஆகான் என் றுந்தீபற
என்றும் சிவனேயென் றுந்தீபற''-திருவுந்தியார்.

இவ்வநுபவ வாய்மொழிகள் உடன் வைத்து நோக்குதற்கு உரியவை.

### எட்டாம் சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே' என்பது சூத்திரம்.

முன் முன் பிறவிகளில் பயன் கருதாது செய்து வந்த சரியை கிரியா யோகங்களாகிய தவமுதிர்ச்சியினால், உயிர்க்குயிராக இருந்து உணர்த்தி வரும் முதல்வன் ஞானாசிரியனாகத் தோன்றி மெய்யுணர்வை அளித்தருள்வன். மன்னவன் மகன் வேடரிடத்தே தங்கித் தன் பெருந்தன்மையை மறந்து வாழ்வது போல, சிவாநந்தப் பெருஞ் செல்வத்தைப் பெற்று வாழ்வதற்குரிய சிவகுமாரனாகிய உயிர் ஐம் பொறிகள் முதலிய தத்துவக் கூட்டங்களுடன் சேர்ந்து, தன் பெருந் தன்மையையும் சிவத்தோடு தனக்கு உள்ள சம்பந்தத்தையும் அறியாது, பிறப்பிறப்புட்பட்டு உழலும். இவ்வுண்மையை ஞானாசிரியன் பக்குவ முதிர்ச்சியுள்ள உயிர்க்கு உணர்த்தியருளுவன். இவ்வுண்மையைக் கேட்டவுடன், உயிர் தத்துவக் கூட்டங்களினின்றும் நீங்கி, முதல்வன் திருவடியில் பிரிப்பின்றி ஒன்றி இன்புறு நிலையை எய்தும்.

எட்டாஞ் சூத்திரப்பொருள் 'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி' என்னும் திருக் குறளின் விரிவுரையாக அமைதல் காண்க.

### ஒன்பதாம் சூத்திரம்

''ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழ லாம்பதி விதியெண்ணும் அஞ்செழுத்தே' என்பது சூத்திரம்.

அசத்தாகிய தத்துவங்களோடு கூடுவதால் உயிர்க்கு உண்டாகும் சுட்டுணர்வு பாச ஞானம் எனப்படும். மூன்றாஞ் சூத்திரத்துக் கூறியவாறு, 'நான் யார்'? என உயிர் தன் உண்மையை ஆய்ந்துணரின், அது மாயாகாரியமாகிய கருவி கரணங்களின் தொடர்பு நீங்கித் தன் வியாபக நிலையை உணரும்; அவ்வாறு உணரும் நிலையில், பாசம் நீங்கினும் அதன் வாதனை காரணமாகத் தன்னை 'நான் பரம் பொருள்' என உணரும். இவ்வுணர்வு பசுஞானம் எனப்படும்.

பகற்பொழுதில் அளப்பரிய ஆகாயத்தைக் காணலுறும் போது, ஆகாயத்தின் அவ்வளப்பரிய விளக்கம் அதன்கண் கலந்து விளங்கும் ஞாயிற்றின் பேரொளி காரணமாக உளதாதல் போல, பாச நீக்கத்தில் உயிரின் கண் விளங்கும் வியாபகம் முதல்வன் திருவருட் சார்பு பற்றிய விளக்கமாகும் எனத்தெளிந்து, அத்திருவருள் ஒளியில் "யான் எனது'' என்னும் செருக்கு அற அடங்கி நிற்பின், அவ்வருளுக்கு முதலாக உள்ள சிவம் பேரின்ப வடிவாய்த் தோன்றி, ஆன்மாவைத் தன் வயப்படுத்தி இன்பூட்டும். இவ்வாறு திருவருளே கண்ணுகக் காணும் காட்சியே மெய்யுணர்வு அல்லது சிவஞானம் எனப்படும்.

பாசக் கூட்டம் எல்லாம் கானல் நீர்போல் சடுதியில் தோன்றி மறைவன என, அவற்றைத் தனக்கு வேருகக் கண்டு பற்றுச் செய்யாது நிற்ப, அவ்வாறு நிற்கும் உயிரின் அறிவின்கண் திருவருள் ஞானம் பிறவி வெப்பத்திற்குத் தண்ணிய நிழல்போல் வெளிப்படும். பாச ஞானத்தாலும் பசுஞானத்தாலும் பற்றமுடியாத பேரின்ப முதல்வனை அத்திருவருள் ஞானத்தால் தன் அறிவின்கண் ஒருவன் நாடுதல் வேண்டும். இவ்வாறு சிந்தித்துக் காணும் காட்சி சலியாதிருத்தற் பொருட்டு முத்தி பஞ்சாக்கரம் சுத்தமானதமாக எண்ணப்படும்.

ஒன்பதாஞ் சூத்திரப் பொருள் ''ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப்பேர்த்துள்ள வேண்டா பிறப்பு" என்னும் திருக்குறளின் விரிவுரையாக அமைதல் காண்க.

### பத்தாம் சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகனுகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே''- என்பது சூத்திரம்.

பிறப்பு நிலையில், உயிரின் அறிவு செயல்கள் நிகழும்போது முதல்வனும் உடனுகி நின்றே அவ்வாறு நிகழுமாறு பணித்து வருகின்றான்; இங்ஙனம் முதல்வன் உடனிற்பினும், உயிர் யான் எனது என்னும் செருக்கோடு முயலும்; அதனால், முதல்வன் தன் இருப்பைச் சிறிதும் அவ்வுயிர்க்குக் காட்டாது, தான்பின் நின்று, அதன் வழியிலே அதனைச் செல்லுமாறு விடுகின்றான். உயிர் முதல்வன் உபகாரத்தை மறந்து செய்யும் செயல்களுக்குத் தானே பொறுப்பு ஆதலின், இருவினை அதைப் பற்றுகின்றது.

இங்ஙனம், பிறப்பு நிலையில், முதல்வன் தான் எனத் தன்னைக் காட்டாது உயிரின் செயலில் மறைந்து வந்தாற்போல, முதல்வ

னிருப்பை உணரும் வீட்டுநிலையில், ஆன்மா தான் என ஒரு முதல் காணப்படாதபடி எல்லாம் முதல்வன் செயலே என்னும்படி அவன் அருளால் அல்லது ஒன்றையும் அறிதலோ செய்தலோ இன்றி அருள் வழி நிற்றல் வேண்டும். இங்ஙனம், முதல்வனோடு ஒன்றுதலால் இயற்கை மலம் எனப்படும் ஆணவத்தின வாதனை பற்றறக் கழியும்; அருள்வழி நிற்றலால் அருளே சுாட்சிப்பட்டு உலகம் காட்சிப்படாது; அதாவது மாயையின் செயல் பற்றறக் கழியும்; ஆதலினால் இருவினைகளும் ஆன்மாவைப் பற்றமாட்டா.

இச் சூத்திரத்தால் குறிக்கப்படும் மெய்யுணர்வுநிலை அருணிலை எனப்படும்.

இச்சூத்திரம் ''சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்-சார்தரா சார்தரு நோய்" என்னும் அருமைத் திருக்குறளை ஒத்தது.

## பதினொன்றும் சூத்திரம்

''காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே''- என்பது சூத்திரம்.

கண் பொருள்களைக் காணும் இயல்பு உள்ளது; ஆயினும், உயிரின் அறிவு உடனிருந்து செலுத்திக் காட்டினால் அன்றி அதற்குக்காட்சி நிகழாது. ஆதலினால் பொருள்களைக் கண்காணும் போது உயிரின் உதவியைக் கொண்டே காணும்.

இவ்வாறே, உயிர் பொருள்களை அறிந்து அவற்றில் அழுந்திநின்று அநுபவிக்கும் இயல்பு உள்ளது; ஆயினும், முதல்வன் திருவருள் உடன்கலந்து செலுத்திப் பொருள்களைக் காட்டினால் அன்றி அது பொருள்களைக் காணாது. மேலும் கண்பொருள்களைக் காணும் போது உயிரின் அறிவு அதற்குப் பொருள்களைக் காட்டித் தானும் காணும்; உயிரின் அறிவுக்குக் காட்சி இல்லையென்றால், கண்ணிற்கும் காட்கி இல்லைதான். இவ்வாறே உயிர் பொருள்களை அறிந்து அநுபவிக்கும் போது, உயிர்க்கு அவ்வநுபவம் நிகழ்தற் பொருட்டு முதல்வன் அவ்வுயிர்க்குப் பொருள்களைக் காட்டித் தானும் அவற்றில் அழுந்தாது காண்பன். இவ்வுபகாரம் முதல்வனால் எல்லாவுயிர்களுக்கும் பிறப்பு, வீடு என்னும் இருநிலைகளிலும் எஞ்ஞான்றும் செய்யப்படுகின்றது. பிறப்பு நிலையில் உயிர்கள் அசத்தாகிய உலகப் பொருள்களைத் தம் அறிவிச்சை செயல்களால் பற்றி விடயித்து

இன்பத்துன்ப மயக்கம் என்னும் மூவகை வேதனைப்படும். வீட்டு-நிலையில் முதல்வனையே தம் அறிவு இச்சை செயல்களுக்கு விடய-மாகப்பற்றி அழுந்திப் பேரின்பம் துய்க்கும். தாய்ப்பால் அருந்தும் குழவிக்குத் தாய் அதனை எடுத்து அணைத்துத் தன்னிடம் சுரக்கும்பாலை உண்ணக் கொடுத்து உபகரிப்பது போலவே, வீட்டு நிலையில் முதல்வன் உயிர்களுக்கு உபகரிக்கின்றான். இக்கருத்தை மாணிக்கவாசகர் "தாயாய் முலையைத் தருவானே" என அருளிச் செய்துள்ளார்.

இவ்வாறு பிறப்பு வீடு இரண்டினும் முதல்வன் செய்யும் உபகாரத்தைச் சிவஞானத்தாற் சிவனைக்காணும் சிவஞானிகள் முன்சூத்திரங்களாற் கூறியபடி கேட்டுச் சிந்தித்துச் தெளிந்து, உணர்வர். அவ்வாறு முதல்வன் உபகாரத்தை உண்மையாக உணர்ந்த மெய்யுணர்வின் பயனாக அவர்களுக்கு இடையறாப் பேரன்பு கரை-கடந்து எழும்; அந்நிலையில் அவ்வன்பே இன்பமாய்ச் சிவம் வெளிப்பட அதன்கண் அழுந்தி அன்பே சிவமாய் அமர்ந்திருப்பர்.

இதுவே பரமுத்தி நிலையில் ஆன்மா சிவமாந்தன்மைப் பேரா இயற்கை பெற்று வாழும்நிலை. இது சுத்தத்தின்கண் நிகழும் அதீத நிலை எனவும், இன்புறுநிலை எனவும் கூறப்படும்.

### பன்னிரண்டாம் சூத்திரம்

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே"-என்பது சூத்திரம்.

இன்புறு நிலையைத் தலைப்பட்ட பெருமக்கள், முதல்வன் திருவருளால் உந்தப்பட்டும், அன்றிப் பிராரத்தவாதனை காரண-மாகவும், சிற்சிலசமயங்களில் அதீதநிலையின் நீங்கி உலக முகப்படுவர். அந்நிலையில் மலவாதனை காரணமாக "யான்எனது" என்னும் செருக்குத் தம் உணர்வில் தோன்றாதபடி ஞான நீரால் வாதனை மாசு கழுவுவர்; தம்மொடு தம்மொடு ஒத்த மெய்யன்பரொடு கூடிநிற்பர்; திருக்கோயில்ளில் உள்ள திருவுருவங்களையும் திரு-வேடத்தையும் சிவன் எனவே தெளியக்கண்டு தொழாநிற்பர்.

இச்சூத்திரம் அணைந்தோர் தன்மை எனப்படும் சீவன் முத்தர் இயல்பு கூறுவது. இவ்வியல்பைத் திருஞானசம்பந்தர் முதலிய பெரு-மக்கள் வாழ்க்கை வரலாறுகளில் காணலாம்.



